ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸுதர்சனர் பதில்



## மதங்கள், சாஸ்திரங்கள், இலக்கியங்களில் வாசகர்களின் 101 ஐயவினாக்களுக்கு ஆசிரியரின் விளக்கங்கள்


ஆசிரியர்:—

**ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**
அட்வகேட், M.A.B.L.,
ஆசிரியர்: 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்',
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620017.



ஸ்ரீ. ரா. ஸ்ரீ. ஸி. ஸ்ரீநிவாஸய்யங்கார்
தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றது.





மூன்றாம் சதகம் விலை [1—4—80] தபால்
Rs 4-50 Rs 0-75

**முக்கிய குறிப்பு :-** சமரசம்பேசும் பத்திரிகைகளில் வெளி வந்த கட்டுரைகளிலும், வாரியார் காமகோடி பீடாதிபதிகள் போன் றோரின் பேச்சுக்களிலும் உள்ள விஷ்ணு வைஷ்ணவத்வேஷப்ரசாரங் களையும், பொருந்தாமைகளையும் கீழுள்ள கேள்விகளின் பதில்களில் விளக்கியுள்ளோம். அப்பத்திரிகைகளுக்கும் பேச்சாளர்களுக்கும் இவ் விதழ் அனுப்பப்படுகிறது. நடுநிலேநின்று விமர்சிக்கும் நேர்மையை அவர்களிடம் நாம் எதிர்பார்க்கவில்லை. மேலும்மேலும் இத்தகைய விஷயங்களைப் பேசாமலும் அச்சிடாமலுமிருந்தால் அவர்களின் மதிப் பிற்கும், மதங்களிடையே உண்மை ஒற்றுமையை வளர்ப்பதன்மூலம் நாட்டிற்கும் நலமென உணர்த்தி நிற்கின்றோம். ஸுதர்சனர்.

---

[பத்திரிகை, உபந்யாஸகர் பெயரும், கேள்விகளின் எண்ணும் கீழே தரப்படுகின்றன.]

1. கல்கி — 7, 16, 24, 29, 66, 75, 97, 98.
2. தினமணி — 8, 20, 30, 48, 57, 77, 85, 88, 89
3. தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை — 11.
4. கலைமகள் — 12, 17, 18, 23, 32, 33, 34, 35, 53, 65, 69, 73, 74, 90.
5. அமுதசுரபி — 13, 19, 70.
6. குமுதம் — 14, 31, 40.
7. மதுரை காமராஜ் பல்கலைக்கழகம் — 15.
8. விகடன் — 20, 26.
9. ஹிந்து — 20, 31.
10. வானொலி — 26, 27, 63, 67, 85.
11. ஸ்ரீராமாநுஜவாணி — 36, 64.
12. நீடாமங்கலம் கிருஷ்ணமூர்த்தி பாகவதர் — 37, 100
13. மஞ்சரி — 38.
14. வாரியார் — 39, 54, 68.
15. பாலஜோதிடம் — 46, 47.
16. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் — 49.
17. இண்டியன் எக்ஸ்பிரஸ் — 50.
18 சாவி — 68.
19. திரு ர. சு. நல்லபெருமாள் — 17, 33, 34, 69, 71, 90.
20. ஸப்தகிரி — 78.
21. மங்கை — 86.
22. பழமுதிர்சோலை — 22, 99.
23. காமகோடி பீடாதிபதிகள் — 12, 16, 19, 23, 53, 65, 66, 75, 97, 98
24. சிருங்கேரி பீடாதிபதிகள் — 85, 86.
25. துக்ளக் — 7.
26. தொழிலதிபர் திரு நா. மகாலிங்கம் — 29, 30, 70.
27. அக்நிஹோத்ரம் ராமாநுஜதாத்தாச்சாரியார் — 31.
28. கவிஞர் கண்ணதாசன் — 14



ஸ்ரீ:

# ஸுதர்சனர்பதில் - மூன்ருவது சதகம்

## ஸுதர்சனரின் முன்னுரை

நம் நாடு மதச்சார்பற்ற நாடு என்று பெயர்பெற்றிருக்கிறது. 'மதச்சார்பற்றது' என்ருல் 'மதமற்றது' என்று பொருளல்ல. அரசியலார் எல்லா மதங்களையும் சமமாக பாவித்து மதங்களிடையே நடுநிலைதவருமல் ஆட்சி நடத்தும் நாடு என்பதே இதற்குப்பொருள். ஆனுல் நடைமுறையில் இப்படி நடப்பதில்லை. அரசியல்வாதிகள் எந்த மதத்தினரை அல்லது மதப்பிரிவினரை ஆதரித்தால் வோட்டு அதிகம் கிடைக்குமோ அவர்களையே ஆதரிப்பது என்னும் கொள்கையைக் கொண்டிருக்கிருர்கள். இக்கொள்கை பலவிதங்களில் கிறிஸ்தவ இஸ்லாம் மதங்களுக்குச் சாதகமாகவும், 'இந்து'மதத்திற்கு பாதகமாகவும் முடிகிறது. கிறிஸ்தவ இஸ்லாம் மதநிறுவனங்கள் அரசியல் தலையீடு இல்லாமல் செழிப்பதும், 'இந்து' மதநிறுவனங்கள் அரசியல் தலையீட்டால் நலிவடைவதும் இதற்குச்சான்று. 'இந்து'மதத்தை எடுத்துகொண்டால், அரசியலிலும் அரசியல் சார்புள்ள வானெலி, பல்கலைக்கழகம் முதலான மற்ற பல துறைகளிலும், சைவர்களும் சைவர்களாகிவிட்ட அத்வைதிகளும் ஊடுருவிநின்று, போலிச்சமரசம் பேசிக்கொண்டு, சிறுபான்மையினரான வைணவர்களுக்கும் வைணவத்துக்கும் பல விதமான இன்னல்களை விளைக்கின்றனர். இத்தொகுப்பில் 15, 26, 27, 68, 67, 85 கேள்விபதில்களைக் காணலாம். இது ஒருபுறமிருக்க, மற்ருெருபுறம் காமகோடி பீடாதிபதிகளும், அவர்களுக்கு வசப்பட்டுநிற்கும்—லக்ஷக்கணக்கான ரஸிகர்களை உடைய பல தினசரி வார மாதப் பத்திரிகைகள் திரைப்படங்களின் நிர்வாகிகளும் வைஷ்ணவத்தை இழிவுபடுத்துவதையும் திரித்துக்கூறுவதையுமே தங்கள் குறிக்கோளாகக்கொண்டு செயல்பட்டுவருகின்றனர்.

இந்த அக்ரமத்தை எதிர்த்துக் குரல்கொடுக்கவே ஸுதர்சனர் பதில் தொடங்கப்பெற்றது. தங்கள் ஆள்பலத்தாலே நம் எதிர்ப்புக்குரலை அலட்சியப்படுத்தி, இந்த அக்ரமத்தை மேலும் மேலும் முற்கூறியவர்கள் வளர்த்து வருகின்றனர். நமது எதிர்ப்புக்குரலை அடக்கிவிடவேண்டும் என்னும் எண்ணத்தால் குமுதம் பத்திரிகை ஸுதர்சனர் பதில்களிலிருந்து சிலவற்றை வெளியிட்டு, கண்ணதாசனையும் நம்மையும் மோதவிட்டது. விஷயம் எதுவும் இல்லாமையால், கண்ணதாசன்

நம்மைக் குறித்து வசவுமாரி பொழிந்தார். குலசேகராழ்வாரையே தம் கதையில் சைவராகத் திட்டிய இவரிடமும், இவரை ஆதரிக்கும் குமுதம்போன்ற பத்திரிகைகளிடமும் நியாயத்தை எப்படி எதிர்பார்ப்பது? கடைசியில் குமுதம் பத்திரிகை அக்நிஹோத்ரம் ராமாநுஜதாத்தாசார்யரைக்கொண்டு சில வேத, உபநிஷத்₃வாக்யங்களைப்பற்றி அண்டப்புளுகுகளை அவிழ்த்துவிட்டு, "அக்நிஹோத்ரம் தாத்தாசார்யர் எழுதியது போன்ற வேத₃வாக்யமோ, உபநிஷத்₃வாக்யமோ கிடையாது" என்று நம்மோடு தமது பேட்டிகளில் அஹோபி₃லமட₂ாதி, பதியான ஸ்ரீமத₃முகியசிங்கரும், ஸ்ரீமத₃ாண்டவன்ஸ்வாமியும் உணர்த்தியபின்பும் அதை வெளியிட மனமில்லாமல் வாய்மூடி மௌனியாய் இன்றளவும் நிற்கிறது. இது குமுதம் பத்திரிகையின் 'நேர்மை'! இத்தொகுப்பில் 14, 31 பதில்களில் இதைக் காணலாம். கலைமகள் பத்திரிகை காமகோடி பீடாதி, பதி வெளியிடும் கடுமையான விஷ்ணுதூ₃ஷணங்களை வெளியிடுவதோடு நில்லாமல், நம்மாழ்வார், திருமழிசை ஆழ்வார், பெரியாழ்வார் ஆகிய ஆழ்வார்களைப்பற்றியும் பலவிதமான பொய்க்கதைகளைப் பரப்பி, அவர்களது கொள்கைகளைத் திரித்துக் கூறிவருகிறது. தினமணிப் பத்திரிகை திருவாய்மொழியின் விளக்கமாக 108கட்டுரைகளை வெளியிட்டு, அதன் பொருளைக் குழப்பியிருக்கிறது.

வானொலி முதலான அரசியல்துறை நிறுவனங்களும், பொதுஜனப்பத்திரிகைகளும், சைவாத்₃வைத உபந்யாஸகர்களும் இத்தகைய விஷ்ணு வைஷ்ணவத்₃வேஷப்ரசாரங்களில் ஈடுபடாமலிருந்தால் ஸுத₃ர்சனர் பதில் நான்காவது சதகம் முதல் நாமும் கசப்பான க₂ண்ட₃னங்களைச் செய்யாமலே இருப்போம். 'சிறுபான்மையினரான வைஷ்ணவர்களை என்ன செய்தாலும் கேள்வி இல்லை' என்னும் ஆணவத்தாலே விஷ்ணு வைஷ்ணவ த்₃வேஷப்ரசாரத்தைத் தொடர்ந்து நடத்திக்கொண்டு, 'திராவகத்தில் தோய்த்து எழுதுகிறார்' என்று நம்மைக் குறைகூறுவதாலோ, போலிச்சமரசம் பேசுவதாலோ நற்பயன் எதுவும் விளையாது; மத சகிப்புத்தன்மையின்மையே வளரும். இவ்வுண்மையை உணரும் நல்லறிவை ஆதி₃பரம்பொருள் அனைவர்க்கும் அருளுவானாக.

25—3—80. ஸுத₃ர்சனர்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸுதர்சனர் பதில்—மூன்றாவது சதகம்

N வரதராஜன், பெங்களூர்-3. (1 to 5 கேள்விகள்)

1. உருவ வழிபாடு உண்டு என்று கூறி, திவ்ய மங்கள விக்ரஹத்தை வைத்து வழிபாடு செய்யும் ஸ்ரீவிசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திலே, 'உருவ வழிபாடு கிடையாது' என்று கூறும் அத்வைத ஸித்தாந்தத்திற்கே உரியதான உருவமற்ற ஸ்ரீஸாளக்ராமப் பெருமாளை ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆராதனை செய்யலாமா? என்பதை விளக்க வேண்டுகிறேன்.

ஸாளக்ராமம் உருவம் உள்ளதுதானே. கைகால்கள் முதலானவை இருந்தால்தான் உருவம் என்று கொண்டால், மரம் முதலானவை உருவமற்றவை என்று சொல்ல வேண்டி வருமே? இப்படிச் சொல்ல முடியாதே. அத்வைதிகள் ப்ரஹ்மத்தைக் கண்ணால் காணத்தக்க எந்த உருவமும் அற்றது என்றே கூறுகிறார்கள். ஆகையால் ஸ்ரீஸாளக்ராம ஆராதனம் விசிஷ்டாத்வைத மதத்திற்குப் பொருந்துமே யொழிய அத்வைத மதத்திற்குப் பொருந்தாது.

2. 'எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதுதான் எங்கள் ஸ்வரூபம்' என்று கூறிக்கொள்ளும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ''நல்ல மனைவியைக்கொடு, நல்ல மக்களைக்கொடு, நல்ல செல்வத்தைக் கொடு, நல்ல சரீரத்தைக்கொடு, நீண்ட ஆயுஸ்ஸைக்கொடு'' என்றெல்லாம் பிரார்த்திக்கலாமா? இது ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உகந்த ஸ்வரூபமா? என்பதை விளக்க வேண்டுகிறேன். மேலும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மனைவி, மக்கள், சொத்து இவை போன்றவை எதற்கு என்பதையும் விளக்கவேண்டுகிறேன்.

எம்பெருமானுக்கும், அவனடியார்களுக்கும் ஆராதனம் செய்வதற்காக ஸ்ரீவைஷ்ணவர்களும் நல்ல மனைவி, மக்கள், செல்வம், சரீரம், நீண்ட ஆயுள் ஆகியவற்றை எம்பெருமானிடம் விரும்பலாம். தமக்காக என்று விரும்புவது கூடாது. ''நமக்கு எது நன்மையோ அதை எம்பெருமானே அருளுவான். ஆகையால் அதை நாம் பிரார்த்திக்க வேண்டியதில்லை., அவன் கொடுப்பதைக்கொண்டு அவனுக்கும் அவனடியார்களுக்கும்

கைங்கர்யம் செய்வோம்'' என்னும் மனநிலையே ஸ்ரீவைஷ்ண வர்களுக்கு மிகச்சிறந்தது. அவ்வளவு பரிபக்குவம் இல்லாத வர்கள் ப₄க₃வத்₃ பா₄க₃வத கைங்கர்யத்திற்காக மனைவி, மக்கள் முதலானவர்களை, அவனைப் பிரார்த்தி₂த்துப் பெற்று, அவன் அளித்ததைக் கொண்டு திருப்தியுடன், இயன்ற வரை ப₄க₃வத்₃ பா₄க₃வத கைங்கர்யங்களைச் செய்துகொண்டு வாழ்வ தில் தவறில்லை.

*3. ''என் கடமை அடிமை செய்வதே'' என்று கொண்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் தங்களுக்கு நோய் வந்தால், 'எம்பெருமான் திருவடி அடைவதே நம் ஸ்வரூபம்' என்று இருக்காமல், ஏன் அந்த நோயைப் போக்கிக்கொள்ள முயற்சி செய்யவேண்டும்? எதற்காக உணவு, மருந்து உண்டு உடலுக்குப் பூண்கட்ட வேண்டும் ?*

இரண்டாவது கேள்வியின் பதிலில் உள்ளபடி, ப₄க₃வத்₃ பா₄க₃வத கைங்கர்யங்கள் செய்வதற்காக உணவு, மருந்து முதலானவற்றை உண்டு, எம்பெருமான் ப₄க₃வத்₃ பா₄க₃வத கைங்கர்யத்திற்காக அளித்த ஶரீரத்தை நம்மால் இயன்ற வரை பாதுகாத்துக் கொள்வதில் தவறில்லை. திருக்கண்ணமங்கை யாண்டான் போன்ற நம் பூர்வாசார்யர்களில் சிலர் இத்தகைய முயற்சிகளையும் கைவிட்டு, எம்பெருமான் கோயிலிலேயே அடைக்கலம் புகுந்து வாழ்ந்தார்கள். எல்லோருக்கும் அத்தகைய பரிபக்குவம் இருக்க முடியாது.

*4. நாம் செய்த கர்ம வினையின் காரணத்தினாலே தானே நமக்கு நன்மை தீமைகள் ஏற்படுகின்றன. அப்படியிருக்க, ஸ்ரீவைஷ்ணவர்கள் '' எல்லாம் எம்பெருமான் திருவுள்ளம் '' என்று கூறுவது பொருந்துமா ?*

''நாம் செய்த கர்மவினையின்படி ப₂லனளிப்பதும் எம்பெரு மான் திருவுள்ளம். ஆகையால், அதனால் ஏற்படும் துன்பங் களைக் கண்டு எம்பெருமானை நொந்துகொள்ளக் கூடாது'' என்னும் மனோபா₄வம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இருக்கவேண் டியது. ''கர்மவினையின் காரணமாக ஏற்படும் நன்மை, தீமை கள் ஶரீரத்திற்கேயொழிய ஆத்மாவுக்கு அல்ல. ஆத்மாவுக்கு

வரும் நன்மைகளெல்லாம் எம்பெருமானுடைய கருணையாலேயே ஏற்படுகின்றன'' என்னும் கருத்திலேயும் 'எல்லாம் எம்பெருமானாலேயே' என்று கூறலாம். ''ஆத்மாவுக்கு வரும் தீமைகள்—அவன் அநாதி₃காலமாக நமக்கு அளித்திருக்கும் ஸ்வாதந்த்ர்யத்தைக்கொண்டு நமக்கு நாமே விளைத்துக்கொள்ளுபவை. ஆத்மாவுக்கு வரும் நன்மைகள்—தனது நிர்ஹேதுக க்ருபையாலே எம்பெருமான் அநாதி₃காலமாகச் செய்து வரும் முயற்சிகளால் ஏற்படுபவை'' என்பது ஸ்ரீவைஷ்ணவ ஸித்₃தா₄ந்தத்தின் ஸாரம்.

*5. இங்கு திருப்பாவை உபன்யாஸம் ஸாதித்த ஒரு ஸ்வாமி ''ஸ்ரீமந் நாராயணனுக்குத்தான் திருத்துழாய்கொண்டு அர்ச்சனை செய்யலாம். தாயாருக்கும், ஆழ்வார் ஆசார்யர்களுக்கும் திருமுடியில் தான் சாத்தலாம். திருவடிகளில் சமர்ப்பிக்கக்கூடாது. திருத்துழாய்கொண்டு அர்ச்சனை செய்யக் கூடாது'' என்று ஸாதித்தார். இது சரியா?*

''நித்யாபி₄வாஞ்சி₂த பரஸ்பர நீசபா₄வை:'' என்று கூரத்தாழ்வான் அருளிச்செய்தபடியே, நித்ய முக்தர்கள் ஒருவர்க்கொருவர் நைச்யத்தோடு பரமபத₃த்தில் எழுந்தருளியிருக்கிறார்கள். 'சூழ்விசும்பணிமுகில்' திருவாய்மொழியில், நித்யஸூரிகள், அப்போதே முக்தியடைந்த ஜீவனுக்குப் பாதங்கள் கழுவுவது முதலான கைங்கர்யங்கள் செய்வதாக ஆழ்வார் அருளிச்செய்கிறார். ஆகையால் பரமபத₃த்தில் திருத்துழாய்க்கு அபி₄மானியான நித்யஸூரி, எம்பெருமான் திருவடியிலிருக்க ஆசைப்படுவதுபோலே, அங்கிருக்கும் ஆழ்வார்கள் முதலான மஹாத்மாக்களின் திருவடிகளிலும் இருக்க ஆசைப்படுவாரேயொழிய மறுக்கமாட்டார். எம்பெருமானும் அதை அனுமதிப்பானேயொழியத் தடைசெய்ய மாட்டான். உப₄யவிபூ₄தி ஶேஷித்வமுடைய பெரிய பிராட்டியார் திருவடிகளில் அந்த நித்யஸூரி கைங்கர்யம் செய்தாலொழிய அவருக்கு ஶேஷத்வமே ஸித்₃தி₄க்காது. ஆகையால். அந்த நித்யஸூரியின் அம்ஶமான இங்குள்ள திருத்துழாயைத் தாயார், ஆழ்வார், ஆசார்யர்கள் திருவடிகளில் ஸமர்ப்பிப்பதில் எக்குறையுமில்லை என்றே கொள்ளவேண்டும்.

K. வாஸுதே₃வன், செங்கல்பட்டு.

*6. கீ₃தையில் "சுகம் துக்கம் முதலான உணர்வுகள் இந்த உடலுக்குத்தானேயொழிய, ஆத்மாவுக்கல்ல" என்று கூறப் பட்டுள்ளது. ஆனால், ஆத்மா இருக்கும் வரையில்தான் இவ் வுடல் ஸுக₂ம், து₃:க்க₂ம் முதலானவற்றை உணர்கிறது. ஆத்மா பிரிந்த பின்பு உணர்வதில்லை. இதிலிருந்து ஆத்மாவே இன்பதுன்பங்கள் முதலானவற்றை அநுப₄விக்கிறது என் றல்லவோ ஆகிறது; ஆகையால், உடலுக்குத்தான் இன்ப துன்பங்கள் என்பது எப்படிப் பொருந்தும்? இத்தகைய பல சந்தேகங்கள் எங்களைப் போன்றவர்களுக்கு எழுகின்றன. அவற்றை விளக்கி ஆங்கிலத்தில் கீ₃தைக்கு சுருக்கமான உரை யொன்று வெளியிடுவீர்களா?*

ஆத்மாவானது இயற்கையில் ஆநந்த₃மயமானது; ஶுத்₃த₄ மான ஆத்மாவுக்கு எவ்வகைத் துன்பமும் வர இடமில்லை. அதேபோல் ஶரீரம் இயற்கையில் எதையும் அறியமுடியாத ஜட₃ப்பொருள். அதற்கு இன்பம், துன்பம் முதலான எவ் வித₄ உணர்வையும் அநுப₄விக்க ஶக்தியேயில்லை. இப்படி யிருக்கும் இவ்வாத்மாவையும், ஶரீரத்தையும் எம்பெருமான் ஒன்று சேர்த்து, ஶரீரத்திற்கு இழைக்கப்படும் தீங்குகளாலே துன்பங்களையும், உபசாரங்களாலே இன்பங்களையும், மற்றும் காமம், கோபம், லோப₄ம், மோஹம் (மயக்கம்), மத₃ம், மாத்ஸர்யம் முதலான உணர்வுகளையும் ஆத்மா அநுப₄விக்கும் படி அறிவுடைய ப₃த்₃த₄ஜீவர்களை அநாதி₃காலமாக ஆக்கி வைத்திருக்கிறான். ஆகையால், "இவ்வுணர்வுகளெல்லாம் ஆத்மா வுக்கு ஶரீரஸம்ப₃ந்த₄த்தால் செயற்கையாய் வருகின்றனவே யொழிய இயற்கையானவையல்ல; ஆத்மா இயற்கையில் ஆநந்த₃மயமானவன்" என்னும் கருத்திலேயே ப்ராக்ருதமான இன்பம் துன்பம் முதலானவை உடலுக்கேயொழிய ஆத்மா வுக்கல்ல என்று கீ₃தையில் சொல்லப்படுகிறது. இத்தகைய ஆயிரக்கணக்கான விஷயங்கள் — வடமொழியிலுள்ள எம் பெருமானாரின் பா₄ஷ்யத்தையும், அதற்கு ஸ்ரீ வேதா₃ந்த தே₃ஶிகர் அருளிய உரையான தாத்பர்யசந்த்₃ரிகையையும் அடியொற்றி நம்மால் மிக விரிவாக கீ₃தா வ்யாக்₂யானத்தில் எளிய தமிழ்நடையில் விளக்கப்பட்டு வருகின்றன. பொறுமை

யுடன் எம்பெருமானையே ஆசார்யராக உறுதிகொண்டு இதைப் பலமுறை படிப்பதாலும், அல்லது நல்ல வித்₃வான்க ளிடம் கீ₃தாபா₄ஷ்யத்தைக் கற்பதாலுந்தான் இத்தகைய ஸந்தே₃ஹங்கள் நீங்கும். ஆங்கிலத்தில் சுருக்கமான உரை யெழுதுவதால் ஐயங்கள் நீங்கா. தமிழ் உரையை நிறை வடையச் செய்வதற்கே நமக்கு இன்னும் பல வருஷங்க ளாகும். மற்றும் பற்பல அரும்பணிகளை நாம் தமிழ்கூறும் நல்லுலகத்திற்குச் செய்யவேண்டியுள்ளது. ஆகையால் ஆங்கி லத்தில், கீ₃தைக்கோ மற்ற எந்த நூலுக்குமோ உரையெழுத நமக்கு அவகாசமுமில்லை, ருசியுமில்லை. கீ₃தைக்கு ஆங்கிலத்தில் பேராசிரியர் M. ரங்காசாரியர் இயற்றிய உரையைப்பெற்றுப் படித்துப் பயன்பெறலாம். இந்நூல் திருவல்லிக்கேணியில் வாழும் பேராசிரியரின் குமாரர் திரு. M. R. ஸம்பத் குமாரன் அவர்களிடம் கிடைக்கும்.

V. ஸ்ரீநிவாஸன், திருச்சி-17. (7, 8 கேள்விகள்)

*7. 1—2—79 துக்ளக்கில் 'விரசம்பற்றி ஒரு ரஸமான சர்ச்சை' என்னும் தலைப்பில் கல்கி ஆசிரியர் கி. ராஜேந்திரன் அவர்களுக்கும், பிரபல நாவலாசிரியர் சாண்டில்யன் அவர்களுக்கும் நடந்த கடிதப் போக்குவரத்துக்களில் திரு. சாண்டில்யன் அவர்கள் ''தற்சமயம் கல்கியில் வெளிவரும் 'ராஜ கு₃ர்ஜரி' என்னும் தொடர்கதையொன்றில். அய்யங்கார்கள் போடும் 'பட்டைநாமங்கள்' பரிகசிக்கப்படுகின்றன. இந்து மதத்தையும், ஆசாரத்தையும் — குறிப்பாக அய்யங்கார் ஆசா ரத்தையும். நாமங்களேயும் கேவலப்படுத்தும் இடங்கள் பல இருக்கின்றன.'' என்று தொடங்கி எழுதியிருப்பதையும் பாரதப் பண்பாட்டுக்கு முரணுக இருட்டில் மனைவிகளை மாற்றிக்கொள்வது போன்ற கதைகள் கல்கியில் வருவதையும் சுட்டிக்காட்டியிருப்ப தைப் பார்த்தீர்களா?*

சமரஸம் பேசும் கல்கி போன்ற பத்திரிகைகளில் வைஷ்ணவ த்₃வேஷம் பல வருஷங்களாகத் திட்டமிட்டுப் பரப்பப்பட்டு வருவதை நாம் நீண்டநாளாக எடுத்துக்காட்டி வருகிறோம். கல்கி (ரா. கிருஷ்ணமூர்த்தி) இருந்த காலத்திலேயே அவர் எழுதிய தொடர்கதையொன்றில் 'ஆழ்வார்க்கு அடியான்' என்னும் பாத்திரத்தைப் படைத்து, அதன்மூலம் அவர்

வைஷ்ணவத்தைச் சரியாகப் புரிந்துகொள்ளாமல் பரிஹஸித்திருந்தார். அவர் காலத்திற்குப் பின்பு விஷ்ணுவையும் வைஷ்ணவத்தையும் இழிவு செய்து, திரித்துக் கூறும் கதைகளும், கட்டுரைகளும் கல்கியில் ஏராளமாக வெளிவந்து அவ்வப்போது நமது கண்டனங்களைப் பெற்றன. பழைய ஸுதர்ஶனம் இதழ்களைப் பார்த்தால் இது விளங்கும். ஓர் உதாரணம்— சில வருஷங்களுக்குமுன் கல்கியில் கண்ணதாசன் எழுதிவந்த 'சேரமான்காதலி' என்னும் தொடர்கதையில் பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான குலசேகராழ்வார் விபூதி பூசும் ஶைவராகச் சித்திரிக்கப் பெற்றிருந்தார். இதை நாமும், மற்றும் பல வைஷ்ணவர்களும் ஆட்சேபித்த பின்பும் அக்கதை அம்முறையிலேயே தொடர்ந்து எழுதப்பட்டது. ஶிவலோகம் வைகுண்டத்திற்கும் மேற்பட்டது என்று குலசேகராழ்வார் கூறுவதாகவே அதில் எழுதப்பட்டது. திரு. சாண்டில்யனும் இப்படிக் கண்ணதாசன் எழுதுவதற்கு எந்த ஆதாரமும் இல்லை என்று நமக்கு ஒரு கடிதம் அந்த சமயத்தில் எழுதியிருந்தார். மேலும் அக்கதையில், "பெண்களுக்கு விவாஹம் ஆகும் முன்னமே நம்பூதிரிகளோடு சாந்தி முஹூர்த்தம் செய்துவிடும் பழக்கம் குலசேகராழ்வார் காலத்திலேயே உண்டு" என்னும் பரமவிரசமான அண்டப்புளுகும் எழுதப்பட்டிருந்தது. போலிச்சமரசம் பேசிக்கொண்டு காமகோடி சங்கராசார்யரின் படங்களையும், உபதேஶங்களையும் விடாமல் அச்சிட்டு வரும் கல்கி போன்ற பத்திரிகைகள் மத ஒற்றுமையையும், பாரதப் பண்பாட்டையும் இத்தகைய செயல்களின்மூலம் தகர்த்து வருகிறார்களேயொழிய, பாதுகாக்கப் பாடுபடுவதில்லை என்பதையும் நடுநிலைநிற்கும் நல்லோர்கள் என்றும் அறிவர். திரு. சாண்டில்யன் இதை எடுத்துக்காட்டியதற்கு அவருக்கு ஆஸ்திக உலகம் நன்றிகூறக் கடமைப்பட்டுள்ளது.

*8. ஜனவரி 29-தேதியிட்ட தினமணியில் 'சமயம் கடந்த பரம்பொருளைப் பாடியவன் கம்பன்' என்னும் தலைப்பிலும், பிப்ரவரி 11-தேதியிட்ட தினமணியில் 'தஞ்சைக் கம்பன் கழக மூன்றாம் ஆண்டு விழா' எனும் தலைப்பிலும் வெளிவந்துள்ள செய்திகளில், நீதிபதி திரு மு. மு. இஸ்மாயில் அவர்கள் 'கம்பன் வைஷ்ணவனல்லன்' என்று பேசியிருப்பதை ஆராயவேண்டுகிறேன்.*

இவ்விஷயத்தை இன்று நாம் புதிதாக ஆராயவேண்டிய அவசியமில்லை. நாட்டிலுள்ள பெரும்பான்மையினரான சைவர்களையும், சமரசவாதிகளையும் திருப்தி செய்வதற்காக நம் நாட்டிலுள்ள பத்திரிகைகளும், ராஜாஜி போன்ற பொறுப்புள்ள அரசியல் வாதிகளும் ஆழ்வார்களையும், கம்பனையும் நீண்ட நாளாகச் சமரசவாதிகளாகச் சித்திரிக்கப் பெருமுயற்சி செய்து வருகிறார்கள். இம்முயற்சி ஆழ்வார்களுடையவும், கம்பனுடையவும் நூற்றுக்கணக்கான பாடல்களுக்கு முரணானது என்று அவ்வப்போது எடுத்துக்காட்டி, அவர்கள் பதிலளிக்க முடியாதபடி கட்டுரைகள் எழுதிவருகிறோம் நாம். இம்முறையில் அண்ணாமலை சர்வகலாசாலையில் கம்பராமாயணத்திலுள்ள பல பாடல்களின் பாடங்களையே மாற்றி ஒரு கம்பராமாயணப் பதிப்பே வெளியிடப்பட்டது. அந்தப் பதிப்பைக்கொண்டே பாடத்திருத்தங்கள் தவறானவை என்று நிலைநாட்டி, கம்பன் வைஷ்ணவன் என்பதை அசைக்கமுடியாதபடி நிலைநிறுத்தி, 'கம்பனின் சமயம்' என்னும் நூலை வெளியிட்டு ஒரு பிரதியை அண்ணாமலை சர்வகலாசாலைக்கும் அனுப்பினோம். மேலும் பல பிரதிகளைச் சர்வகலாசாலையினர் விலைக்கு வாங்கிக்கொண்டனர். இன்றளவும் இந்நூலுக்கு யாதொரு பதிலும் வெளியிடப்படவில்லை. நீதிபதி திரு. மு. மு. இஸ்மாயில் அவர்களுக்கு இன்றே நம் 'கம்பனின் சமயம்' முதல்பகுதியின் ஒரு பிரதியை அனுப்பி, அதில் 'கம்பன் பரம வைஷ்ணவனே' என்று நாம் நிலைநாட்டியிருப்பதற்கு முடியுமானால் மறுப்புரைத்து 'கம்பன் வைஷ்ணவனல்லன்' என்னும் தம் கொள்கையை நிரூபிக்கும்படி கேட்டுக் கடிதமும் எழுதியிருக்கிறோம். அவரிடமிருந்து பதில் வந்தால் ஆராய்வோம். இன்று நாட்டிலுள்ள வைஷ்ணவ விரோதச் சூழ்நிலையில் 'கம்பன் பரம வைஷ்ணவனே' எனும் உண்மையை ஆங்காங்கு விளக்கி, திரு. சாண்டில்யன் அவர்கள் 'தினமணி கதிர்' பத்திரிகையில் கம்பராமாயணக் கட்டுரைகளை எழுதிவருவது மிகவும் பாராட்டிற்குரியது.

தென்திருப்பேரை K. M. ராமாநுஜய்யங்கார் ஸ்வாமி,
திருவல்லிக்கேணி (9. 10 கேள்விகள்)

9. *அருளிச்செயல் ரஹஸ்யத்தில், சரமஶ்லோக ப்ரகரணத்தில் ''பரித்யஜ்ய'' என்னும் பதத்தின் பொருள் நாயனாரால் விவரிக்கப்பட்டுள்ளது (பக்கம் 65, 66). அதில் தெளிவுபெறுவிக்க*

*வேண்டிய பாரகம் "நாண் தழும்பு வால் தீவிளையாத விடவாயும் வல்வாயும் ஏறி. பரலோகங்களிலே சென்று படைத்துணை செய்து அரிய தபஸ்ஸுக்களைச்செய்து, வெருட்டுவார் சபையிலே வில்லிட்டடித்து ஊர்வசியை முறைகூறுகிறவன் கர்மஜ்ஞானங்களில் இழியமாட்டாமையன்றே கலங்குகிறது" என்னும் அளவானது. இதை விளக்கப் பிரார்த்திக்கிறேன்.*

"சரமஶ்லோகம் கேட்பதற்குமுன் அர்ஜுனனுக்கு ஏற்பட்ட ஶோகம் 'உபாயாந்தரங்களை அநுஷ்டிக்க ஜ்ஞாந ஶக்திகள் இல்லையே' என்னும் நினைவால் ஏற்பட்டதன்று; 'அத்யந்தபரதந்த்ரமான ஆத்மாவின் ஸ்வரூபத்திற்கு தன் முயற்சியான இவ்வுபாயாந்தரங்களை அநுஷ்டிப்பது முரணாயிருக்கிறதே' என்னும் நினைவால் ஏற்பட்டதேயாகும்" என்று விளக்குவதற்காக, அர்ஜுனனுடைய ஜ்ஞாநஶக்திகளை விளக்கும் சரித்திரங்களை இவ்வாக்யத்தில் ஒரு கோவையாகக் காட்டுகிறார் நாயனார். இதில் 'நாண்தழும்பு' என்னும் பதம்— அர்ஜுனன் ஸவ்யஸாசியாகையாலே இருகைகளாலும் அம்பு விடும் வீரனாய், இருகைகளிலும் நாண்தழும்பை உடையவன் என்னும் செய்தியை உணர்த்துவதாகலாம். 'பரலோகங்களிலே சென்று படைத்துணைசெய்து" என்னும் பகுதி தேவலோகத்திற்குச்சென்று காலகேயநிவாதகவசர்களைவென்றதை உணர்த்துகிறது. 'அரிய தபஸ்ஸுக்களைச் செய்து' என்றது 'சிவனிடம் பாஶுபதாஸ்த்ரம் பெறத் தவம் புரிந்தது' முதலானவற்றைக் காட்டுகிறது. 'வெருட்டுவார் சபையில் வில்லிட்டடித்து' என்றது த்ரௌபதீ ஸ்வயம்வரத்தில் தன்னோடு எதிர்த்து வந்த துர்யோதநாதிகளை வில்லிட்டு அடித்து விரட்டியதைக் காட்டுகிறது. 'ஊர்வசியை முறை கூறுகிறவன்' என்றது, காமத்தாலே தன்னை விரும்பிய ஊர்வசியை 'நீ எனக்குத் தாய் முறையாகவேணும்' என்று கூறித் தடுத்து நிறுத்திய செய்தியைக் காட்டுகிறது. இவற்றைப்போலே 'வால் தீ விளையாத விட வாயும் வல்வாயுமேறி' என்னும் தொடரும் அர்ஜுனனுடைய ஜ்ஞாநஶக்திகளைக் காட்டும் செய்திகளைக் குறிக்கவேணும். 'தீ விளையாத' 'ஏறி' என்னும் பதங்கள் அர்ஜுனனுடைய ரதம் கண்ணனுடைய ஶக்தியாலே அம்புநெருப்புகளால் எரிக்க முடியாமலிருந்தது எனும் செய்தியைக் குறிப்பதாகலாம். மஹாபாரதம் வல்லார்வாய்க் கேட்டு இத்தொடருக்குப் பொருள் உணரவேணும்.

*10. "உண்ணும் நாளில்லை உறக்கமுந்தானில்லை" [பெரிய திருமொழி 8-2-4] என்னும் பாசுர வ்யாக்₂யானத்தில் "அ॑ோகவனத்தில் பிராட்டிக்கு இந்த்₃ரன் அம்ருதம் கொடுத்து உதவினுன் என்று (வால்மீகி) ருஷி சொல்லிவைத்தான்" என்று பெரியவாச்சான்பிள்ளை அருளியிருக்கிருர். இது ஸ்ரீராமாயணத்தில் எங்குள்ளது? என்று முன்பொரு முறை கேட்டிருந்தேன். இதுவரை பதில் இல்லை. கிஷ்கிந்த₄ாகாண்ட₃த்தில் ஸம்பாதி வானர ஸம்வாத₃த்தில் (62-8) இருப்பதை இப்போது தேடிக் கண்டுபிடித்தேன். இவ்விடந்தவிர வேறு இடம் உள்ளதா?*

ஸ்ரீராமாயணத்தில் தேடிக்கண்டுபிடிக்க அவகா॑மின்மையால் அக்கேள்விக்கு பதில் கூறுவதைத் தள்ளிவைத்தேன். தேடிக்கண்டுபிடித்துக் காட்டியதற்கு நன்றி. வேறு இடம் இருப்பதாகத் தெரியவில்லை. எவராவது தெரிவித்தால் வெளியிடுகிறேன். ॑ருதிஸ்ம்ருதிகள் இதிஹாஸபுராணங்கள் ஆயகி கடல்களில் நமக்குத் தெரியாதவையும், தேடி எடுக்க வேண்டியவையுமான இத்தகைய பல நன்முத்துக்கள் உண்டு.

S. ஸௌமியநாராயணன், திருவெள்ளறை.

*11. தமிழ்நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத்துறை* **(Government of Tamilnadu, Department of Archaeology)** *திருவெள்ளறையைப்பற்றி ஒரு புத்தகம் வெளியிட்டிருப்பதாகச் சமீபத்தில் 'ஹிந்து' பத்திரிகை வெளியிட்டிருந்தது. அப்புத்தகம் சரியான முறையில் அமைந்துள்ளதா?*

இப்புத்தகம் 'The Director of Archaeology, 31 South Bank Road, Mandavelli, Madras-28' என்னும் விலாசத்தில் கிடைக்கும். வி பி பி. மூலம் இதன் விலை ரு 9-00. தொ. பொ. ஆ. துறை வெளியீடு எண் 43. இதை எழுதியவர் "வெ. வேதாசலம், M. A., Dip. Epgy. & Arch. அருங்காட்சியகக் காப்பாளர், தொல் பொருள் ஆய்வுத்துறை" என்பவர். இதில் கல்வெட்டுகள், இலக்கியங்கள் முதலான பல ஆதாரங்களைக் கொண்டு, திருவெள்ளறையைப் பற்றிய பல செய்திகள் கொடுக்கப்பட்டுள்ளன. பெருமாள். சிவன் கோவில்கள் பற்றிய பல விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. திருவெள்ளறைக்கும், முத்தரையருக்கும் உள்ள தொடர்பு

களை நிறுவுவதற்கு மிகவும் முயன்றிருக்கும் ஆசிரியர், திருவெள்ளறைக்கும், பூர்வஶிக, ஸ்ரீவைஷ்ணவ ப்ராஹ்மணர்களுக்குமுள்ள தொடர்பைக் காணத் தவறிவிட்டார். நமது வேதஶாஸ்த்ரங்களைப் பற்றியும், வைணவத்தைப் பற்றியும், ஆசிரியர் சரியாக அறியாதவர் என்பது இப்புத்தகத்தில் பல இடங்களில் விளங்குகிறது. பின்வரும் உதாரணங்களைக் காணலாம்.

(1) "நாராயணீயத்தில் கம்சனைக் கொல்வதற்காகவே வாசுதேவன் தோன்றினான் என்று கூறப்படுகின்றதேயன்றி மற்ற அரக்கர்களைப் பற்றிய பேச்சில்லை. அரிவம்சம், வாயு புராணம், பாகவதம் முதலிய நூல்களில் கம்சனையும் மற்ற அரக்கர்களையும் அழிக்கவே வாசுதேவன் தோன்றினான் என்று கூறப்படுகின்றது. ஆகவே இக்காலத்தில்தான் ஆயர்பாடியில் யசோதை பெற்றெடுத்த பூவைப் புதுமலர் வண்ணனும், வாசுதேவனும் ஒன்றுபட்டிருக்கவேண்டும். காளிதாசன் காலத்தில்தான் இக்கண்ணனும் விஷ்ணுவும் ஒன்றுபடுத்தப் பட்டனர் என்றும் உரைப்பர்". (பக்கம் 32)

(2) "இந்திரனுக்குப் பகைவர்கள் இந்தியர்களின் பழந் தெய்வங்களே. வேதகாலத்தில் இந்திரனுக்குப் பகைவனாகக் கிருஷ்ணன் என்பவன் இருந்தான். இந்திரனுக்கும், கிருஷ்ணனுக்குமுள்ள பகையைப் புராணங்கள் பேசுகின்றன. ஒரு வேளை இருக்கு வேதத்தில் இந்திரனால் வெல்லப்பட்ட மூல நிலத்தலைவனாக இக்கிருஷ்ணன் இருந்திருக்கலாம். ஆயினும் பகவத்கீதை எழுதப்பட்ட காலத்தில் கிருஷ்ணன் தெய்வீகப் பெருமைபெற்றுத் திகழ்ந்தான்". (பக்கம் 31)

இவ்விஷயங்கள்—நம்நாட்டின் வேதஶாஸ்த்ரங்களைப்பற்றிச் சரியாக அறியாத வெள்ளைக்காரர்களும், அவர்களுக்கு அடிவருடிகளான நம் நாட்டவர் சிலரும் வலிய ஆதாரங்களுக்கு முரணாக எழுதிய பிதற்றல்களை அடியொற்றியவை. நிற்க; வைணவத்துக்கு (பக்கம் 35ல்) அந்தப்புரச் சித்தாந்தம் என்று பெயருள்ளதாக எழுதுகிறார். இப்பெயர் பூர்வாசார்ய க்₃ரந்த₂ங்களில் எங்கும் வழங்கவில்லை. உய்யக்கொண்டாருக்கு 'புண்டரீகாட்ச பெருமாள்' என்று பெயர் குறிக்கப்பட்டிருக்கிறது. (பக்கம் 36) 'புண்ட₃ரீகாக்ஷர்' என்பதே போதும். பிள்ளானுக்கு 'சிடாம்பி

ஆச்சான்' என்பவரை ஶிஷ்யராகவும், அவருக்கு 'விஷ்ணுசித்தர்' என்ற எங்களாழ்வானை ஶிஷ்யராகவும் காட்டியிருக்கிறது. இது தவறு. "'கிடாம்பி ஆச்சான்' என்பவர் ராமாநுஜருடைய நேர் ஶிஷ்யர். பிள்ளானைக் காட்டிலும் வயதில் பெரியவர்" என்னும் விஷயம் ராமாநுஜருடைய நேர் ஶிஷ்யரான வடுகநம்பியால் இயற்றப்பெற்ற'யதிராஜ வைபவ'த்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. எங்களாழ்வான் பிள்ளானுக்கு நேர் ஶிஷ்யர், மூலநூல்களை அறியாமையால் ஏற்பட்ட இத்தகைய மற்றும் பல பிழைகள் இந்நூலில் உள்ளன. நல்ல வைஷ்ணவ வித்₃வான்களைக் கலந்து ஆலோசித்திருந்தால் இவற்றைத் தவிர்த்திருக்கலாம். ஆனால் அரசுத்துறை நிறுவனங்கள் வைணவத்தைப்பற்றி எழுதும் போது வெள்ளைக்காரர்கள், அவர்களுடைய அடிவருடிகளின் நூல்களையும், வைஷ்ணவ விரோதி₄களின் ஆலோசனைகளையும் ஆதா₄ரமாகக்கொண்டு எழுதுவார்களேயொழிய, வைஷ்ணவ சமயத்தை நன்கறிந்த பெரியோர்களிடம் கேட்டுக்கொண்டு எழுதமாட்டார்கள் என்பது இந்நாட்டின் சாபக்கேடு.

V. ஸ்ரீநிவாஸன், திருச்சி-17. (12, 13 கேள்விகள்)

*12. 1979 மார்ச் கலைமகளில் 'சங்கரர் பெருமை' என்னும் தலைப்பில் காமகோடி பெரிய பீடாதி₄பதியின் கட்டுரை வெளி வந்துள்ளது. அதில் ராமாநுஜாசார்யர், மத்₄வாசார்யர் முதலிய வர்களின் பேரைச் சொன்னால்தான் அவர்களைப் புரிந்துகொள்ள லாம். 'ஆசார்யாள்' என்று பொதுவாகச் சொன்னாலே சங்கரா சார்யரைத்தான் குறிக்கும் என்றும், சங்கரர் அவதாரம் செய்த வுடன் முந்தியிருந்த எல்லா மதங்களும் இல்லாமல் போய்விட்டன என்றும் கூறியிருக்கிறார். இது உண்மையா ?*

ஆசார்யாள் என்று சொன்னால் ஆதி₃சங்கரரையே குறிக்கும் என்னும் கட்டுப்பாட்டை அத்₃வைதிகள் தங்களுக்குள் வைத்துக் கொண்டிருக்கிறார்களேயொழிய, இதை விஶிஷ்டாத்₃வைதிகள், த்₃வைதிகள், ஶைவர்கள் முதலிய மற்ற மதத்தவர்கள் எக் காலத்திலும் ஒப்புக்கொண்டதில்லை. மற்ற ஆசார்யர்கள் செய்த பா₄ஷ்யங்களையெல்லாம் சங்கர பா₄ஷ்யம், மத்₄வ பா₄ஷ்யம் என்று பெயரையிட்டுச் சொன்னால்தான் புரியும். ஆனால் எம்பெருமானாருளிய ப்₃ரஹ்மஸூத்ர பா₄ஷ்யத்தையோ

'ராமாநுஜ பா₄ஷ்யம்' என்று எவரும் வழங்குவதில்லை. 'ஸ்ரீபா₄ஷ்யம்' என்றே அனைவரும் வழங்குகின்றனர். 'ஸ்ரீபா₄ஷ்யகாரர்' என்று ஸ்ரீராமாநுஜரே குறிக்கப்படுகிறார். 'ஸ்ரீபா₄ஷ்யம்' எனும் பெயர் ஸரஸ்வதிதே₃வி அதைத் தலையாலே தாங்கி இட்ட பட்டப்பெயராகையாலே இப்படி எதிரிகளும் வழங்கும்படியாக நிலைத்துநிற்கிறது என்பதை எளிதில் உணரலாம். இதில் பொறாமையாலே ஸ்ரீபா₄ஷ்யம் என்றால் 'விஷ பா₄ஷ்யம்' என்று அவப்பொருள் உரைத்து. 'இது ஸம்ஸ்க்ருத நிக₄ண்டுக்களுக்கு ஒவ்வாதே' என்று நாம் ஆக்ஷேபித்த பின்பு வாய்மூடி மௌனியாக நிற்கிறார் சிறிய பீடாதி₄பதி. இப்போது 'ஸ்ரீபா₄ஷ்யம்' 'ஸ்ரீபா₄ஷ்யகாரர்' என்னும் உலக வழக்கிற்குப் போட்டியாக 'ஆசார்யாள்' என்றால் சங்கராசார்யர்தான் என்னும் வாத₃ம் கிளம்புகிறது போலும்! மற்ற மதஸ்த₂ர்களால் ஒப்புக்கொள்ளப்படாமையால் இது பொருந்தாது. சங்கரர் அவதரித்தவுடன் முந்தியிருந்த எல்லா மதங்களும் இல்லாமல் போய்விட்டன என்பதும் தவறு. சங்கரருக்கு முந்தியிருந்த பௌ₃த்₃த₄மதமும், ஜைனமதமும் இன்றும் பா₄ரத தே₃ஶத்திலும், வெளிநாடுகளிலும் பரவியிருப்பதைக் காணலாம். சங்கரரால் ஓரளவு ஏற்கப்பட்டபோதிலும், ஓரளவு கண்டிக்கப்பட்ட பாஞ்சராத்ர (வைஷ்ணவ) மதம் இன்றும் வெற்றியுடன் வீறுபெற்று விளங்குவதைக் காணலாம். சங்கரரால் முழுவதும் கண்டிக்கப்பட்ட சைவ மதம் இன்றும் தமிழ்நாட்டில் மிகவும் பரவியிருப்பதைக் காணலாம். சங்கரரின் வழிவந்தவர்களாகத் தம்மைச் சொல்லிக்கொள்ளும் காமகோடி பீடாதி₄பதிகளே சங்கர பா₄ஷ்யக் கருத்துக்களுக்கு முரணாக சிவனுக்கும், ஶக்திக்கும் பரத்வம் கூறிக்கொண்டு ஏறத்தாழ சைவ மடா₂தி₄பதிகளாகவே ஆகிவிட்ட பரிதாப நிலையையும் காண்கிறோம். ஆகவே காமகோடி பீடாதி₄பதியின் கூற்றில் சிறிதும் உண்மையில்லை.

*13. 1979 மார்ச் அமுதசுரபியில்— 'சிவாலயங்களில் சைவ வைணவ பேதமின்றி சிவபுராணம், கந்த புராணம், இராமாயணம், பாகவதம், ராதா கல்யாணம், பிரஹ்லாத சரித்திரம் போன்ற கதாகாலக்ஷேபங்கள் நடத்துகின்றார்கள். ஆனால் வைணவர்கள், அவர்கள் பெருமாள் கோயில்களில் கந்த புராணம், பார்வதி கல்யாணம் போன்ற நிகழ்ச்சிகளை நடத்திவைத்து ஏன்*

*சைவ வைணவ ஒற்றுமையை நிலை நிறுத்தக் கூடாது? குறிப்பாகத் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயிலில் இத்தகைய கதாகால க்ஷேபங்களை நிகழ்த்தவே கூடாதென்று வரையறுக்கப்பட்டிருக்கிறதே!'' என்று ஒருவர் எழுதியிருக்கிறார். அது பற்றிய கருத்தையும் அமுதசுரபி வாசகர்களைக் கேட்டிருக்கிறது. தங்கள் கருத்தைத் தெரிவிக்க வேண்டுகிறேன்.*

சிவாலயங்கள் சிவன் பரம்பொருள் என்னும் அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளன. வைஷ்ணவாலயங்கள் விஷ்ணு பரம்பொருள் எனும் அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளன. ஆகையால் அந்தந்த தெய்வங்களுக்குப் பரத்வம் கூறும் இதிஹாஸ புராணக்கதைச் சொற்பொழிவுகளை அந்தந்தக் கோவில்களில் நடத்துவதுதான் முறை. ஆலய அதி₁காரிகள் பெரும்பாலும் சைவர்களாகவும், சமரசவாதி₃களாகவும் இருப்பதாலே, விஷ்ணு கோயில்களிலும் சைவசமரசவாதி₃களையே பெரும்பாலும் உபந்யாஸம் செய்யச் சொல்லுகிறார்கள். அவர்களும் விஷ்ணுகோவில்களின் அடிப்படைக்கு முரண்பட்டதாய், தாங்கள் சொல்லும் ராமாயணம் முதலிய கதைகளுக்குச் சம்பந்தப்படாததான சிவ பரத்வ வாத₃ம், சமரசவாதம் முதலானவற்றைச் செய்துவிட்டுக் கோவில் பணத்தைப் பெற்றுச் செல்கிறார்கள். விஷ்ணுகோவில்களிலேயே இப்படிச் செய்யும் இவர்கள், சிவன் கோவில்களில் ராமாயணம், பா₁க₃வதம் முதலானவற்றைச் சொன்னாலும் சிவனுடைய பெருமைக்கு முரணாக ஏதுவும் சொல்லமாட்டார்கள்; விஷ்ணுவைத் தாழ்த்தியும் கூறுவார்கள். இவர்களை விஷ்ணுகோவில்களில் கந்த புராணத்தையும், சிவ புராணத்தையும் சொல்லவைத்து விட்டால், ''திருமால் சிவனுடைய அடியைத் தேடினான், கண்ணைப்பிடுங்கிச் சிவனுக்கு அர்ச்சனை செய்தான், சிவன் மத்ஸ்யாவதாரம் செய்த திருமாலைக் கொன்றுவிட்டான். ஆமையின் ஓட்டைப் பிரித்துத் தனக்கு ஆபரணமாகக் கொண்டான். வராஹத்தின் கொம்பை முறித்து அணிந்து கொண்டான். நரஸிம்ஹத்தைச் சரபமாக வந்து சிவன் கிழித்து விட்டான், த்ரிவிக்ரமனின் தோலை உரித்துத் தனக்குச் சட்டையாகப் போட்டுக்கொண்டான் சிவன்'' முதலான கர்ண கடூரமான பொறுக்கவொண்ணாத கதைகள்தான் விஷ்ணுகோவில்க

ளில் முழங்கும். இந்தக் கேள்வியைக் கேட்டவர் விஷ்ணு கோவில்களில் இத்தகைய கதைகளே முழங்கி, வைஷ்ணவர்களும் சைவர்களாக மாறி, விஷ்ணுகோயில்களும் சிவன் கோவில்களாக மாறவேண்டுமென்று ஆசைப்படுகிருர் என்று விளங்குகிறது. இதுவா ஒற்றுமை? வைஷ்ணவர்கள் விழித்திருந்து இத்தகைய நிலை வராமல் பாதுகாக்கவேண்டும்.

S. வேங்கடம், சமயபுரம்.

*14. 15-3-79 குமுதத்தில் 'ஸுதர்சனர் பதில்கள்' சிலவற்றைச் சுருக்கமாக வெளியிட்டுத் தாங்கள் திராவகத்தில் தோய்த்து எழுதுவதாகக் குமுதம் ஆசிரியர் குற்றம் சாட்டியிருப்பதையும். 22-3-79 குமுதத்தில் தனது கீதை உரையைப்பற்றிய தங்கள் பதிலைப்பார்த்துக் கடும் கோபங்கொண்ட கண்ணதாசன் தங்களைப் பலவாறு தாக்கியிருப்பதையும், உண்மைக்கு முரணுன பல விஷயங்களை எழுதியிருப்பதையும் பார்த்தீர்களா! இதற்கு பதிலடி கொடுக்க வேண்டுகிறேன்.*

பார்த்தோம். நம்மைத் தாக்கியிருப்பதுகண்டு நமக்குக் கவலையில்லை. 'குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும், க்ருபையும், உகப்பும், சிரிப்பும், உபகார ஸ்ம்ருதியும் நடக்க வேணும்' என்று நமக்கு ஆசார்யர்கள் கற்றுக்கொடுத்திருக்கிருர்கள். ஆகையால் நாம் பதிலடி கொடுப்பதற்கு இடமேயில்லை. கடுஞ்சொற்கள் எதுவும் இல்லாமல், உண்மைகளை மாத்திரம் விளக்கிக் குமுதத்திற்குக் கடிதம் எழுதியிருக்கிருேம். குமுதம் அதை வெளியிடுகிறதா? எப்படி வெளியிடுகிறது என்று பார்த்துக்கொண்டு, இவ்விதழ் (காளயுக்தி, பங்குனி) தலையங்கத்தில் அதை விமர்சிப்போம். நம்மைத் திராவகத்தில் தோய்த்து எழுதுவதாகச் சொல்லுகிறவர்கள், விஷ்ணுவையும் வைஷ்ணவத்தையும் குறித்துச் சைவர்களும் சமரசவாதிகளும், பீடாதிபதிகளும் மிகக் கடுமையாகத் தாக்கி எழுதுவதாலேயே நம்முடைய பதில்கள் கடுமையாக அமைந்துவிடுகின்றன என்பதை மறந்து விடுகிருர்கள். உதாரணமாக, மதுரை ஸர்வகலாசாலை வெளியிட்ட ஒரு பாட வழிகாட்டியில் வைஷ்ணவத்தைப்பற்றியும், விஷ்ணுவைப்பற்றியும் எத்தனை இழிவாக உரைக்கப்பட்டிருக்கிறது என்பதை அடுத்த கேள்வியில் காணலாம்.

அன்ருமியார் R. ஸ்ரீநிவாஸன், ஆழ்வார்திருநகரி.

*15. ஸுதர்சனர் பதில் 2-வது சதகம் 98-வது கேள்வியில் அடியேன் குறிப்பிட்ட பாடவழி காட்டியை அனுப்பியிருக்கிறேன். அதில் உள்ள விஷ்ணு வைஷ்ணவ தூஷணங்களைக் களைந்தெறிய வேண்டுகிறேன்.*

பாடவழிகாட்டியில் கொடுக்கப்பட்டிருக்கும் விஷ்ணு வைஷ்ணவ தூஷணங்களை இனி 18 தலைப்புகளில் சிறிய எழுத்தில் அச்சிட்டு, பெரிய எழுத்தில் அவற்றுக்கு முறையே பதில் உரைப்போம்:—

அஞ்சல்வழி தொடர் கல்வித்துறை (127),

M A. முதலாண்டு, (78—79) சைவசித்தாந்தம்,

(மெய்கண்டசாத்திரம்), பாடவழிகாட்டி-9.

1. முதல்வனை உலகத்திற்கு முதற்காரணம் எனக்கொண்டு அதே சமயத்தில் அவன் பரிணமத்தால் எவ்வகை மாற்றமும் அடையான் என்பது பொருந்தாத ஒன்று.

2. திருமாலுக்கு எழுவகைப் பிறப்புக்குட்பட்ட சில பிறவிகள் அவரை வழிபடுவோரால் உடன்பட்டுக் கொள்ளப்படுகின்றன. பிறவி யுட்படுகின்றவையெல்லாம் உயிராக எண்ணப்படும் என்பது சைவர் கொள்கை. சிவபிரானைப் பிறவா யாக்கைப் பெரியோன் என்று பண்டுதொட்டு அன்னோர் கூறிவருவதற்குக் காரணம் இதுவே.

3. பிரம்மஸூத்ரத்தில் இரண்டாம் அத்தியாயம் 2-ம் இயலின் இறுதியில் நான்கு ஸூத்திரங்களால் பாகவத மதம் எனப்படும் பாஞ்சராத்திரம் மறுக்கப்படுகின்றது.

4 2-வது சதகம் கேள்வி 98ல் உள்ளது.

5. முதற்பொருள் ஞானம் பேரொளியாய் நிற்பின் அது மாயையாகிய உலகில் தோயாது. முதல்வனது உருவை ஞானஉரு எனக் கூறும்பொழுது அவன் உருவத்தை தோல், குருதி, முதலிய தாதுக்களால் உண்டானதாகக் கூறுவது தகாது.

6. புராணக்கதைகள்:—

(I) கபால நன்மோக்கத்தின்போது திருமால் தன் நெற்றி நரம்பினைத் திறந்து இரத்தத்தைத் தந்தபோது மூர்ச்சையானர். சிவபிரான் அருள் புரிந்தபோது எழுந்து சென்ருர். ஆதலால் புராணங்கள் திருமாலை ஞான உருவினன் என்று சொல்லவில்லை.

(II) தக்க யாகத்தில் வேள்விமூர்த்தியாய் இருந்த திருமால் தலையிழந்து சிவபெருமான் அருளால் தலைபெற்று எழுந்தான். திருமால் வேதத்தை உரைத்து அஃது உலகில் பரவிவரச் செய்தான்.

திருமால் வேதத்தை உரைத்து, அது உலகில் பரவிவரச் செய்தான் என்பது பொருந்தாது. திருமால் பயந்த அயனுக்கு ஐந்து தலைகள் இருந்தது. ஒரு தலையை சிவன் நீக்கினமையின் அவன் நான்முகன் ஆயினன் என்பதும் புராணமே. அத்தகைய நான்முகன் சிவனைப் படைத்தான் என்பது பொருந்தாக் கூற்றன்றோ. வேதப்பொருளை யும் அதன் தெளிவாகிய சிவாகமங்களையும் சிவபிரான் உரைத்தான என்பது புராணங்களால் விளங்குகிறது.

(III) நாராயணம் என்னும் ஓர் உபநிடதத்தில் 'நாராயணனிட மிருந்து பிரம்மா தோன்றினன். நாராயணனிடமிருந்து உருத்திரன் தோன்றினன் என வருகின்றது. இதன்படி நாராயணனிடமிருந்து தோன்றிய ருத்திரனும் திவ்யப்பிரபந்தப்படி அயனிடத்தில் இருந்து தோன்றிய சங்கரனும் ஒருவனே என்று கூறல் பொருந்துமோ? பொருந்தாது என்க. மும்மூர்த்திகள் உட்பட்டவர்கள் நான்காவது எனப்படும் பரம்பொருளிலிருந்து ஒரு கற்பத்தில் முன் ஒருவர் தோன்றி அவர் மூலம் மற்றிருவர் தோன்றுவர் என்பதும் ஒரு கற் பத்தில் மூவரும் பரம்பொருளினின்றும் ஒருங்கே தோன்றுவர் என்பதும் நூல்களின் கருத்து. ஆதலால் பரம்பொருளை மும்மூர்த்தி களுள் ஒருவனைக் கூறுதல் தகாது என்பது சைவர் கொள்கை.

7. புராணங்கள் நாரணன் பிரம்மாவைப் படைத்தான் என்றும், பிரம்மா நாரணனைப் படைத்தான் என்றும், ஒருவருக்கொருவர் காரணமும் ஆவர், காரியமும் ஆவர் எனக் கூறும். ஆதலால் இருவருக்கும் மூலகாரணமாக இருக்கின்ற முதல் உரு சிவபிரான் என்பதே கருத்தாகும்.

8. நால்வகைத் தோற்றம், எழுவகைப் பிறப்பு என்பவற்றின் பாற்பட்டு யாதொன்று தோன்றும், அது பசு வர்க்கத்துட்பட்டதே. அங்ஙனம் தோன்றுததே கருணையினல் உருக்கொள்ளும் முதற் பொருள் என்பது வேதங்களைப் பயின்ற அறிவர்களின் கொள்கை. ஆயின் பாஞ்சராத்திர மதத்தினர் முதற்பொருளே யோனிவாய்ப் பட்டுப் பிறக்கும் எனக்கொள்வர். இறைவன் அயனுக்கு உலகப் படைப்பின் கலையை அறிவித்தானுக, அவன் அதனை மறந்து ஒரு சமயம் இறைவனை வேண்டி இரந்தான். அப்போது அவன் முகத் தில் சிவபிரான் தோன்றி அவனுக்குப் படைத்தல் தொழிலைக் கற்பித்தான் என்பது புராணம் கூறும் உண்மை. இதைக்கொண்டு சிவனை அயனின் மகன் என்பது பொருந்தாக் கூற்றன்றோ? தூணிற்றோன்றிய நரசிங்கத்தைத் தூணின் மகன் என்பது பொருத்தமோ?

9. திருமால் எடுத்த அவதாரங்களுள் சில சிவபிரானால் ஒறுக்கப்பட்டு அவற்றின் கோடு, ஓடு முதலியவற்றைச் சிவபிரான் அணிந்துள்ளான் எனப் புராணம் கூறும். சில அவதாரங்களில் திருமால் சிவபிரானை வழிபட்டதாக அவை கூறும். நிலவுலகத்தில் அவ்வாறு சில கோயில்களும் அவற்றின் வரலாறுகளும் இக்கருத்தை வலியுறுத்துதற்கு நிலவுகின்றன. அதனால் சிவபிரானே முற்றழிப்புக் கடவுள் என்பதும், அவன் ஆணையால் அயனும், திருமாலும் தம் தம் தொழிலைப் புரிந்து வருகின்றனர் என்பதும் பெரும்பான்மையினர் கருத்தாக இருந்து வந்திருக்கின்றது என்பது தெளிவாகும்.

10. இன்னும் சலந்தரன் எனும் அசுரனைக் கொல்வதற்காகச் சிவபிரான் தன் நினைப்பால் உண்டாக்கிய சக்கரத்தைத் திருமால் சிவபிரானை வழிபட்டுப் பெற்று, அதனால் உலகத்தைக் காத்து வருகின்றார் என்பதும் புராண வரலாறாய் வழங்குகின்றது.

11. நரசிங்க அவதாரத்தில் நரசிங்கம் உற்ற செருக்கைச் சரபமாகச் சிவபிரான் வந்து அழித்தார் என்பது புராணமாகும். இவ்வரலாற்றைத் திரிபுவனம் என்னும் ஊரிலுள்ள சரபேசர்கோயில் வலியுறுத்துகிறது. மாவலிபால் மூவடி மண்ணை இரந்து பெற்று, பின்னர் அவனையே திருமால் சிறையில் இட்டான் என்பதைத் திருமாலுக்குப் பெருமையாகக் கருதாதவரும் உளர். ''மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான் தாஅய தெல்லாம் ஒருங்கு'' எனும் திருவள்ளுவர்க்கும் கரந்து செல்லுதலையும் இரந்து நிற்றலையும் வேண்டா என்பதே கருத்து எனக் கொள்வோரும் உளர்.

12. மாய மானாக வந்த மாரீசனை இராமர் உணரவில்லை. அதனால்தான் தன் மனைவியையும் இழக்க நேரிட்டது என்பது இராம கதை. அத்தகைய இராமரை மாயைக்குத் தலைவன் என்பது எவ்வாறு பொருந்தும்? அன்றியும் இராவணனைக் கொன்ற கொலைப் பாவம் தீர்தற் பொருட்டுத் தம் பெயரால் இலிங்கம் நிறுவி வழிபட்டார் என்பதை இராமேச்சரம் எனும் பெயர் உணர்த்தி நிற்கின்றது. அன்றியும் சுவேதாச்சுவதரம் எனும் உபநிடதம் ''மாயையை முதற்காரணம் என அறிக. மாயையையுடையவனை மகேசுவரன் என அறிக'' எனக் கூறுகின்றது. இதனால் வைதிகருள் பல்லோர் சிவபிரானை மாயைக்குத் தலைவன் எனக் கொண்டுள்ளனர் என்பது விளங்கும்; ஏனையத் தெய்வங்களைச் சிவனுக்கு உயர்வாக, ஒப்பாகப் பேசுவது மரபன்று என்பதும் விளங்குகிறது.

13. பரசுராமரும், பலதேவரும் சிவனை வழிபட்டவர்களே. பலராமர் உமையொரு பாகரை உள்ளத்திற்கண்டு கொண்டே உலகை ஆட்சி செய்தவர். கண்ணபிரான் உபமன்யு முனிவர்பால் சிவ தீக்கை பெற்றுச் சிவபூசை செய்தவர். பின்வரும் கல்கி அவதாரம் எப்படியிருக்கும் என்பது பற்றி இப்போது ஆராய்ச்சி வேண்டா. இனி, கசேந்திரன் என்ற யானை ஆதிமூலமே என்று அழைக்க அப்போது வந்து அருள் செய்தமை பற்றித் திருமாலைப் பரம்பொருள் என்பது பொருந்தாது. அரசனை நோக்கி ' ஐயனே! முறையோ ' என்று ஒருவன் அழைத்தால், அரசனே வரவேண்டும் என்பது இல்லை. அரசன் ஆணைக்குட்பட்ட ஒருவர் வந்து அருள் புரிதலுங் கூடும். அன்றியும் அவ்யானை திருமாலை வழிபட்டுத் திருமாலையே ஆதிமூலம் என்று அழைத்தமையால் அவரே ஆதிமூலம் என்று கூறுதல் பொருந்தாது. ஒருவனை அவனுக்கு அடிமையாயினான் 'எம்பெருமானே!' என்று அழைத்தால் அவ்வாறு அழைக்கப்பட்டவன் யாவர்க்கும் பெருமான் ஆவனோ?

14. இன்னும் சிவன் ஆலகாலம் எனும் நஞ்சை உண்டு மிடற்றில் அடக்காவிடில், திருமால் தேவர்களுக்கு அமுதத்தை வழங்குதல் கூடுமோ? சூரபதுமனை முருகப்பெருமானால் கொல்வித்தும், தாருகன் என்பவனைக் காளியால் வதைப்பித்தும், திரிபுரத்தை எரித்தும், சலந்தரன் உடலைப் பிளந்தும், நஞ்சை அயின்றும் சிவன் திருமால் முதலிய எல்லாத் தேவரையும் பாதுகாத்தமையைப் புராணங்கள் விளக்கிக் கூறும்.

15 அருச்சுனன் போர்க்களத்திற் புகுந்து எதிரில் இருந்தவர்கள் அனைவரும் தன் உறவினராகவோ ஆசிரியர்களாகவோ இருப்பதைக் கண்டு அவர்களைக் கொன்று பெறும் அரசு தனக்கு வேண்டா என மறுத்தான். அவனைப் போர் செய்யும்படி தூண்டிய வார்த்தைகளைக் கண்ணபிரான் சொன்னான். இவ்வார்த்தைகளையே பிற்காலத்துப் பகவத்கீதை எனும் ஒரு பெரிய நூலாக ஆக்கிக் கொண்டனர் பாகவதர்கள். இது போலவே திரிபுரத்து அசுரர்களை வெல்வதற்குத் திருமால் புத்தராகச் சென்று திரிபிடகம் உபதேசித்தார் என்பர். ஆதலால், திரிபிடகத்தையும் ஒரு சிறந்த நூலாகக் கொள்ளலாம் அல்லவா?

16. இனி மாயை வேறு, உயிர்களும் வேறு, மாயவன் அவ்வுயிர்களுள் ஒருவன். ஆதலால் மாயவன் உயிர்களும் ஆகான், மாயையும் ஆகான். இனி இறை, பசு, பாசம் எனும் மூன்று பொருள்களும் அநாதி நித்யப் பொருள்கள், இறை தானே அறிந்து

உயிர்களை அறிவிக்கும் தூய முற்றறிவுடைய பொருள். உயிர்கள் அறிவித்தால் அறிவன; அறியும் போது சார்ந்ததன் வண்ணமாய் நின்றே அறிவன. பாசம் என்பவை உயிர்களைப் பிணித்து நிற்கும் அறிவில் பொருள்கள். இறைவன் பசு பாசங்களில் பிரிப்பின்றிக் கலந்து அவற்றைத் தொழிற்படுத்துவோன். ஆதலின் அவனை எல்லாமாய் நிற்பவன் என்று வேதம் கூறும். பசுக்கள் பாசத்தின் நீங்கி இறைவனை அடைவதே வீடுபேறு என ஆகமங்கள் கூறும். அங்ஙனமாகவும் குற்றமற்ற திருமால் அழுக்குடையவனாகி மாயையினையும் கூடி நிற்பன் எனக் கூறும் வேதாகமங்களுக்கு முரணான பேச்சை உயர்ந்தோர் கொள்ளார்.

17. தழற்பிழம்பாய் இறைவன் ஓங்கிய காலத்து. அயனும் அரியும் முடியும் அடியும் காணாது எய்த்தனர். அவருள் அரி சக்கரத்தைச் சிவன்பால் வேண்டிப் பெற்றனன். ஆதலால் அரியைக் கடவுள் என்றல் சாலாது. ததீசமுனிவர் தருப்பையால் ஒரு சக்கரம் செய்து. திருமாலை மயங்கி விழும்படி செய்தார் என்பர். சிவனுக்கு அடியனாகிய துருவாசமுனி திருமாலை மார்பில் உதைத்தார் என்றும், உதைத்த இடம் புனிதமாயிற்று என்றும், அதுவே திருமறு என்றும், அவ் இடம் திருமகளுக்கு இடமாயிற்று என்றும் புராணங்கள் கூறும்.

18. இன்னும் திருமால் பத்துப் பிறப்பு எடுத்ததற்குக் காரணம் பிருகு முனிவரின் சாபம் என்பர். இங்ஙனம் புராணங்கள் சிவனையே முதல்வன் என்று கூறுதலால், சிவனையே யாவரும் தொழுதல் வேண்டும். தியானிக்கற்பாலன் சிவன் ஒருவனே (சிவோ ஏகோ த்யேய:) என்பது அதர்வசிகை உபநிடதமொழி.

## இவ்விஷயங்களுக்கு பதில்

1. சேதநாசேதநங்களாகிற ஶரீரத்தோடு கூடின முதல்வனையே உலகத்திற்கு முதற்காரணம் எனக்கொள்கிறோம். ப்ரளயத்தில் ஸூக்ஷ்ம சேதநாசேதநங்களை ஶரீரமாகக்கொண்ட நாராயணன் ஸ்ருஷ்டி காலத்தில் ஸ்தூ₂லசேதநாசேதநங்களை ஶரீரமாகக் கொண்டவனாகப் பரிணமிக்கும்போது, பரிணமத்தால் உள்ள தோ₃ஷங்கள் அவனுடைய ஶரீரத்திலேயே உள்ளனவேயொழிய அவனுடைய ஸ்வரூபத்துக்கு ஏற்படமாட்டா என்று பல, ஶ்ருதி ஸ்ம்ருதி வாக்யங்கள் முழங்குகின்றன. "யதோ₂ர்ணநாபி₄: ஸ்ருஜதே க்₃ருஹ்ணதே ச......ததா₂க்ஷராத் ஸம்ப₄வதீஹ

*விச்வம்*'' [முண்ட₃க 1-1-8] [சிலந்தியானது தன் உடலி லிருந்து நூலை வெளிவிட்டு இழுத்துக் கொள்வதுபோலே, விகாரமற்ற பரம்பொருளிடமிருந்து உலகம் உண்டாகிறது] என்று உபநிஷத் உரைத்தபடியே, சிலந்திப்பூச்சி கூடுகட்டும் போது அதனுடைய உடலே மாறுபாடு அடைந்து அதன் ஆத்மஸ்வரூபம் விகாரமற்றிருப்பதுபோலே, பரம்பொருள் உலகிற்கு முதற்காரணமாகும்போது அதன் உடலே விகாரம் அடைகிறது என்றும், அதன் ஸ்வரூபத்திற்கு எவ்வித மாறு பாடும் இல்லை என்றும் தெளிவாக விளங்குகிறது. இதில் பொருந்தாமை ஒன்றும் இல்லை. நிமித்த காரணத்தையும், உபாத₃ாநகாரணத்தையும் வேறாகக்கொள்ளும் சைவமதமே பல வேத₃வாக்யங்களுக்கும் ப்₃ரஹ்மஸூத்ரத்திற்கும் பொருந்தாதது.

2. ''*அஜாயமாநோ ப₃ஹுதா₄ விஜாயதே*''[புருஷஸூக்தம்] [(கர்மம் காரணமாகப்) பிறப்பற்றவனாயினும், (பரமபுருஷன் தன் விருப்பத்தாலே) பலபடியாகப் பிறக்கிறான்] ''*தஸ்ய தீ₄ரா: பரிஜாநந்தி யோநிம்*'' [புருஷஸூக்தம்] [அறிவாளி களில் தலைவர்களே அவனுடைய பிறப்பின் ரஹஸ்யத்தை அறிவார்கள்] ''*பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ நாவே த₃விந்மநுதே தம் ப்₃ருஹந்தம்*'' [யஜு-காட₂க 3-9-55] [அனைத் துலகுக்கும் தந்தையான பரமாத்மா தன் பிள்ளைகளில் ஒருவனைத் தந்தையாகக்கொண்டு ஒவ்வொரு யோனியிலும் பிறக்கிறான். வேத₃மறியாத அறிவிலி அவனைப் பரமாத்மாவாக உணரமாட் டான்.] ''*ஸ உ ச்ரேயாந் ப₄வதி ஜாயமாந:*''[யஜு-அஷ்டக 3-6-3] [அந்தப் பரமாத்மா பிறந்தபின்பே பெருமை பெறுகிறான்.] என்று வேத₃வாக்யங்கள் முழங்குகின்றன. அதற்கு முரணாக உள்ள *சை*வர்கள் கொள்கை வேத₃த்தோடு முரண்பட்ட தாகையால், *சை*வமதம் அவைதி₃கம் என்றே தெளிவாகக் காட்டித்தரும். *சை*வர்கள் பிறவாயாக்கைப் பெரியோனாக அபி₄மானிக்கும் சிவபிரானுக்கு—*ச*தபத₂ ப்₃ராஹ்மணத்தில், பிரமன் 'உஷஸ்' என்னும் தே₃வியிடம் வீர்யத்தை விட்ட தால் ஏற்பட்ட ப்ராக்ருதமான பிறப்பு சொல்லப்பட்டுள்ளது. ஆகையால் சிவனைப் பிறவாயாக்கைப் பெரியோன் என்பதும் வேத₃த்தோடு முரண்படுகிறது. பரமவைதி₃கர்களாயிருந்த

சங்ககாலச் சான்றோர்கள் *"பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோ ரிலையே"* [ பரிபாடல் 3 ] என்று 'திருமால் எல்லாவிதமான பிறவிகளிலும் பிறந்தபோதிலும் அவன் தான் விரும்பியே அப்பிறவிகளை எடுக்கிறானேயொழிய அவனைப் பிறப்பித்தவர்கள் எவரும் கிடையாது' என்று தெளிவாக முழங்கியிருப்பதையும், பிரமன், சிவன் முதலானவர்கள் அவனிடமிருந்து தோன்றியவர்களே என்று அறுதியிட்டிருப்பதையும், ஐந்தாவது பரிபாடலில், சிவனும் பார்வதியும் புணர்ந்து வெளிப்பட்ட வீர்யத்தால் உண்டானவன் முருகன் என்று பாடியிருப்பதையும் காணும் நடுநிலையாளர்க்கு. திருமால் ஒருவனே தன்னைப் பிறப்பித்தவர் எவருமில்லாத பரம்பொருள் என்றும், சிவன் முதலான மற்ற அனைவரும் பிறப்பை உடைய ஜீவர்களே என்றும் சங்க காலத்தில் சான்றோர்கள் அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டு வந்தது என்றும், அக்காலத்திற்குப் பிறகே சிவப₄க்தர்கள் சிவனைப் பிறவாயாக்கைப் பெரியோனாக்கி, திருமாலைத் தாழ்த்தி, சைவமதத்தைப் பரவச்செய்தனர் என்றும் நன்கு விளங்கும்.

3. ப்₃ரஹ்மஸூத்ரம் 2-ம் அத்தியாயம் 2-ம் பாத₃த்தில் ஸாங்க்₂ய மதம் தொடக்கமாக *ஶைவ* மதம் ஈறாகவுள்ள அவைதி₃கமதங்கள் அனைத்தையும் க₂ண்டி₃த்து, கடைசி அதி₄கரணமான உத்பத்த்யஸம்ப₄வாதி₄கரணத்தில் பாஞ்சராத்ர மதத்தின்மேல் பிறர் கூறும் ஆக்ஷேபங்களைத் தள்ளி, அதுவே தாமுகந்த வைதி₃க மதம் என்று நிலைநாட்டினார் ப₃ாத₃ராயணரான வேத₃வ்யாஸர். முந்தினதான *பஶு*பத்யதி₄கரணத்தில் *ஶை*வமதம் தள்ளப்பட்டிருப்பதை எடுக்காமல், இறுதியான உத்பத்த்யஸம்ப₄வாதி₄கரணத்தில் பாஞ்சராத்ரம் மறுக்கப்படுவதாக எழுதுவது நடுநிலைமைக்குப் பொருந்தாது. வேத₃வ்யாஸர் தம் மஹாப₄ாரதத்தில் பாஞ்சராத்ரத்தை மிகச்சிறப்பாக ஆத₃ரிப்பதிலிருந்தும், ஸாங்க்₂யமதம் தொடக்கமாக *ஶை*வமதம் ஈறாகவுள்ள அவைதி₃க மதங்களைத் தள்ளிவிட்டு, இறுதியில் தாம் உகந்த பாஞ்சராத்ர மதத்தை நிலைநாட்டுகிறார் என்று கொள்வதே பொருந்தும்.

4. 2வது *ஶ*தகம் கேள்வி 98ன் பதிலில் விரிவாக பதில் உரைக்கப்பட்டுள்ளது.

5. ப்ரஹ்மஸூத்ரத்தின் 3-ம் அத்தியாயத்தின் 2-ம் பாதத்திலுள்ள உபயலிங்காதிகரணம் "ஜ்ஞாந ஸ்வரூபமான பரம்பொருள் உலகில் வியாபித்திருந்தபோதிலும், அது உலகிலுள்ள பொருள்களின் தோஷங்களால் தொடப்படாமலே இருக்கும்" என்று நிலைநாட்டிற்று. அந்தர்யாமி ப்ராஹ்மணம் முதலான வேதபாகங்களும் இதைத் தெளிவாக முழங்கின. நாராயணனுடைய திவ்யாத்மஸ்வரூபம் ஜ்ஞாநாநந்தமயமானது. அவனுக்கு அப்ராக்ருதமான திவ்யமங்கள விக்ரஹமும் உண்டு. அந்த திவ்யமங்கள விக்ரஹத்தை இவ்வுலகத்திலுள்ள ப்ராக்ருத *ஶரீரம்*போலே ஆக்கிக்கொண்டு அவன் பிறந்தாலும், அது உண்மையில் அப்ராக்ருதமே என்று *ஶா*ஸ்த்ரங்கள் முழங்குகின்றன. *"ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்தி: மாம்ஸமேதோஸ்தி ஸம்பவா"* [ வராஹ 14-41 ] [மாம்ஸம், மஜ்ஜை, எலும்பு முதலானவற்றாலான ப்ராக்ருதமான உடம்பு அவனுக்குக் கிடையாது.] *"ந பூதஸங்கஸம்ஸ்தாநோ தேஹோऽஸ்ய பரமாத்மந:"* [பார-ஶாந்தி 206-60] [பரமாத்மாவான இவனுடைய திருமேனி பஞ்சபூதங்களால் ஏற்பட்ட அமைப்பை உடையதன்று.] முதலான ப்ரமாணங்களைக் காணலாம். அவனுடைய திவ்யமங்கள விக்ரஹம் *ஶு*த்த ஸத்வகுணமுடையது என்று முழங்கும் நூற்றுக்கணக்கான *ஶ்ரு*திஸ்ம்ருதிகளை நமது 'ஸாத்விகவிஜய'த்தில் எடுத்துக்காட்டியிருக்கிறோம்.

6 முதல் 18. இவற்றில் புராணக்கதைகளை ஆதாரமாகக் காட்டி சிவபரத்வம் ஸ்தாபிக்கப்படுகிறது. *"அக்நே: ஶிவஸ்ய மாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்திதம் । ராஜஸேஷு ச கல்பேஷு அதிகம் ப்ரஹ்மணோ விது: ॥ ஸாத்விகேஷ்வத கல்பேஷு மாஹாத்ம்யமதிகம் ஹரே: । தேஷ்வேவ யோகஸம்ஸித்தா கமிஷ்யந்தி பராம் கதிம் ॥"* [மாத்ஸ்யபுராணம்-290] [தாமஸ கல்பங்களில் சொல்லப்பட்ட புராணங்களில் அக்னிக்கும், சிவனுக்கும் பரத்வம் கூறப்படுகிறது. ராஜஸகல்பங்களில் சொல்லப்பட்ட புராணங்களில் பிரமனுக்குப் பரத்வம் சொல்லப்படுகிறது. ஸாத்விக கல்பங்களில் சொல்லப்பட்ட புராணங்களில் ஹரிக்குப் பரத்வம் கூறப்படுகிறது. அந்த ஸாத்விக புராணங்களைக்கொண்டே உபாயஸித்தி பெற்றவர்கள் மேலான

கதியை அடைகிறார்கள் ] என்கிறபடியே தமோ குண மிகுதியினால் சொல்லப்பட்ட தாமஸபுராணங்களிலிருந்து எடுக்கப்பட்ட இக்கதைகளுக்கு மதிப்பு இல்லை. நாராயணன் ஒருவனே மற்ற எல்லா தெய்வங்களையும், உலகனைத்தையும் படைத்து, அளித்து, அழிக்கும் முழுமுதல்வன் என்றும், தோஷங்கள் சிறிதும் அற்றவன் என்றும் முழங்கியிருக்கும் பற்பல வேத வாக்யங்களுக்கு முரண்பட்டவையாகையாலே இப்புராணக் கதைகளை அறிவாளிகள் ஏற்கமாட்டார்கள். பூர்வமீமாம்ஸையில் விரோதாதிகரணத்திலும், ப்ரஹ்மஸூத்ரத்தில் ஸ்ம்ருத்யதிகரணத்திலும் ஶ்ருதி விருத்தமான நூல்கள் தள்ளத்தக்கவையே என்று நிலைநாட்டப்பட்டது. திருமாலுக்குத் தாழ்வையும், சிவனுக்குப் பரத்வத்தையும் கூறும் இக்கதைகளில் ஒன்றுகூட வேதத்தில் எடுக்கப்படவில்லை. வேதாங்களின் பூர்வபாகத்தை விளக்கவந்த ஸ்ம்ருதிகளிலும் எடுக்கப்படவில்லை. வேதத்தின் உத்தரபாகமான உபநிஷத்தை விளக்க வந்த இதிஹாஸ புராணங்களில் பல காரணங்களால் வலிமை மிக்கவையும், மிகப் பழையவையுமான ஸ்ரீராமாயண மஹாபாரதங்களாகிற இதிஹாஸங்களிலும் எடுக்கப்படவில்லை. காளிதாஸன் முதலான பண்டை வடமொழிக் கவிஞர்களாலும், ஆதிஶங்கரர் முதலான ப்ராசீநமதப்ரவர்த்தகர்களாலும் தம் பாஷ்யங்களில் கையாளப்படவில்லை. சங்ககாலச் சான்றோர்களாலும் தொடப்படவில்லை. தாமஸபுராணங்களிலேயே காணப்படும் இக்கதைகள்—மிகவும் பிற்பட்டவர்கள் என்று ஆராய்ச்சியாளர்கள் அனைவரும் இசைந்த நாயன்மார்கள் காலந்தொட்டே வழங்கப்படுகின்றன. இதிலிருந்து ஶ்ருதி முதலான வடமொழி ப்ரமாணங்களிலும், சங்க இலக்கியங்களிலும் ஒருமுகமாக முழங்கப்படும் விஷ்ணுபரத்வத்தைக் கண்டு பொறாமையுற்ற சிலரால் பிற்காலத்தில் புனையப்பெற்றவையே இக்கதைகள் என்று நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும். புராணங்களுக்குள்ளும் ஸாத்விக புராணங்களில் இல்லாமல், தாமஸ புராணங்களிலேயே காணப்படுவதால் இவற்றிற்குச் சான்றோர்கள் எக்காலத்திலும் மதிப்பளிப்பதில்லை என்பதும் விளங்கும். சைவர்கள் மிகுதியாகவுள்ள நம் நாட்டில் 'எந்தப் புளுகும் கந்தபுராணத்தில்' என்று வழங்கும் பொதுஜனவழக்கு இந்தப் புராணங்களுக்கு மக்கள் எவ்வளவு மதிப்பளித்தார்கள் என்

பதைக் காட்டுகிறது. ஆதி₃ஶங்கரர் முதலான ப்ராசீன மத ப்ரவர்த்தகர்களும் தமது பா₄ஷ்யங்களில் விஷ்ணுவுக்குப் பரத்வம் கூறும் விஷ்ணுபுராண வாக்யங்களை மேற்கோள்களாகக் காட்டினார்களேயொழிய, சிவனுக்குப் பரத்வம் கூறும் தாமஸபுராண வாக்யங்களை மேற்கோள்களாகக் காட்டவில்லை என்பதும் குறிக்கொள்ளத்தக்கது. ஶ்ருதி ஸ்ம்ருதிதிஹாஸங்களைக்கொண்டு சிவபரத்வத்தை ஸ்தா₂பிக்கமுடியாமையால், சைவர்கள் தாமஸபுராணக் கதைகளைக்கொண்டே சிவ பரத்வத்தை ஸ்தா₂பிக்கவேண்டிய நிலையில் இருக்கிறார்கள் என்பதை அறிவாளிகள் நோக்கவேணும். இனி, மற்ற விஷயங்களுக்கு பதிலுரைப்போம்.

6. (i) ஸாத்விக புராணங்களில் திருமால் தன் மார்பிலிருந்து ஒரு வாசநீரைப் பிச்சையாக இட்டு, சிவன் கையில் ஒட்டிக்கொண்டிருந்த ப்₃ரஹ்மகபாலத்தை நிரப்பி, சிவனுடைய இடரைப் போக்கினார் என்றே கூறப்பட்டுள்ளது.

6. (ii) ஸ்ரீபா₄க₃வதம் முதலான ஸாத்விக புராணங்களில் த₃க்ஷ யஜ்ஞத்தின்போது திருமால் வரவேயில்லை என்றே கூறப்பட்டுள்ளது. *''தத்ர ப்₃ரஹ்மா சதுர்முகோ₂ऽஜாயத''* [மஹோபநிஷத்] [அந்த நாபீ₄கமலத்தில் நான்முகனான பிரமன் தோன்றினான்] *''லலாடாத் த்ர்யக்ஷ: ஶூலபாணி: புருஷோऽஜாயத''* [மஹோபனிஷத்] [பிரமனின் முகத்திலிருந்து ஶூலமேந்திய முக்கண்ணன் பிறந்தான்.] என்று உபநிஷத் ஓதுகையால், அதையொட்டி ''நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்'' என்று திருமழிசையாழ்வார் அருளிச்செய்தார். பிரமனுக்கு ஐந்து தலைகள் இருந்து ஒன்றைச் சிவன் கிள்ளினான் என்னும் புராணக்கதையை இந்த வேத₃வாக்யத்திற்கு முரணில்லாமல் பொருள்கொள்ளவேண்டும். இரண்டுவிதமாகப் பொருள் கொள்ளலாம். காலக்ரமத்தில் நான்முகனான பிரமனுக்கு ஐந்தாவது தலை முளைத்தது. அதுவே சிவனால் அறுக்கப்பட்டது என்று கொள்ளலாம்; அல்லது நித்யமான வேத₃ம், ஐம்முகனான பிரமன் சிவனால் ஒருதலை அறுக்கப்பட்டபின் நான்முகன் என்றே ப்ரஸித்₃தி₄ அடையப்போகிறான் என்பதை உட்கொண்டு சதுர்முக₂ன் *(நான்முகன்)* என்று வழங்கியிருக்கலாம்.

*"யோ ப்₃ரஹ்மாணம் வித₃த₄ாதி பூர்வம் யோ வை வேத₃ாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை"* [ஶ்வே 6-18] [எவன் பிரமனை முதலில் படைத்தானே, எவன் வேத₃ங்களை அவனுக்கு உபதே₃ஶித்தானே] *"நாராயணாத் ப்₃ரஹ்மா ஜாயதே"* [நாராயணேபநிஷத்] [நாராயணனிடமிருந்து பிரமன் பிறக்கிருன்] என்று வேத₃ங்கள் 'நாராயணனே பிரமனைத் தன் உந்தித் தாமரையில் படைத்து, அவனுக்கு வேத₃ங்களை உபதே₃ஶிக்கிருன்' என்று கூறியிருக்கின்றன. ஆயிரக்கணக்கான இதிஹாஸ புராண வசனங்களும் இதை ஆதரிக்கின்றன.

*"தாமரைப்பூவினுள் பிறந்தோனும் தாதையும்*
*நீ என மொழியுமால் அந்தணர் அருமறை'* [பரிபாடல் 3]

என்று சங்ககாலச் சான்ருேர்களும், *"நாபி₄ப்ரரூட₄ாம்பு₃ருஹாஸநேந ஸம்ஸ்தூயமாந: ப்ரத₂மேந த₄ாத்ரா। அமும் யுக₃ாந்தோசித யோகநித்₃ர: ஸம்ஹ்ருத்ய லோகாந் புருஷோதி₄ஶேதே॥'* [ரகு₄வம்சம் 13-6] [உந்தியிலிருந்து தோன்றிய தாமரையை ஆஸனமாகக்கொண்ட முக்₂யனை பிரமனல் துதிக்கப்பட்டவனுய், உலகனைத்தையும் ஸம்ஹரித்து, ப்ரளய காலத்திற்குரிய யோக₃நித்₃ரையை மேற்கொண்டவனுய் இந்த நீரிலே பரமபுருஷன் ஶயனித்திருக்கிருன்.] என்று சிவ ப₄க்தனை காளித₃ாஸனும் இதையே வலியுறுத்தியிருக்கின்றனர். இவற்றுக்கெல்லாம் முரணுகத் தாமஸபுராணங்களைக்கொண்டு பிற்காலத்தில் வந்த நாயன்மார்கள் முதலான சைவர்கள் வேத₃த்தை சிவன் புதிதாக உரைத்தான் என்று கூறுவது எப்படிப் பொருந்தும்? வேத₃ம் பரம்பொருளை உள்ளிட்ட எவராலும் செய்யப்படாதது என்பது பல வேத₃வாக்யங்களிலிருந்தும், ஸ்ம்ருதிதிஹாஸ ஸாத்விகபுராண வாக்யங்களிலிருந்தும் விளங்குகிறது. இதற்கு முரணுகத் தாமஸ புராணங்கள் சொல்லுவது ஏற்கத்தக்கதன்று. சிவாக₃மங்களில் வேத₃த்துக்கு முரணுகத் தத்வ ஹித புருஷார்த்த₂ங்கள் கூறப்படுகின்றன. இதனலேயே ப்₃ரஹ்மஸூத்ரத்திலும் பஶுபத்யதி₄கரணத்தில் அவ்வாக₃மத்தை அடிப்படையாகக் கொண்ட சைவமதம் குத்₃ருஷ்டிமதம் என்று தள்ளப்பட்டது. **ஆகை**யால் வைதி₃கர்கள் அதை ஏற்கமாட்டார்கள்.

6. (iii) நாராயணோபநிஷத்தில் — நாராயணனிடமிருந்து பிரமன், உருத்திரன் மாத்திரமல்லாமல் இந்திரன் முதலான மற்றும் பலரும் உண்டானதாக ஓதப்படுகிறது. இதிலிருந்து, நாராயணன் பிரமனைத் தன் நாபீகமலத்தில் நேரே படைத்தான் என்றும், உருத்திரன், இந்திரன் முதலான மற்றும் பலரைப் பிரமன் முதலானோர்க்கு அந்தர்யாமியாயிருந்து கொண்டு அவர்கள் மூலம் படைத்தான் என்றும் விளங்குகிறது. உண்மையில் நாம் அனைவருமே நம் தாய் தந்தையர்கட்கு அந்தர்யாமியான நாராயணனால் படைக்கப்பட்டவர்களே. ஆகையால் 'நாராயணனிடமிருந்து உருத்திரன் பிறந்தான்' என்று நாராயணோபநிஷத் சொல்லுவதற்கும் 'பிரமன் உருத்திரனைப் படைத்தான்' என்னும் மற்றும் பல வேதவாக்யங்களை அடியொற்றி 'நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்' என்று திருமழிசையாழ்வார் அருளியதற்கும் எவ்விதமான முரணும் இல்லை. அல்லது ஒரு கற்பத்தில் பிரமனையும் சிவனையும் நாராயணன் தானே படைத்தான் என்றும், மற்றொரு கற்பத்தில் பிரமனை நேரே படைத்து, அவன் மூலம் சங்கரனைப் படைத்தான் என்றும் கொண்டும் முரணில்லாமல் நிர்வஹிக்கலாம். மும்மூர்த்திகளுக்கும் மேற்பட்ட நான்காவதொன்று பரம்பொருள் என்பது— "நாராயண பரம் ப்ரஹ்ம தத்த்வம் நாராயண: பர:" [தை-நா-11] "அக்நிரவமோ தேவதாநாம் விஷ்ணு: பரம:" [யஜுஸ்ஸம்ஹிதை 5-5] [அக்நி தேவதைகளுக்குள் மிகத் தாழ்ந்தவன்; விஷ்ணு தனக்குமேல் ஒருவன் இல்லாதபடி மிகவுயர்ந்தவன்] முதலான பற்பல வேதவாக்யங்களுக்கும், நூற்றுக்கணக்கான ஸ்ம்ருதி இதிஹாஸ ஸாத்விகபுராண வாக்யங்களுக்கும் முரண்பட்டது. உலகத்திலும் பிரமன், விஷ்ணு உருத்திரன் என்னும் மூவர்க்கே கோவில் முதலானவையும், உருவம் முதலானவையும் காண்கின்றனவேயொழிய நான்காவதான ஒரு பரமசிவனுக்கோ, பராசக்திக்கோ அல்லது மற்றொன்றுக்கோ கோவில், உருவம் முதலானவை காணப்படுவதில்லை. ஆகையால் 'மும்மூர்த்திகளில் ஒருவனையே, அதிலும் வேதம் பரம்பொருளாக ஓதும் விஷ்ணுவையே' பரம்பொருளாகக்கொள்வதே பொருத்தம் என்று இதிஹாஸகாலம், சங்ககாலந்தொடங்கி நம்நாட்டிலுள்ள ப்ராசீன வைதிகர்கள் அனைவரும் நிர்ணயித்தார்கள். அக்

காலத்தில் சிவனைப் பரம்பொருளாகக்கூறும் சைவ மதம் தலையெடுக்கவில்லை என்பது காணத்தக்கது. சிவனுக்கு ஶ்ருதி முதலான ப்ரமாணங்களில் தாழ்வுகள் கூறப்பட்டுள்ளமையாலே இது தவிர்க்கமுடியாததாயிற்று. பிற்காலத்தில் சிவ பக்தர்கள் சிவனுக்குப் பரத்வம் கூறத் தலைப்பட்டனர். 'சிவனுக்குத் தாழ்வுகளைக்கூறும் ஶாஸ்த்ரவாக்யங்களை என் செய்வது?' எனும் கேள்வி எழுந்தது. அதற்கு பதிலாக "அந்த சிவன் முப்மூர்த்திகளில் அடங்கியவன். எங்களுடைய பரமசிவன் மும்மூர்த்திகளுக்கும் மேற்பட்டவன்" என்று கூறத் தலைப்பட்டார்கள். த்ரிமூர்த்யுத்தீர்ணவாதமும் இப்படியே மிகப் பிற்காலத்தில் எழுந்தது என்பது நம் நாட்டில் வழங்கும் ஶாஸ்த்ரங்களையும், இலக்கியங்களையும் ஆராய்வார்க்கு எளிதில் விளங்கும். பரமசிவனுக்கும், மும்மூர்த்திகளில் ஒருவனான சிவனுக்கும் தனித்தனிக் கோயில்கள் இல்லை என்பதைக் காணும் நடுநிலையாளர்க்கு இவ்விஷயம் நன்கு விளங்கும். பார்வதிக்குப் பதியாயிருக்கை, முருகனுக்குத் தந்தையாயிருக்கை, சந்திரன், பாம்பு, எலும்பு, மண்டையோடு முதலானவற்றை அணிந்திருக்கை, சுடலைப்பொடி (சுடுகாட்டுச்சாம்பல்) பூசிக்கொண்டிருக்கை முதலான எந்த லக்ஷணங்களை த்ரிமூர்த்திகளில் ஒருவனான சிவனுக்கு எல்லா ஶாஸ்த்ரங்களும், எல்லா ஜனங்களும் கூறுகின்றனரோ, அந்த லக்ஷணங்கள் அனைத்தையும் சிவனைப் பரம்பொருளாகக் கூறும் நாயன்மார்கள் சிவனுக்குக் கூறுகின்றனர். முப்மூர்த்திகளுக்குட்பட்ட சிவன் செய்த காரியங்களான பிரமன் தலையைக்கிள்ளியதால் கையில் ஒட்டிக்கொண்ட ப்ரஹ்ம கபாலத்தில் பிச்சை ஏற்றது, திரிபுரம் எரித்தது, ரிஷி பத்தினிகளின் கற்பைக் கெடுத்தது, மோஹினியுருவம்கொண்ட திருமாலைக் காமாவேஶத்துடன் துரத்திச் சென்றது முதலான "பெருமை"களை நாயன்மார்கள் முதலான சைவர்கள் தங்கள் பரமசிவனுக்கும் ஒப்புக்கொள்கிறார்கள். இப்படியிருக்கும்போது, சிவன் வேறு, பரமசிவன் வேறு என்று எப்படிக் கொள்ளமுடியும்? ஆகையால் மும்மூர்த்திகளுக்கும் மேற்பட்டதொன்றே பரம்பொருள் எனும் உத்தீர்ண வாதமும் அடியோடு பொருந்தாது. பரம்பொருளைச் சிவன் முதலான ஶப்தங்களால் குறித்திருக்கும் சில வேத வாக்யங்களைக்கொண்டு மும்மூர்த்திகளுக்கும் மேற்பட்ட பரம

சிவனைக் கற்பிக்கப் பார்த்தால், பரப்பொருளை இந்த்ரன், ஹிரண்ய கர்ப்பன் முதலான ஶப்தங்களாலும் சிற்சில வேத வாக்யங்கள் குறித்திருக்கையாலே பரம இந்த்ரன், பரம சதுர் முகன் முதலானவர்களையும் கற்பிக்கவேண்டிவரும். ஆகையால் பற்பல வேதவாக்யங்களில் பரம்பொருளாக முழங்கப்படுபவனும், தாழ்வுகள் எதுவும் ஓதப்படாதவனும், வேறெவர்க்கும் ஆக்கவொண்ணாத தனிப்பெரும் பெயரான நாராயண ஶப்தத்தால் சொல்லப்படும் திருமாலே பரம்பொருள் என்றும், அவனுடைய முதல் அவதாரமாயிருப்பவன் மும்மூர்த்திகளுள் ஒருவனான விஷ்ணு என்றும், பிரமன், உருத்திரன், இந்திரன் முதலான மற்ற அனைவரும் அவனால் படைக்கப்பட்டவர்களே என்றும் கொள்வதே ஶாஸ்த்ரங்களுக்கும், உலக நடைமுறைக்கும் மிகப் பொருந்தியதாகும்.

7. வேதங்களும், ஸ்ம்ருதிதிஹாஸ ஸாத்விக புராணங்களும் நாராயணனே பிரமன், உருத்திரன் முதலான அனைவரையும் படைத்தான் என்று முழங்கினவேயொழிய, பிரமனோ, வேறு எவனோ நாரணனைப் படைத்தான் என்று எங்கும் கூறவில்லை. பரிபாடல் முதலான சங்க நூல்களில் சங்ககாலச் சான்றோர்களும் இதை இசைந்துள்ளனர். ஆகையால் சிவன் மூலகாரணம் என்பது சங்ககாலத்திற்கு மிகப் பிற்காலத்தில் போட்டியாக எழுந்த கொள்கையேயாகும்.

8. "பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ" [யஜு காடக 3-9-55] முதலான (பக்கம் 20 இரண்டாவது பதிலில் எடுக்கப்பட்ட) வேத வாக்யங்கள், அனைவர்க்கும் பிதாவான பரமாத்மா தன் பிள்ளைகளை ரக்ஷிப்பதற்காக எல்லா யோனிகளிலும் பிறக்கிறான் என்றும், அவனைப் பரமாத்மாவாக உணராதவன் அறிவிலி என்றும் முழங்கியிருக்கும்போது, யோனிகளில் பிறப்பதைக்கொண்டுத் திருமாலுக்குத் தாழ்வுகள் சொல்லுவது அறிவின்மையின் பாற்பட்டதேயாகும். 'பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோரிலையே' [பரிபாடல் 3] என்று சங்க காலச் சான்றோர்களும், திருமால் மற்றொருவனால் பிறப்பிக்கப்படவில்லை என்றும், கிணற்றில் விழுந்த குழந்தையை எடுக்கத் தானும் விழும் தந்தையைப்போலே தன் குழந்தைகளை ரக்ஷிப்பதற்குத் தன் விருப்பத்தாலேயே எல்லா யோனி

களிலும் பிறக்கிறான் என்றும் தெளிவாக அறிவித்தனர். ஶாக்லயஜுர் வேத₃த்தைச் சார்ந்த ஶதபத₂ ப்₃ராஹ்மணத்தில் "பிரமன் 'உஷஸ்' எனும் தே₃வியிடம் வீர்யத்தை விட்டதால் சிவன் பிறந்தான்" என்றும், "அவன் பிறந்தவுடனேயே 'என் பாபம் நீங்கவில்லையே, என் பாபங்கள் போவதற்கு எனக்குப் பரமாத்மாவின் பெயர்களையிடுவாய்' என்று அழுதான்" என்றும், அதற்குமேல் "ருத்₃ரன், ப₄வன், ஶர்வன், ஈஶானன் முதலான பரமாத்ம நாமங்களைப் பிரமன் சிவனுக்கு இட்டான்" என்றும் ஓதியிருப்பதையும், மற்றும் பல வேத₃வாக்யங்களில் சிவனுக்குப் பிரமனிடமிருந்து பிறப்பை ஓதியிருப்பதையும் உணர்ந்த வைதி₃கர்கள் அதற்கு முரணாகத் தாமஸ புராணங்கள் கூறுவதை ஏற்கமாட்டார்கள்.

9 22, 23, 24 பக்கங்களில் கூறியபடி, தாமஸ புராணங்களிலேயே உள்ள ஶ்ருதி விருத்₃த₄மான இக்கதைகளை அறிவாளிகள் ஏற்கமாட்டார்கள். தமிழ்நாட்டிலுள்ள சைவர்கள் இந்தப் பொய்க்கதைகளை உண்மைபோல் தோன்றவைப்பதற்காகக் கோயில்கட்டிக்கொண்டிருப்பதால் இவை உண்மையாகிவிடா. சங்ககாலச் சான்றோர்களும், ஆதி₃சங்கரர் முதலான மதப்ரவர்த்தகர்களும், காளித₃ாஸன் முதலான ப்ராசீன சிவப₄க்த கவிகளும் இக்கதைகளில் ஒன்றைக்கூடக் கையாளாததிலிருந்து இவை பிற்காலக் கற்பனையே என்று நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும்.

10, 11. முன் பாராவில் கூறிய பதிலே இவற்றுக்கும் பொருந்தும். 'தத் புருஷஸ்ய விஶ்வம்' [பு-ஸூ] உலகனைத்தும் விஷ்ணுவினுடையது.] என்று வேத₃த்தில் ஓதப்பட்டபடியே, விஷ்ணுவினுடைய பூ₄மியை மாவலி தன்னுடையதென்று ஆணவத்தாலே நினைத்தான். உண்மையில் அவனை அழிப்பதும் தக்கதே. எம்பெருமான் தன்னுடைய மஹாகு₃ணத்தாலே அவனை அழிக்காமல், தன்னை யாசகனாக்கிக்கொண்டு மூவடி மண்ணை இரந்து பெற்று, அவனையும் பாதாளத்தில் வைத்துப் பெரிய போ₄க₃த்தை அநுப₄விக்கும்படி செய்ததில் எக்குறையுமில்லை. இதனாலேயே உலகளந்த இவ்வருஞ்செயலைப் பற்பல வேத₃வாக்யங்கள் வாய்வெருவின. "அடியளந்தான் தாஅயதெல்லாம்" என்று திருவள்ளுவரும் இவ்வேத₃வாக்யங்களை

உட்கொண்டு, திருமால் உலகனைத்தையும் அளந்திருப்பதை ஆதாரத்தோடு குறித்தார். இதிலும் குறை காணுவது குணத்தையும் குற்றமாகக் காணும் இயல்பையே காட்டுகிறது.

12. பரம்பொருளான திருமால் பிரமனும், சிவனும் வரங்கொடுத்துக் கொழுக்க வைக்கப்பட்ட இராவணனை அழித்து, அந்த தேவர்களையும், அவர்கள் கொடுத்த வரங்களையும் காப்பாற்றுவதற்காக மனிதனாகவே பிறந்து மனிதனாகவே வாழ்ந்து காட்டினான். அத்தகைய இராமன்பால் வசைமாரிசனை அள்ளி வீசுவதும், இராவணனைக்கொன்ற கொலைப்பாவம் நீங்குவதற்காகத் தன் பெயரால் இலிங்கம் நிறுவி வழிபட்டான் என்று பொய்க்கதைகள் புனைவதும் சைவர்களுடைய நன்றியின்மையையே காட்டுகிறது. வால்மீகி ராமாயணம் முதலானவற்றில் இராமன் மனிதனாகப் பிறந்து வாழ்ந்தாலும், பிரமனுக்கும், சிவனுக்கும் மேற்பட்ட பரம்பொருளே என்று முழங்கியிருப்பதைக் காண்பார் இவ்வசைமாரிகளைக்கண்டு கலங்கமாட்டார்கள். பிறக்கும்போதே பாபங்களால் பீடிக்கப்பட்டவனாக ஶதபதப்ராஹ்மணத்தில் ஓதப்படும் சிவன், புஸ்மாஸுரன் முதலானவர்களால் வந்த இடர்களைத் தவிர்க்க முடியாமல் தவித்த சிவன், எப்படி 'மஹேஶ்வர' ஶப்தத்துக்கு முக்யார்த்தமாக முடியும்? தைத்திரீய நாராயணவல்லியில் அகாரவாச்யனான விஷ்ணுவே மஹேஶ்வரனுவான் என்று முழங்கப்பட்டது. ஶ்வேதாஶ்வதரமும் இவனையே மஹேஶ்வரன் என்கிறது என்பது தெளிவு. அப்படியிருக்க, அவனால் படைக்கப்பட்டு, ரக்ஷிக்கப்பட்டு, அழிக்கப்படுமவர்களாக வேதத்தில் ஓதப்படும் சிவன் முதலானோர் எப்படி 'மஹேஶ்வர' ஶப்தத்துக்கு முக்யார்த்தமாக முடியும்? அதனாலேயே, சிவனை மஹேஶ்வரன் என்பதும், இந்திரனை மஹேந்த்ரன் என்பதும் கள்ளிச்செடியை மஹாவிருக்ஷம் என்று கூறுவதை ஒக்கும் என்று சான்றோர் கூறுவர்.

13. இதில் சொல்லப்பட்ட விஷயங்களுக்கு எந்த ஆதாரமும் காட்டப்படவில்லை. பரசுராமரையும் பலதேவரையும், கண்ணனையும் பற்றிப் பேசும் ஸ்ம்ருதி இதிஹாஸ ஸாத்விக புராணங்களில் அவர்களை எவ்விடத்திலும் சிவபக்தர்களாகக்

குறிப்பிடவில்லை. ராஜஸ, தாமஸ புராணங்களில் இப்படிக் குறிப்பிட்டிருந்தால் அது ஸாத்விகர்களால் ஏற்கத்தக்கதன்று. இதிஹாஸங்களில் சிறந்ததான ஸ்ரீராமாயணத்தில் "ரிஷிக₃ணங்களோடு கூடிய தே₃வர்கள் சிவனைக் காட்டிலும் விஷ்ணுவே பெரியவன் என்று அறுதியிட்டனர்" என்று பரசுராமர் ராமபிரானிடம் முழங்குகிறார். அவரோ, கண்ணனின் தமையனை ப₃லதே₃வனோ, பா₃ணாஸுர யுத்₃த₄த்தில் சிவனைப் புறமுதுகிட்டு ஓடச் செய்த கண்ணனோ எப்படி சிவ ப₄க்தர்களாக முடியும்? இனி, க₃ஜேந்த்₃ர வ்ருத்தாந்தத்தை ஆராய்வோம். இன்றும் லக்ஷக்கணக்கான பிரதிகள் அச்சிடப்பெற்று நம்நாடு முழுவதும் பரவியிருப்பதாய், தந்தையான வேத₃வ்யாஸரைக் காட்டிலும் பெருமைபெற்ற ஶுகப்₃ரஹ்மரிஷியால் அருளிச்செய்யப் பட்டதான பரமஸாத்விக புராணமான ஸ்ரீமத்₃பா₄க₃வதத்தில் எட்டாவது ஸ்கந்த₄த்தில் 3, 4-வது அத்₄யாயங்களில் இந்த வ்ருத்தாந்தம் விவரிக்கப்பட்டுள்ளது. இதில் க₃ஜேந்த்₃ரன் கூவி அழைக்கும்போது, "'ஆதி₃மூலமான பரம்பொருள் என்னை ரக்ஷிக்கவேண்டும்' என்று அழைத்தானேயொழிய, விஷ்ணுவுக்குரிய தனி அடையாளங்களான நாராயணன் முதலான நாமங்களையோ, *ஶ்ரிய:பதித்வம், ஶங்க₂ சக்ர த₄ரத்வம்* முதலானவற்றையோ சொல்லி அழைக்கவில்லை" என்று காட்டப் பட்டுள்ளது. இவ்வண்ணமாக, "எவன் எல்லா தே₃வர்களுக்கும் எல்லா உலகிற்கும் காரணமோ, எவன் மோக்ஷமளிப்பவனோ அவன் என்னை ரக்ஷிக்கட்டும்" என்று க₃ஜேந்த்₃ரன் அழைத்தபோது "*ஏவம் க₃ஜேந்த்₃ரமுபவர்ணித நிர்விஶேஷம் ப்₃ரஹ்மாத₃யோ விவித₄ லிங்க₃பி₄தா₃பி₄மாநா:। நைதே யதோ₃பஸஸ்ருபுர் நிகி₂லாத்மகத்வாத் தத்ராகி₂லாமரமயோ ஹரிராவிராஸீத்*॥" [பா₄க₃வதம் 8-3-30] [இப்படி க₃ஜேந்த்₃ரன் இன்னாரென்று குறிப்பிடாமல் பொதுவாகப் பரம்பொருளைக் கூப்பிட்டபோது, தந்தமக்குரிய அடையாளங்களையே தாமாக நினைத்திருந்த பிரமன் முதலான மற்ற தே₃வர்கள் எவருமே அங்கு வரவில்லை. எல்லாப் பொருள்கட்கும் அந்தர்யாமியாயிருக்கையாலே எல்லா தே₃வர்களுக்கும் அந்தராத்மாவாயுள்ள ஹரியானவர் அவ்விடத்தில் தோன்றினார்.] என்று தொடங்கி, ஆதி₃மூலமாயிராமையாலே பிரமன் முதலான மற்ற தே₃வர்கள்

அங்கு வராமல் இருந்தபோது, ஸர்வகாரணனுய், ஸர்வாந்தர் யாமியான எம்பெருமான் அங்கு வந்து கஜேந்திரனுக்கு முதலே யினுல் வந்த இடரைப் போக்கியதாகவும், *''தத₃ா தே₃வர்ஷி க₃ந்த₄ர்வா ப்₃ரஹ்மேமஶாந புரோக₃மா:। முமுசு: குஸுமாஸாரம் ஶம்ஸந்த: கர்ம தத்₃த₄ரே: ॥''* [ப₄ாக₃வதம் 8-4-1] [அப்போது பிரமன், சிவன் முதலான தே₃வர்களும், ரிஷிகளும், க₃ந்த₄ர்வர்க ளும் ஹரியினுடைய அச்செயலைப் புகழ்ந்து மலர்மாரி பொழிந்த னர்.] என்கிறபடியே பிரமன், சிவன் முதலானுர் ஆதி₃மூலமான நாரணன் வாரணத்தைக் காத்தவுடன், அவ்வாதி₃காரணனைத் துதித்து மலர்மாரி பொழிவார் குழுவிலேயே இருந்தனர் என்றும் ஸ்ரீப₄ாக₃வதத்தில் இந்த வ்ருத்தாந்தம் விவரிக்கப்பட்டுள்ளது. திருமாலே ஆதி₃மூலமான பரம்பொருள் என்று கையிலங்கு கனியாகக் காட்டித்தரும் இந்த வ்ருத்தாந்தத்தை எவ்விதத்தி லும் மறுக்க இயலாமையாலே, எந்த ஆத₄ாரமும் காட்டாமல், "அரசன் ஆணைக்குட்பட்ட ஒருவர் வந்து அருள்புரிதலுங் கூடும்'' முதலான வாக்யங்களை எழுதுவது நேர்மையின்மை யையே காட்டுகிறது.

14. *''கேஶீ விஷஸ்ய பாத்ரேண யத்₃ருத்₃ரேணுபிப₃த் ஸஹ''* [ருக்₃வேத₃ம் மண்ட₃லம் 10—ஸூக்தம் 136-7] [விஷத்தைக் குடிக்கும் பாத்திரம்போல் இருந்த ருத்₃ரனைக்கொண்டு அழகிய கேஶபாஶங்களை உடைய, அல்லது ப்₃ரஹ்மருத்₃ரர்களுக்குத் தலைவனுன கேஶவனே ஆலகால விஷத்தைக் குடித்தான்] என்று ருக்₃வேத₃த்திலும், "திருமால் சிரித்துக்கொண்டே 'தே₃வர்களில் முதலில் பிறந்த நீயே முதலில் வந்த இவ் விஷத்தைக்கொள்ளவேணும்' என்று கூறி விஷத்தைச் சிவ னுக்கு அளித்தான்' என்று ஸ்ரீராமாயணம் ப₃ாலகாண்ட₃ம் 45-வது ஸர்க்க₃த்திலும் கூறியிருக்கும்போது, சிவன் தன் திறமையினுல் விஷபானம் செய்து தே₃வர்களைக் காப்பாற்றிய தாகக் கூறுவது சிவனிடமுள்ள அபி₄மானத்தையே காட்டு கிறது. சில அஸுரர்களையும் அரக்கர்களையும் சிவனும், முருக னும், காளியும் கொன்றிருப்பதுகொண்டு அவர்களைப் பரம் பொருளாகக்கொள்ள முடியாது. அப்படிக்கொள்வதானுல் வ்ருத்ராஸுரன் முதலானுரைக் கொன்றிருக்கும் இந்திரன் முதலானுரையும் பரம்பொருளாகக் கொள்ளவேண்டிவரும்.

உண்மையில், அசுரராக்கர்களைக் கொன்றது யார் என்பதைக் கொண்டு பரம்பொருள் யார் என்று நிஷ்கர்ஷிக்க இயலாது. அசுரராக்கர்களை ப₄க்தர்களாகக்கொண்டு, அவர்களுக்கு வரங் கொடுத்து, அவர்களுக்கும் தங்களுக்கும் நாட்டிற்கும் கேடு விளைத்துக்கொண்ட பிரமன் சிவன் முதலானோர் பரம்பொருளா, இத்தகைய அனர்த்த₂ங்களை எக்காலத்திலும் விளைக்காதவனாய், தன்னை அடைந்த அசுரராக்கர்களான ப்ரஹ்லாத₃ன், விபீ₄ஷணன் முதலானோர்க்குத் தன்னை அடைந்தவுடனேயே அசுரத்தன்மையையும், அரக்கத்தன்மையையும் நீக்கியவனை நாராயணன் பரம்பொருளா என்று நடுநிலைநின்று ஆராய்ந்தே பரம்பொருளை நிஷ்கர்ஷிக்கவேண்டும். த்ரிபுரஸம்ஹாரத்தை விளக்கிய க்ருஷ்ணயஜுர்வேத₃ம் [காண்ட₃ம் 6 ப்ரஶ்நம் 2] 'சிவன் தான் பஶுபதியாகவேண்டுமென்று தே₃வர்களிடம் வரம் வாங்கிக்கொண்டே த்ரிபுரஸம்ஹாரம் செய்தான்' என்று கூறும். "*விஷ்ணும் தேஜநம்*" என்று அப்போது விஷ்ணுவானவர் அம்பாகவும், சிவனுக்கு அந்தர்யாமியாகவும் இருந்து த்ரிபுராஸுரர்களை சிவனைக்கொண்டு அழிக்கச்செய்தார் என்றும் கூறும். "*விஷ்ணுராத்மா ப₄க₃வத: ப₄வஸ்ய அமித தேஜஸ: । தஸ்மாத் த₄நுர்ஜ்யா ஸம்ஸர்க்க₃ம் ஸ விஷேஹே மஹேஶ்வர: ॥*" [பா₄ரதம் கர்ணபர்வம்] [அளவற்ற தேஜஸ்ஸையுடைய சிவனுக்கு விஷ்ணுவானவர் அந்தர்யாமியாயிருந்தார். அதனாலேயே மஹேஶ்வரனான சிவன் (த்ரிபுராஸுரர்களை அழிக்கும்போது) வில்லில் நாணைப் பூட்ட முடிந்தது.] என்று பா₄ரதத்தில் இவ்விஷயம் விளக்கப்பட்டது. தன்னைக் காட்டிலும் பெரியவரான பிரமன் தனக்கு ஸாரதி₂யாயிருக்கவேண்டுமென்று தே₃வர்களிடம் வேண்டிப் பிரமனைச் சிவன் த்ரிபுரஸம்ஹாரத்தின்போது ஸாரதி₂யாகப் பெற்றதாகவும் பா₄ரதம் கூறுகிறது. த்ரிபுரஸம்ஹாரத்தின்போது மற்றும் பலவிதமாகவும் எம்பெருமான் உதவிபுரிந்ததாக ஸாத்விக புராணங்கள் முழங்குகின்றன. இவற்றிலிருந்து, சிவன் பிரமனை விடவும் தாழ்ந்தவன் என்று விளங்கும்போது த்ரிபுரஸம்ஹாரத்தாலே சிவபரத்வம் எப்படி ஸித்₃தி₄க்கும்? இதையே பிள்ளைப்பெருமாளையங்கார் தம் பரப்ரம்மவிவேகத்தில் "ஆவாய் அதன்கன்றாய் அந்தரியாமிப் பொருளாய், ஏவாய்ப் பவுத்தனுமாய் எம்பெருமான்—காவாக்கால், போரும் பொருமோ புராந்தகனென்றே பேரும், சீரும் பெறுமோ சிவன்" என்று அருளிச்செய்தார்.

15. "பா₄க₃வதர்கள் 'ப₄க₃வத்₃கீ₃தை' எனும் ஒரு பெரிய நூலாக ஆக்கிக்கொண்டனர்" என்று கூறுவது முழுப்பொய். ப₄க₃வத்₃கீ₃தை பா₄ரதத்தின் ஒரு பகுதியாகும். பல்லாயிரக் கணக்கான வருஷங்களாகப் பல மதங்களைச் சார்ந்த நூற்றுக்

கணக்கான சான்றோர்கள் இதற்கு பா₄ஷ்யம் எழுதியிருக்கி றார்கள். ப்ரஸ்தா₂ன த்ரயங்களில் ஒன்றாக இது வைதி₃கர் அனைவராலும் கருதப்படுகிறது. வைதி₃கர்கள் அனைவராலும் க₂ண்டி₃க்கப்பட்டதாய், எம்பெருமானுடைய நியமனத்தாலே சிலரை மயக்குவதற்காகச் சிவனால் செய்யப்பட்ட மோஹ ஶாஸ்த்ரமான சிவாக₃மத்தைப் பற்றிநிற்கும் சைவர் 'கீ₃தோப நிஷத்' என்று உலகம் புகழும் ப₄க₃வத்கீ₃தையை பு₃த்₃த₄ருடைய நூல் போன்றது என்று கூறுவது எள்ளி நகைக்கத் தக்கது.

16. வேத₃வேதா₃ந்தங்கள் "நாராயணன் எல்லா உலகி லும் வியாபித்திருந்து எல்லாமாயிருந்தபோதிலும், ஆகாஶம் போலே அவற்றின் தோ₃ஷங்களால் தொடப்படான்" என் றும், "சிவன் முதலான தே₃வர்களைப் படைத்தளித்து அழிப்பவன் அவனே" என்றும் "மோக்ஷமளிக்கக்கூடியவன் அவன் ஒருவனே" என்றும் முழங்கும்போது, அவற்றிற்கு முரணான கொள்கைகளைக் கூறும் சிவாக₃மங்கள் ஏற்கத் தக்கவையல்ல என்னும் கருத்தினாலேயே, சங்ககாலந் தொடங்கி இன்றளவும் வேத₃த்தை ப்ரமாணமாகக் கொண்ட வைதி₃கர்கள் அவற்றை அநாத₃ரித்தேயிருக்கின்றனர். உண்மை யிவ்வாறிருக்க, 'திருமால் அழுக்குடையவனாகி மாயையினையும் கூடி நிற்பன் எனக்கூறும் வேதா₃க₃மங்களுக்கு முரணான பேச்சு' என்று எழுதுவது, தன் குற்றத்தைப் பிறரிடம் காணும் தன்மையையே காட்டுகிறது.

17, 18. சைவர்கள் கூறும் அடிமுடி தேடிய கதை முதலான நூற்றுக்கணக்கான கதைகளில் ஒன்றுகூட ஶ்ருதி ஸ்ம்ருதீதிஹாஸ ஸாத்விக புராணங்களில் இல்லை. சங்ககாலச் சான்றோர்களாலும், காளிதா₃ஸன் முதலான சிவ ப₄க்த கவிக ளாலும், ஆதி₃ஶங்கரர் முதலான எந்த இதர மத ப்ரவர்த்த கர்களாலும் கையாளப்படவில்லை. தாமஸ புராணங்களிலும் சுமார் 1200 வருஷங்களுக்குட்பட்ட சைவ நாயன்மார்கள் தொடக்கமானவர்களாலேயே கையாளப்படும் இவற்றை நடுநிலையாளர்கள் எப்படி ப்ரமாணமாக ஒப்புக்கொள்ள முடியும்? ஆகையால் சங்ககாலம் தொடங்கி வேத₃ங்களால் பரம்பொருளாக ஓதப்பட்டவன் என்று ப்ரஸித்₃தி₄ பெற்றவனாய், நாராயணன், ஹரி, அனந்தன், அச்யுதன், விஷ்ணு, ஹிரண்ய க₃ர்ப்ப₄ன், சிவன், இந்த்₃ரன், ஆகாஶம், வாயு முதலான கணக்கற்ற நாமங்களை உடையவனாக வேதா₃ந்தங்களில் முழங்கப்படுபவனாய், தன்னால் படைக்கப் பட்ட சிவன், ஆகாஶம் முதலான சேதநாசேதநப் பொருள்க ளுக்குத் தன் நாமங்களில் சிலவற்றை அளித்திருப்பவனான நாராயணன் என்னும் தனிப்பெயரையுடைய திருமாலே பரம்

பொருள் என்று கொள்ளவேண்டுமேயொழிய, தாமஸ புராணங்களில் மாத்திரம் பரம்பொருளாகக் கூறப்பட்ட சிவனைப் பரம்பொருளாகக் கொள்வது தகாது என்பது நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும். ப்₃ராஹ்மணபக்ஷபாதியான திருமால், ப்₄ருகு₃முனிவருடைய சாபத்தை ஏற்றுக்கொண்டு, அதைப் பயன்படுத்திக்கொண்டு அவதாரங்களைச் செய்து, து₃ஷ்ட நிக்₃ரஹ ஶிஷ்டபரிபாலந த₄ர்மஸம்ஸ்த₂ாபனங்களைச் செய்த தால் திருமாலுக்குச் சிறப்பேயொழியத் தாழ்வு எதுவுமில்லை. பாத்₃மம், ப₄ாக₃வதம் முதலானவற்றில் விளக்கப்பெற்றபடி ப்₄ருகு₃முனிவரின் சாபத்தால் சிவன் யோநிலிங்க₃பூஜையைத் தன் ப₄க்தர்களிடமிருந்து இன்றளவும் பெற்றுவருவதே மிகத் தாழ்ந்தது. இதன் விரிவை நமது ஸாத்விகவிஜயத்தில் காணலாம். இவ்விஷயங்கள் பல்லாயிரம் பக்கங்களில் 'விஷ்ணு சித்தவிஜயம்' எனும் க்₃ரந்த₂த்தில் நம்மால் விளக்கப்பட்டு வருகின்றன. வேத₃வேதா₃ந்தங்களைக்கொண்டு விளக்கியிருக்கும் ஆயிரம் பக்கங்களுக்கு மேற்பட்ட முதல் இரண்டு ப₄ாக₃ங்கள் இப்போதும் கிடைக்கும். ஸ்ம்ருதிகளைக்கொண்டு விளக்கும் சுமார் ஆயிரம் பக்கங்கள் கொண்ட மூன்றாவது ப₄ாக₃ம் விரைவில் வெளிவரும். இதிஹாஸ புராணங்களையும், வைதி₃கச் சான்றோர்களுடைய நூல்களையுங்கொண்டு விளக்கும் பல்லாயிரம் பக்கங்கள் கொண்ட பல ப₄ாக₃ங்கள் வெளிவர இருக்கின்றன. விரிவுவேண்டுவோர் அவற்றில் கண்டுகொள்வது.

R. பத்மநாபன் P. U C.. R. கிருஷ்ணன் B. Com (A. C. A.), V. லக்ஷ்மணன் B Sc, R. பக்ஷிராஜன் P.U.C, பாளையங்கோட்டை.

*16. 25-2-79 கல்கி இதழில் 31ம் பக்கத்தில் "கண்ணனும் முக்கண்ணனும்" என்ற தலைப்பில் எம்பெருமான் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் அவதார மஹிமையையும் விஶ்வரூப நோக்கத்தினையும் தவறாகக் குறிப்பிட்டு எழுதியிருக்கிறார் பீடாதி₄பதிகள். "அர்ஜுனனுக்குக் காட்டிய விஶ்வரூபத்தில் அவர் விஷ்ணுவுக்குரிய பரிபாலனத்தைக் காட்டாமல் ருத்ரரூபமாக ஸம்ஹாரம் பண்ணுவதையே காட்டி அவனை நடுநடுங்க வைக்கிறார்." என்று எழுதியிருக்கிறார். இதிலுள்ள மோசடியை அம்பலப்படுத்த வேண்டுகிறோம். மேலும் 'திருக்கோயில்' ஜனவரி 1979 இதழில் "நால்வர் வழி" எனும் கட்டுரையில் ஒரு சைவர் "வைணவ நெறி, சிவ நெறியில் அடங்கியது. இரண்டும் சேர்ந்ததே சைவ சமயம்..........." என்று எழுதியிருக்கிறார். சைவத்தைப் பற்றி எழுதவேண்டிய இடத்தில் வைஷ்ணவத்தை இழுப்பானேன்! பொதுஜனப் பத்திரிகைகளில் இவ்வாறு வைஷ்ணவ தூ₃ஷணம் இடைவிடாமல் வெளிவருவதைச் சகித்துக்கொள்ள எங்களால் முடியாது. இதற்கு உடனடியாகத் தீர்வுகாணவேண்டும்.*

**அதற்கு நாங்கள் அதாவது வைணவ இளைஞர்கள் என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராக இருக்கிறோம். செய்யவேண்டுவது என்ன? என்று காட்டத் தங்களைப் பிரார்த்திக்கிறோம்.**

சைவத்தையோ, அத்₂வைதத்தையோ ஶ்ருதி முதலான ப்ரமாணங்களைக்காட்டி நிலைநிறுத்த முடியாமையால், சைவர்களும், சைவர்களாகிவிட்ட அத்₂வைதிகளும் தங்கள் ஆதிக்கத்திலுள்ள பொதுஜனப் பத்திரிகைகளின் மூலம் வைணவத்தைச் சிறுமைப்படுத்திச் சைவத்தைப் பரப்பநினைக்கிறார்கள். காமகோடிபீடாதி₄பதி எழுதியிருப்பது அவரது மூலபுருஷரான ஆதி₃ஶங்கரரின் கீ₃தாபா₄ஷ்யத்திற்கு முரண்பட்டது என்று நமது "சங்கரரும் வைணவமும்" நூலில் நிலைநாட்டியிருக்கிறோம். இதற்கு பதில்சொல்ல இயலாமல் திருப்பித்திருப்பிப் பொய்யையே கூறிவருகிறார் பீடாதி₄பதி. ஸம்ஹாரம்செய்வது ருத்₃ரனுக்கே உரியது என்பது ஶாஸ்த்ரவாஸனை அறியாதார் பேச்சு. உலகமுண்ட பெருவாயனும், பிரமன் உருத்திரனுள்ளிட்ட அனைவரையும் ஸம்ஹரிப்பவன் திருமாலே என்று வேத₃வேதா₃ந்தங்கள் முதலான ப்ரமாணங்களனைத்தும் முழங்குகின்றன. கணக்கற்ற அசுரராக்கர்களை ஸம்ஹரித்து, சிவன் முதலானவர்களை ரக்ஷித்தவன் திருமாலே என்று வேத₃ங்களும், இதிஹாஸங்களும், ஸாத்விகபுராணங்களும் பேசுகின்றன. திருமாலுக்கும், சிவனுக்குமுள்ள இரு நாமங்களின் வாசியைப் பார்த்தாலே இருவருடைய ஸம்ஹாரமும் எத்தகையது என வடமொழியிலக்கணம் வல்லார்க்கு எளிதில் விளங்கும். 'ஹரி:' என்பதும், 'ஹர:' என்பதும் முறையே திருமாலுக்கும், சிவனுக்கும் பெயர்கள்; இரண்டும் 'ஸம்ஹரிப்பவன்' என்னும் பொருளையுடையதாயினும் 'ஹரி' ஶப்₃த₃த்திலுள்ள 'இ' எனும் விகுதி ஸம்ஹரிப்பதை இயல்வாகக்கொண்டவன் எனக்காட்டும். இதனால் ஸம்ஹாரத்தொழிலை இயல்வாகக்கொண்டவன் ஹரி என்றும், ஹரியின் ஸங்கல்பத்தால் செயற்கையாக வருவது சிவனுக்கு ஸம்ஹாரத்தொழில் என்றும் இலக்கணம் வல்லார்க்கு விளங்கும். ஒரு சாஸ்த்ரமும் அறியாதவர்கள் சொன்னதையே சொல்லிக்கொண்டிருப்பதை நாம் பொருட்படுத்தவேண்டாம். "திருமாலைப் பரம்பொருளாகக்கொண்ட வைணவம், சிவனைப் பரம்பொருளாகக்கொண்ட சைவத்தில் அடங்கியது" என்பது முன்னுக்குப்பின் முரணல்லவா? இதைக்கூட அறியாமல் ஒருவர் எழுதுவதும், அதை நடுநிலை வகிக்கவேண்டிய "திருக்கோயில்" வெளியிடுவதும் நம் நாட்டின் சாபக்கேடு. இவற்றுக்கெல்லாம் பரிஹாரத்தை அடுத்தமாதம் (ஸித்₃தா₄ர்த்தி₂ ஆனி) ஸுத₃ர்ஶனம் தலையங்கத்தில் காட்ட இருக்கிறோம். இளைஞர்கள் வீறுகொண்டு எழுந்து செயல்படுக.

(கொத்தட்டை) பண்டாரி சௌரிராஜய்யங்கார், ஸ்ரீரங்கம்.

*17. "சைவக்கோயில்களில் பிராம்மணர்கள், பூஜையோ, மூல விக்கிரகங்களைத்தொட்டு அபிஷேகமோ, அர்ச்சனையோ செய்யக் கூடாது என்பது ஆகமவிதி. ஆதிசைவர்கள் என்ற இனத்த வர்கள் தாம் அந்தக் கைங்கர்யத்தைச் செய்யலாம். இவர்களைப் பட்டர்கள் என்றும் அழைப்பது உண்டு. திருமந்திரத்தில் திருமூலர், இதுபற்றி மிகத் தெளிவாகவே கூறியிருக்கிறார்— "பேர்கொண்ட பார்ப்பான் பிரான்தன்னை அர்ச்சித்தால், போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம், பார் கொண்ட நாட்டுக்குப் பஞ்சமுமாம் என்றே, சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத்தானே" — என்று 'கலைமகள்' 79-மே இதழில் 'நம்பிக்கைகள்' எனும் ஒரு தொடர்கதையில் எழுதப்பட்டுள்ளது. இது உண்மையா? ஏன் இப்படி உள்ளது? என்று விளக்க வேண்டுகிறேன்.*

ப்₃ராஹ்மணர்களால் பூஜிக்கத்தக்க தெய்வம் ஸ்ரீமந் நாராயணன் ஒருவனேயாவான். "ப்₃ரஹ்மண்யோ தே₃வகீ புத்ரோ ப்₃ரஹ்மண்யோ மது₄ஸூத₃நோம்" என்று நாரா யணோபநிஷத்தில், ப்₃ராஹ்மணர்களால் பூஜிக்கத்தக்க ப்₃ரஹ் மண்யன் தே₃வகீபுத்ரனே என்று முழங்கப்பட்டது. இதிஹாஸ புராணங்களிலும் ஏராளமான இடங்களில் ஸ்ரீமந்நாராயணன் ஒருவனே ப்₃ராஹ்மணர்களால் பூஜிக்கத் தக்கவன் என்றும், மற்ற தெய்வங்களுக்கு இப்பெருமை இல்லை என்றும் காட் டப்பட்டது. பாத்₃ம புராணத்தில் ஸாத்விக தே₃வதா நிர்ணய ப்ரகரணத்தில் ப்₄ருகு₃ மஹரிஷியானவர் மும்மூர்த்திகளையும் நேரில் சென்று பரீக்ஷித்து, ஸாத்விக தே₃வதையான விஷ்ணுவே வேத₃ம் ஓதும் அந்தணர்களால் ஆராதி₄க்கத் தக்கவன் என்றும், ராஜஸ தாமஸ தே₃வதைகளான பிரமன், சிவன் முதலானோர்க்கு இப்பெருமை கிடையாது என்றும் தெளிவாக அறுதியிட்டார். இது நமது ஸாத்விக விஜயத்தில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. இதையே 'அந்தணர் கற்பினை' [பெரிய-திரு 7-10-6] என்று திருமங்கையாழ்வார் உணர்த்தினார். கவிச்சக்ரவர்த்தியான கம்பனும் தனது ராமாயணம் ஆரண்ய காண்டம் விராதன் வதைப்படலத்தில் "அந்தணர்மாட்டு

அருந்தெய்வம் நின்னலால் இல்லாமை நெறிநின்றார் நினை யாரே'' என்று இவ்விஷயத்தை மிகத் தெளிவாக நிலைநாட்டி னான். ஆபத்துக்காலத்தில் ஆதிசங்கரர் பாடியதாக அத்₃வைதி கள் கூறும் ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ கராவலம்ப₃ஸ்தோத்ரத்திலும் நரஸிம்ஹன் ''ப்₃ரஹ்மண்ய'' என விளிக்கப்பட்டுள்ளான். '' இது நாயன்மார்களில் ஒருவரான திருமூலராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. சைவாக₃மத்திலும் உள்ளது'' என்று எடுத்துக்காட்டிய கலைமகளுக்கு நாம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம். 'நாராயணனைத் தவிர மற்ற தெய் வங்கள் ப்₃ரஹ்மண்யர்களல்லர்' என்னும் பழியைத் துடைத் துக் கொள்வதற்காக, காலக்ரமத்தில் சைவர்களான ஸ்மார்த்த ப்₃ராஹ்மணர்கள் 'குமாரன்' 'ஸ்கந்த₃ன்' என்று ப்ரஸித்₃தி பெற்ற முருகனுக்கு 'ஸுப்₃ரஹ்மண்யன்' என்று பெயர் வைத்துக்கொண்டார்கள். அப்படிப் பெயர் வைத்துக் கொண்டாலும் பெரும்பாலான முருகன் கோவில்களில் வேத₃ மோதும் அந்தணர்கள் ஆராதி₄ப்பதில்லை என்பது கண்கூடாகக் காணக்கிடக்கிறது.

S. வேங்கடம், சமயபுரம்.

*18. மே'79 கலைமகளில் 'உள்ளுவாருள்ளத்து உளன்' எனும் கதையில் 'பிரேமா நந்தகுமார்' எனும் அம்மையார் திருமழிசை யாழ்வாரை முக்கிய பாத்திரமாக வைத்து, அவரும் அவரது ஆசார்யரான பேயாழ்வாரும் சமரசம் பேசுவதாகக் கதைத் திருக்கும் கொடுமையைக் கண்டிக்க வேண்டுகிறேன்.*

ஸுதர்சனர் பதில் 2-வது சதகத்தில் 90-வது கேள்வி பதில்களில் காட்டப்பட்டபடி, பெரியாழ்வாரைப் பாத்திர மாக்கி ஒரு கற்பனைக் கதை எழுதி, அவரைச் சமரசவாதி₃ யாக்க முயன்ற இந்த அம்மையார் இப்போது திருமழிசை யாழ்வாரிடத்திலேயே தன் கதைக்கும் திறனைக் காட்ட முன் வந்துள்ளார் என்று விளங்குகிறது. திருமழிசையாழ்வார் 'நான்முகன் திருவந்தாதி' 'திருச்சந்தவிருத்தம்' என்னும் தம் இரு பிரபந்தங்களிலும் சிவனுடைய தாழ்வுகளைச் சுமார் நூறு பாசுரங்களில் காட்டியிருக்கிறார். அந்த இரு பிரபந்தங்களிலுமே சில துணுக்குகளை எடுக்கும் இந்த அம்மையார் சிவனைக் காட்டிலும் விஷ்ணுவின் பெருமையை நிலைநாட்டும் அந்த நூறு பாசுரங்களுக்கும் முரணாக, திருமழிசையாழ்வாரைச் சமரசவாதியாகவும், ஸம்ஶயாத்மாவாகவும் சித்திரிக்கிறார்.

'சிறியார் சிவப்பட்டார்' என்று சைவத்தைக் கண்டித்திருக்கும் திருமழிசையாழ்வாரைப்பற்றி இப்படி எழுதத் துணிந்த அம்மையாருக்குப், அதை வெளியிட்ட கலைமகளுக்கும் 'ஸத்ய வசநம்' எனப்படும் தலைசிறந்த தர்மமான வாய்மையில் நம்பிக்கையேயில்லை என்று விளங்குகிறது. "அலரெடுத்த வண்ணத்தான் மாமலரான் வார்சடையான் என்று இவர்கட்கு எண்ணத்தானாமோ இமை" [மூன்றாந்திருவ. 97] என்னும் பாசுரத்தில் பேயாழ்வார் எம்பெருமானுடைய பெருமைகளில் ஒரு சிறு திவலையைக்கூட இந்திரன், பிரமன், சிவன் ஆகியவர்களால் அறியமுடியாது என்று முழங்குகிறார். இத்தகைய பரமவைஷ்ணவரான ஆழ்வாரைப்பற்றி "அரநாமத்தைவிட அரிநாமம் மேல் என்று கூடத் திட்டமாகக் கூற இசையவில்லை பேயார். 'உள்ளுவாருள்ளத்து உளன் கண்டாய்' என்று கூறுவதோடு சரி" என்று திருமழிசையாழ்வார் கூறுவதாகக் கூசாமல் பொய் எழுதுகிறார் அம்மையார். திருமழிசையாழ்வாருடைய *ஶிஷ்*யரான கணிகண்ணனை அவருடைய தம்பியாக்கிவிட்டார் 'திரிகால ஞானி'யான அம்மையார். ஜ்ஞாந பக்தி வைராக்யங்களின் சிகரமானவராகத் தம் ப்ரபந்தங்களை ஸேவிக்கும் அறிவாளிகளுக்குக் காட்சியளிக்கும் திருமழிசையாழ்வார் 'எனக்குப் படிப்பே பகை ஆனதடா...ஞானம் வேணுமென அலைந்தேன். ஞானமே சுமையானதப்பா...... தன்னை மறந்து ஈசனை நாடும் சிந்தை இழந்தேன். புழுதியில் சுழலும் அணுருபமான ஆண்டவனை(!) அறிந்துகொள்ளும் ஆற்றலை அடையமுடியாமல் என் ஞானமே எனக்குத் தடையாக இருக்கிறது" என்று கணிகண்ணனைப் பார்த்துக் கூறுவதாகக் கதைக்கிறார் அம்மையார். அரசனை நேரில் பார்க்கவும் இசையாதவராகவும், சிவன் வரங்கொடுக்க வந்தபோதும் கந்தைத் துணியுடுத்துக் கந்தையைத் தைத்துக்கொண்டிருந்தவராகவும் குருபரம்பராப்ரபாவங்களும், மற்ற வரலாற்று நூல்களும் ஒருமுகமாக முழங்கும் திருமழிசையாழ்வார், "*நாக்கொண்டு மானிடம் பாடேன்*" [நான்முகன்திருவ. 75] என்று தம் நூலிலேயே முழங்கியிருக்கும் திருமழிசையாழ்வார் "இதோ, தோளில் இடிக்கும் குண்டலங்கள், அரசர் இட்ட கங்கணங்கள், அழுக்கில்லா உயர்ந்த பட்டு, இவை யாவும் இருந்தும் வெற்று வேதாந்த விசாரணை செய்யும் நான்

தானப்பா ஏழை" என்று தாமே கூறுவதாகக் கூசாமல் ப்ரஹ்மாண்டப்புளுகை எழுதுகிறார் அம்மையார். இப்படி இவருடைய கதையிலுள்ள அபத்தங்கள் ஏராளம். சுருங்கக் கூறினால், வரலாற்று நூல்களில் பேயாழ்வாரையும், திருமழிசை யாழ்வாரையும் பற்றி உள்ள செய்திகளில் ஒன்றுகூட இக் கதையிலில்லை. திருமழிசையாழ்வார் தம் நூல்களைத் தாமே கண்டித்துக்கொள்வதாகக் காட்டும் வாக்யங்களும், அம்மை யாரின் சமரச வெறிக்கற்பனையில் தோன்றிய காட்சிகளுமே இப்பொய்க்கதையில் இடம்பெற்றுள்ளன.

கற்புநெறியை உணர்ந்து கைக்கொள்ளவேண்டியவர்கள் பெண்கள். எம்பெருமானைத் தவிர வேறொரு தெய்வத்தைத் தொழாமையாகிற 'மறந்தும் புறந்தொழாமை' என்கிற தலை சிறந்த சமயக் கற்புநெறியைத் தம் பிரபந்தங்களில் பல பாசுரங்களில் நிலைநாட்டியவர் திருமழிசையாழ்வார். அவரைச் சமயக்கற்புநெறி தவறியவராகக் கதையில் சித்திரிப்பது, அதி லும் வைஷ்ணவ குடும்பத்தில் பிறந்தவர் என்று நாம் கேள்விப்படும் ஓர் அம்மையார் அதைச் செய்வது மிகவும் வருந்தத்தக்கதும், அருவருக்கத்தக்கதும், இகழத்தக்கதும் ஆகும். "இப்படி எழுதினால்தான் கலைமகளில் தம் கதை வெளிவரும், தாம் புகழடையலாம்" எனும் எண்ணத்தினால் தான் அம்மையார் இதை எழுதியிருக்கவேண்டும். இத்தகைய கதைகளை எழுதுவதால் உண்மைக்கு மதிப்பளிக்கும் நல்லோர் களின் இகழ்வுதான் கிடைக்கும்; புகழ் கிடைக்காது என்பதை உணர்ந்து, இனியாவது இத்தகைய கதைகளை எழுதி, ஆழ்வார் களிடம் நிஷ்காரணமாக அபசாரப்படுகையாகிற அஸஹ்யாபசா ரத்தை அம்மையார் செய்யாமலிருக்கட்டும். தலைசிறந்த தமிழ்ப் புலவர் என்று பிரஸித்தி பெற்ற கி.வா. ஜகந்நாதனை ஆசிரியராகக் கொண்ட ஒரு பத்திரிகையில், வரலாற்றுக்கு மிக முரண் பட்டதும், கதாநாயகரின் நூல்களுக்கு நேர் மாறானதுமான ஓர் கதை வெளிவந்திருப்பதுபற்றி, கலைமகள் நிர்வாகிகள் மாத்திர மல்ல, தமிழ்கூறும் நல்லுலகமே தலைகுனியவேண்டும். ஆதி சங்கரரையும், சைவ நாயன்மார்களையும்பற்றி இத்தகைய பொய்க்கதை ஒன்றை வெளியிட கி.வா. ஜகந்நாதன் துணிவாரா என்பதை நடுநிலையாளர்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

S. ஸௌம்யநாராயணன், ஸ்ரீரங்கம்.

*19. மே '79 அமுதசுரபியில் காமகோடி சிறியபீடாதிபதி 'ஆலயங்கள்' எனும் தலைப்பில் எழுதியிருக்கும் கட்டுரையில் "க்ருத த்ரேதா த்வாபர யுகங்களில் கோயில் இல்லை. கலி யுகத்தில்தான் கோயில்கள் ஏற்பட்டன" என்று எழுதியிருப்பது சரியா ?*

நமது இரண்டாவது சதகம் 44-வது பதிலில் சிறிய பீடாதி₄பதிக்கு ராமாயணம் தெரியாதென்று நிரூபிக்கப் பட்டதை இது வலியுறுத்துகிறது. தன் வம்ஶத்தவர்களுக்குக் குலதெய்வமாக ப்₃ரஹ்மலோகத்திலிருந்து இக்ஷ்வாகு பெற்ற ரங்க₃நாத₂னை, ரங்க₃விமானத்தோடு கூட ஸ்ரீராமன் வரையி லுள்ள ரகு₄வம்ஶத்தரசர்கள் அனைவரும் ஆராதித்து வந்தனர்; விபீ₄ஷணன் அந்த ரங்க₃விமானத்தையே பட்டாபி₄ஷேகத் துக்குப் பின்பு ஸ்ரீராமனிடமிருந்து பரிசாகப்பெற்றான்; அவன் லங்கைக்குப் போகும் வழியில் எம்பெருமான் ஸ்ரீரங்க₃த்தில் நிலையாக எழுந்தருளிவிட்டான் — என்னும் வ்ருத்தாந்தம் ஸ்ரீராமாயணத்திலும், பல புராணங்களிலும் உள்ளது. ஸ்ரீமஹா பா₄ரதத்திலும் அர்ஜுனன் தீர்த்த₂ யாத்ரா ப்ரகரணத்தில் பல கோயில்களுக்குச் சென்றிருந்ததை விவரிக்கிறார் வேத₃ வ்யாஸர். இப்படி ஸ்ரீராமாயண மஹாபா₄ரதங்களாகிய இதி ஹாஸங்களே எல்லா யுக₃ங்களிலும் கோயில்கள் இருந்ததை நிரூபிக்கின்றன. புராணங்களிலும் பலவிடங்களில் இது வலியுறுத்தப்பட்டுள்ளது. ஸ்த₂லபுராணங்களை எடுத்துக் கொண்டால், ஸ்ரீராமபிரானுக்கு முன்னோர்களில் ஒருவனான புகழ்பெற்ற சிபிச்சக்ரவர்த்தியால் திருவெள்ளறைக் கோயில் கட்டப்பட்டதாகத் திருவெள்ளறை ஸ்த₂லபுராணம் கூறு கிறது. இப்படி ஏராளமான ஸ்த₂ல புராணங்கள் கலியுக₃த் துக்கு முன்பே தென்னாட்டில் பல கோயில்கள் இருந்ததைக் காட்டுகின்றன. இவை எதையும் படிக்காமல், சில சிவன் கோயில் ஸ்த₂ல புராணங்களை மாத்திரம் படித்துவிட்டு சிறிய பீடாதி₄பதி பேசுவதும், அதை அவருடைய ஶிஷ்யர்கள் பத்திரிகையில் வெளியிட்டு அவருடைய அறியாமையை உலகறியப் பரப்புவதும் நம் நாட்டின் சாபக்கேடுகளில் ஒன்று.

V. ஸ்ரீநிவாஸன், திருச்சி-17.

20. அழகர் வைகையாற்றில் இறங்குவதுபற்றி 12-5-79 'ஹிந்து' 'தினமணி' 13—5—79 'விகடன்' ஆகியவற்றில் ஒரு கதை காணப்படுகிறது. தங்கையான மீனாட்சியின் கல்யாணத்தைக் காண்பதற்கு அழகர் வருவதாகவும், அது முடிந்துவிட்டதாகக் கேள்விப்பட்டு, கோபித்துக்கொண்டு ஊருக்குத் திரும்பிவிடுவதாகவும் ஸ்தலபுராணம் இருப்பதாக எல்லாப் பத்திரிகைகளிலும் உள்ளது. 'ஹிந்து' பத்திரிகையில் ''அழகர் ஒரு முஸ்லிம் பெண்ணின் வீட்டில் இரவு தங்குவதாகவும், இதனால் கோபம் கொண்ட அழகருடைய தேவியான நாச்சியார் அழகரைக் கோவிலுக்குள் விடமறுத்து, நூபுரகங்கைத் தீர்த்தத்தால் திருமஞ்சனம் செய்தபின்பே உள்ளேவிடுவதாகவும் ஒரு கதை வந்துள்ளது. இவற்றில் உண்மை உண்டா?

இவை நிஜக்கலப்பில்லாத கட்டுக்கதைகளே. ஸ்தூலபுராணத்தில் இக்கதைகள் எதுவும் இல்லை. ஸ்தூலபுராணத்தில் மண்டூக (தவளை) மஹரிஷி என்பவருக்கு மதுரைக்கருகிலுள்ள 'தேனூர்' என்னுமிடத்தில் எம்பெருமான் மோக்ஷம் கொடுப்பதற்காக எழுந்தருளினான் என்றே உள்ளது. இதன் நினைவாக, பன்னெடுங்காலமாக அழகர் தேனூருக்கு எழுந்தருளிவந்தார். சில நூற்றாண்டுகளுக்கு முன் சில காரணங்களால் அழகர் தேனூருக்கு எழுந்தருள்வது நின்றுவிட்டது. அப்போது மதுரையில் ஆட்சிபுரிந்துவந்த திருமலை நாயக்கர் உத்ஸவத்தை இப்போதுள்ளபடி வைகையாற்றில் இறங்கி வண்டியூர் வரை சென்று திரும்பி வருவதாக மாற்றினார். பொய்க் கதைகள் கட்டுவதில் மிகத் திறமையுள்ள பாமர ஜனங்கள்— அழகர் மீனாக்ஷி கல்யாணத்துக்கு வருவதாகவும், அது முடிந்துவிட்டது என்று அறிந்து கோபம்கொண்டு திரும்பிவிட்டதாகவும் கதைகட்டிவிட்டார்கள். வைகையாற்றில் இறங்கியவுடன் திரும்புவதாக உத்ஸவத்தின் அமைப்பு இல்லை. பலநாட்கள் வைகைக் கரையோடு பலவிடங்களுக்குச் சென்று அதன் பின்பே திரும்புகிறார். மண்டூகமஹரிஷிக்கு மோக்ஷம் கொடுப்பதற்காகத் தேனூருக்குச் சென்ற உத்ஸவமே இது என்று விளங்குவதற்காக இப்போதும் ஓர் இடத்தில் ''தேனூர் மண்டபப்படி'' நடக்கிறது. மீனாக்ஷி கல்யாணத்தையும், அழகர் உத்ஸவத்தையும் பிணைத்து வழங்கும் கதையும், முஸ்லிம் பெண்ணைப்பற்றி 'ஹிந்து'

வெளியிட்டிருக்கும் புதுக்கதையும் சமீப காலத்தில் ஏற்பட்ட கட்டுக்கதைகளேயாகும்.

G. சம்பத்குமார், மதுரை-7 (21, 22 கேள்விகள்)

*21. திருச்சியில் ஒரு ஆஞ்சநேயர் கோவிலுக்குச் சென்றேன்; ஆஞ்சநேயர் சந்நிதிக்கு இருபுறத்திலும் பிள்ளையார் உருவம் சலவைக் கல்லில் வைத்துள்ளார்கள். அனுமார் கோவிலில் பிள்ளையாரை வைத்திருப்பது சரியா? சிற்சில வைஷ்ணவர்கள் இல்லத்தில் பெருமாளுடன் பிள்ளையார் படத்தையும் வைத்திருக்கிறார்கள். பிள்ளையார் படம் இருந்தால் செல்வம் அதிகமாகும் என்று கூறுகிறார்கள். இது சரியா?*

பெருமாளோடோ, அநுமனோடோ பிள்ளையாரைச் சேர்ப்பது ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் தகாது. பிள்ளையார் படம் இருந்தால் செல்வம் அதிகமாகும் என்பது சைவர்கள் கிளப்பி விட்ட பெரும்புரளி. பிள்ளையார், சிவன் முதலானவர்களைத் தொழுகிறவர்கள் பலர் பிச்சை எடுப்பவர்களாகவும், ஏழைகளாகவும் இருப்பதுகொண்டே இதைப் புரிந்துகொள்ளலாம். பணக்காரர்களாவதும், ஏழைகளாவதும் அவரவர் முன்செய்த வினையினால் ஆவது. படங்களை மாட்டிக்கொள்வதால் மாத்திரம் செல்வம் குவிந்துவிடாது.

*22. மதுரையை அடுத்துள்ள அழகர்மலையின் மேல் ஒரு முருகன் கோவில் உள்ளது. அழகர்மலையில் முதலில் முருகனே இருந்தார். பிறகு அழகர்பெருமாள் வந்து மலையைப் பெருமாள் கோவில் என்று மாற்றிவிட்டார்கள் என்று அய்யர் குலத்தவர்கள் கூறுவது உண்மையா?*

சங்ககாலம் முதலாகவே அழகர்கோவிலில் பெருமாள் கோவிலே இருந்துவந்தது என்பதற்குப் பரிபாடல், ஆழ்வார் பாசுரங்கள் முதலான பல ஆதாரங்கள் இருக்கின்றன. சங்க இலக்கியங்களில் ஒன்றான திருமுருகாற்றுப்படையின் இறுதியில் 'பழமுதிர்சோலைமலை கிழவோனே' என்று வருகிறது. இதைப்பற்றிக்கொண்டு பிற்காலச் சைவர்கள் பழமுதிர்சோலை என்பது முருகனுடைய ஆறு படை வீடுகளில் ஒன்று என்று சொல்ல ஆரம்பித்தார்கள். திருமுருகாற்றுப்படையை மாத்திரம் வைத்துக்கொண்டு பார்த்தால் அது முருகனின் தனிப்பட்டதொரு கோயிலைக் கூறுகிறது என்றுகூடச் சொல்லமுடியாது.

பழம் உதிரும்படியான சோலைகளை உடைய மலைகளில் முருகன் விளையாடினான் என்றே நக்கீரர் கூறியிருக்கவேண்டும். ஒரு தனிப்படைவீட்டையே அது குறித்தாலும், பழமுதிர் சோலையைப் பற்றிய வர்ணனையில் மிளகுக்கொடிகள் இருந்ததாக வருவதால் அப்படைவீடு மிளகுக்கொடிகள் மலிந்த கேரளத்தில் இருந்திருக்கலாமேயொழிய. மிளகுக்கொடிகளே யில்லாத திருமாலிருஞ்சோலையாயிருக்க இடமேயில்லை. திருமாலிருஞ்சோலைமலையில் எக்காலத்திலும் முருகன்கோவில் இருந்ததுமில்லை. தற்போது முருகன்கோவில் இருக்கும் இடம் பெருமாள் எழுந்தருளும் ஒரு மண்டபமாகவே இருந்தது. இப்படியிருக்க. செல்வாக்குடைய அரசியல் தலைவர்களில் ஒருவரான காலஞ்சென்ற திரு. பி. டி. ராஜன் முதலானோர் தூண்டுதலினால் இரவோடு இரவாக அந்த மண்டபத்தில் ஒரு முருகன்கோவில் கட்டப்பட்டது. இதற்கு அரசு அறநிலையத் துறையும் ஆதரவளித்தது. சமீபத்தில் பரமபதமடைந்த ஸ்ரீபெரும்பூதூர் யதிராஜ ஜீயர் மடாதிபதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பேரருளாள யதிராஜ ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி, தமது பூர்வாச்ரமத்தில் வழக்கு தொடுத்து, அரும்பாடுபட்டு, சென்னை உயர்நீதி மன்றம் வரை போராடி, அழகர்மலையிலும், முருகன் கோவிலிலும் பதிக்கப்பட்டிருந்த ‘பழமுதிர்சோலை’ என்னும் பெயர்ப் பலகைகளை நீக்கும்படியும், அந்த முருகன் கோவிலை அழகர் மலைக்கு உள்ளடங்கிய ஒரு கோவிலாக ஆக்கும்படியும் தீர்ப்புப் பெற்றார். இதற்குப் பல வருஷங்கள் போராட வேண்டியிருந்தது. இதற்கிடையில் பழமுதிர்சோலை என்னும் பெயர்ப்பலகையுடன் பல சினிமாப் படங்கள் காட்டப்பட்டுவிட்டன. இதைப்பற்றி ஏராளமான சினிமாப் பாட்டுக்களும் ஏற்பட்டுவிட்டன. இவ்வளவு நடந்த பின்பும். மறுபடியும் அழகர்மலையில் நூபுரகங்கைக்கு அருகில் பழமுதிர்சோலை எனும் புதியகோவில் கட்டுவதற்குச் சைவர்கள் முயற்சிசெய்து வருகிறார்கள். கேள்வியில் கூறப்பட்டிருக்கும் பொய்ப் பிரசாரம் திடீரென்று அழகர்மலையை ஆக்கிரமித்தவர்களால் பரப்பப்படும் புரளியேயாகும். வைஷ்ணவர்கள் விழிப்புடன் இருந்து, மறுபடியும் அழகர்மலையில் ஆக்கிரமிப்பு நடக்காமல் பாதுகாக்க வேண்டும்.

V. ஸ்ரீநிவாஸன், திருச்சி-17.

*23. கலைமகள் ஜூலை 79 இதழில் 'ஸௌந்தர்யலஹரி' பற்றிய காமகோடி (பெரிய) பீடாதிபதியின் கட்டுரையில் ஸௌந்தர்யத்தையும், லாவண்யத்தையும் பர்யாயமாகக் (ஒரே பொருளுடையதாகக்) காட்டப்பட்டுள்ளது. இது சரியா?*

பாமர ஜனங்கள் இவ்விரு பத₃ங்களை ஒன்றாக வழங்கினாலும், ஸம்ஸ்க்ருத பா₄ஷையின் மர்மம் அறிந்தவர்கள் இவ்விரு பத₃ங்களுக்கும் வேற்றுமையிருப்பதை அறிவார்கள். ஸௌந்த₃ர்யம் என்பது அவயவ ஶோபை₄யையும் (அவயவத்தின் அழகையும்), லாவண்யம் என்பது ஸமுத₃ாய ஶோபை₄யையும் (முழுஉடம்பின் அழகையும்) குறிக்கும். லாவண்யம் எனும் பத₃ம் உப்பைக் குறிக்கும் 'லவணம்' என்னும் பத₃த்திலிருந்து தோன்றியது. உப்பு தான் கலந்திருக்கும் பொருள் முழுவதிலும் ஒரு நீராகக் கலந்திருப்பதுபோல், உடல் முழுவதிலும் ஒரு நீராகப் பரவியிருக்கும் ஸமுத₃ாய ஶோபை₄ லாவண்யம் எனப்படுகிறது. இதை நீரோட்டம் என்றும் குறிப்பர். ஒவ்வொரு அவயவத்தின் அழகு ஸௌந்த₃ர்யம் எனப்படுகிறது. "*ஏகைகஸ்மிந் பரமவயவேऽநந்த ஸௌந்த₃ர்ய மக்₃நம் ஸர்வம் த்₃ரக்ஷ்யே கத₂மிதி முத₄ா மாமத₃ா மந்த₃ சக்ஷு: । த்வாம் ஸௌப₄ாத்ர வ்யதிகரகரம் ரங்க₃ராஜாங்க₃ காநாம் தல்லாவண்யம் பரிணமயிதா விஶ்வ பாரீண வ்ருத்தி ॥*" [ர-ஸ்த. 1-89] [ஏ அறிவற்ற கண்ணே! 'ஒவ்வொரு அவயவத்திலும் எல்லையற்றதான அவயவ ஶோபை₄யாகிற ஸௌந்த₃ர்யத்திலே முழுகியிருக்கிற நான் எல்லா அவயவங்களையும் எப்படி அநுப₄விக்கப் போகிறேன்' என்று வீணாக ஐயமுறாதே. பெரியபெருமாளுடைய அவயவங்களுக்கு நட்பின் தொடர்பை விளைவிக்கின்ற அந்த ஸமுத₃ாய ஶோபை₄யாகிற லாவண்யமானது உன்னை எல்லா அவயவங்களையும் முழுவதும் அநுப₄விக்கச் செய்துவிடும்] என்னும் ஶ்லோகத்தில் ஸம்ஸ்க்ருத ஶாஸ்த்ரங்களின் கரைகண்டவரான ப₄ட்டர் ஸௌந்த₃ர்யத்திற்கும், லாவண்யத்திற்கும் உள்ள வேறுபாட்டை மிகத் தெளிவாகக் காட்டியிருக்கிறார். ஆதி₃ஶங்கரர் காலத்திற்குப் பல நூற்றாண்டுகளுக்குப் பிறகும் எவராலும் கையாளப்படாத

ஸௌந்த₃ர்யலஹரியை எழுதிய ஶாங்கர மட₂ாதி₄பதியும், பீடாதி₄பதி எடுத்திருக்கும் ஶ்லோகத்தில் ' வத₃ந ஸௌந்த₃ர்ய லஹரீ' என்று முக₂மாகிற அவயவத்தின் அழகையே ஸௌந்த₃ர்யமாகக் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம். இந்த ஸம்ஸ்க்ருத பா₄ஷாமர்மத்தைப் பீடாதி₄பதி உணரவில்லை என்பது குறிக் கொள்ளத்தக்கது.

S. வேங்கடம், சமயபுரம்.

*24. சினிமாப் பின்னணிப் பாடகரும், கிறிஸ்தவருமான ஜேசுதாஸ் சபரிமலை ஐயப்பன் கோவிலில் வழிபடுவதால், அவர் மகனுக்கு ஞானஸ்நானம் செய்விக்கச் சர்ச் மறுத்துவிட்டதையும். அதுபற்றி 24—6—79, 8—7—79 கல்கி இதழ்களில் சென்னை ஆர்ச்பிஷப் அருளப்பா, உபந்யாஸகர் முக்கூர் லக்ஷ்மீநரஸிம்ஹாசாரியர், திண்டுக்கல் S. கிருஷ்ணமூர்த்தி, மஹேந்திரவாடி S உமாசங்கரன், சென்னை ஐரோம் செல்வராஜ் ஆகியவர்களின் கருத்துக்கள் வெளிவந்தது பற்றியும் விமர்சிக்க வேண்டுகிறேன்.*

(1) ஆர்ச்பிஷப் அருளப்பாவின் கருத்து :- ''தான் சபரி மலைக்குச் செல்வதால் அங்கு ஜாதி மத பேதமற்ற சமுதாயத்தைப் பார்ப்பதாக ஜேசுதாஸ் கூறியுள்ளது ஆச்சர்யமாகத்தான் உள்ளது. அது எந்த அளவுக்கு உண்மை? ' எம்மதமும் சம்மதம் ' என்கிற கொள்கையை நாங்கள் ஏற்கவில்லை. ஏசு கூறிய உயரிய கருத்தைத்தான் நாங்கள் பின்பற்றுகிறோம். ஒருவர் ஒரு மதத்தைத்தான் பின்பற்றவேண்டும். இரு மதங்களை அல்ல; அது தவறு.'' என்று பிஷப் கூறியிருப்பது அவர் ஒரு உண்மையான கிறிஸ்தவர் என்பதைக் காட்டுகிறது. ஒவ்வொரு மதத்தினருக்கும் இந்த மனப்பான்மை அவஶ்யம் இருக்கவேண்டும். எம்மதமும் சம்மதம் என்று இருப்பவன் எந்த மதத்திலும் பற்றில்லாதவனுகி, 'கண்டதே காட்சி, கொண்டதே கோலம், உண்டதே போகம்' என்னும் லோகாயத வாழ்க்கையை நடத்துவான். இவர்களுக்கு வயிற்றுப் பிழைப்பு ஒன்றே முக்கியமாகும்.

(2) வித்வான் முக்கூர் லக்ஷ்மீநரசிம்மாசார்யரின் கருத்து:— வயிற்றுப் பிழைப்புக்காக ஜேசுதாஸ் பல தெய்வங்களைப் பாடுவதில் தவறில்லை என்று இவர் சொல்லுகிறுர். 'இந்து' மதத்தில் உள்ள பெரும்பான்மையினர் இக்கருத்தை உடைய

வர்களாக இக்காலத்தில் ஆகிவிட்டார்கள். இத்தகையவர்களை வயிற்றுப்பிழைப்பு கிறிஸ்தவர், அல்லது வயிற்றுப்பிழைப்பு வைஷ்ணவர், அல்லது வயிற்றுப் பிழைப்புச் சைவர் என்று கூறலாமேயொழிய, உண்மையான கிறிஸ்தவர், உண்மையான வைஷ்ணவர், உண்மையான சைவர் என்று கூறமுடியாது. ஜேசுதாஸ் இந்துப் பெயர்களையும், அநுஷ்டானங்களையும் ஏற்றுக்கொண்டால்தான் சர்ச் அவர் குழந்தைக்கு ஞானஸ்நானத்தை மறுக்கலாம் என்கிறுர் இவர். கிறிஸ்தவ மதம் விக்ரஹ ஆராதனையை ஒப்புக்கொள்ளவில்லை. அதற்கு முரணுக ஜேசுதாஸ் ஐயப்பன் கோவிலுக்குச்சென்று வழிபடுவதால் அவர் குழந்தைக்கு ஞானஸ்நானம் செய்விக்க சர்ச் மறுத்தது மிகவும் நியாயமானதாகும். ஒரு டூரிஸ்டுபோல் ஜேசுதாஸ் இந்துக் கோவிலுக்குப் போவதில் ஆட்சேபமில்லை என்றும். அங்கு சென்று பாடுவதும், வழிபடுவதுமே கிறிஸ்தவ மதப்படி ஆட்சேபத்துக்கு உரியது என்றும் அருளப்பா சொல்லுவது மிகவும் நியாயமாகும். பிறவியில் ஒருவர் கிறிஸ்துவா? அல்லது இந்துவா? என்பது கிறிஸ்தவ மதப்படி முக்கியமல்ல. ஞான ஸ்நானம் பெற்றபின்பு அவர் கிறிஸ்தவ மதக்கொள்கைகளுக்கு முரணுக நடக்காமல் இருப்பாரா என்பதே முக்கியம். ஆகையால் சர்ச் மறுத்ததில் எக்குறையும் சொல்லமுடியாது.

(8) திண்டுக்கல் S. கிருஷ்ணமூர்த்தியின் கருத்து :— "ஒரு குறிப்பிட்ட மதத்தைப் பின்பற்றுபவர்கள் மதத்தின் பெயரால் எல்லோருக்கும் பொதுவான இறைவனை ஏதோ ஒரு வழியில் தமக்கே அடிமையாக்கிக்கொண்டு, மற்றவர்களையும் கண்மூடித்தனமாக அடிமைகளாக்க முயல்கிறுர்கள்" என்று சொற்சிலம்பம் ஆடுகிறுர் இவர். பரமபிதாவையோ, விஷ்ணுவையோ, சிவனையோ பரம்பொருளாகக் கருதும் கிறிஸ்தவர்களும், வைஷ்ணவர்களும், சைவர்களும் தங்கள் சாஸ்த்ரங்களில் பரம்பொருளாகக் கூறப்பட்டிருக்கும் இறைவனுக்குத் தங்களை அடிமைகளாக நினைக்கிறுர்களேயொழிய, இறைவனைத் தாங்கள் அடிமையாக்கிக் கொள்வதுமில்லை. மற்றவர்களைக் கண்மூடித்தனமாக அடிமையாக்க முயல்வதுமில்லை. "மதம் ஒரு மனிதனின் மனத்தைக் குறுகலாக்கிவிடக்கூடாது. சபரிமலை சன்னிதானத்தில் மோக்ஷஸாம்ராஜ்யத்தின் அதி

பதியைக் காணமுடியாதா?'' என்கிறார் இவர். கிறிஸ்தவர்கள் பைபிளே உண்மையான வேதமென்றும், பூர்வகர்மக் கொள்கை தவறு என்றும், ஜீவன் பல பிறப்புகள் எடுப்பதாகக் கூறுவது சரியல்ல என்றும் நம்புகிறார்கள். நமது திண்டுக்கல் கிருஷ்ண மூர்த்தியின் கருத்தின்படி கிறிஸ்தவர்கள் இந்தக் கொள்கையை விட்டுவிடவேண்டும் என்று ஆகிறது. அதேபோல் வேதங்களிலும், கீதை முதலான ஶாஸ்த்ரங்களிலும் ஸ்ரீமந்நாராயணனே பரம்பொருளாக முழங்கப்பட்டுள்ளான் என்றும், பிரமன், சிவன் முதலான மற்ற தெய்வங்கள் அவனுடைய ஏவலினால் ஸ்ருஷ்டி, ஸம்ஹாரம் முதலிய தொழில்களைச் செய்கிறார்களென்றும், நாராயணன் ஒருவனே மோக்ஷம் கொடுக்கவல்லவன் என்றும், மற்ற தெய்வங்கள் அவனுடைய அருளாலே மற்ற பலன்களையே கொடுக்கவல்லவர்கள் என்றும் முழங்கியிருப்பதை நம்பி வைஷ்ணவர்கள் மோக்ஷமடைவதற்காக, விஷ்ணு ஒருவனிடமே அன்பு செலுத்துகிறார்கள். கொண்டானையல்லால் அறியாக் குலமகளின் நிலைபோன்றது இது. நமது கிருஷ்ணமூர்த்தியின் கருத்தின்படி இக்கருத்து தவறு என்றும், 'எவன் பணம் கொடுக்கிறானோ அவன் நமக்கு வேண்டியவன்' என்னும் விலைமாதரைப்போலே நம் குறைகளைத் தீர்க்கும் எல்லா தெய்வத்தையுமே தொழவேண்டியதுதான் என்றும் தேறுகிறது. இக்கொள்கையைப் பின்பற்றுபவர்கள்தான் மனிதனாயிருப்பவர்கள் என்று இவர் கூறுவது மிகவும் ஆச்சர்யமாயுள்ளது. உண்மையான கிறிஸ்தவரோ, இஸ்லாமியரோ, வைஷ்ணவரோ, சைவரோ இக்கொள்கையை ஒரு நாளும் ஏற்கமாட்டார்கள். அந்தந்த மதங்களிலுள்ள வயிற்றுப் பிழைப்பு மனிதர்கள் பலர் கிருஷ்ணமூர்த்தியைப்போல் வார்த்தை ஜாலங்களைப் பேசிக்கொண்டு, சகிப்புத்தன்மை சிறிதும் இல்லாமல், ஒரு மதத்தை உண்மையாகப் பின்பற்றுபவர்களை வெறியர்கள் என்றும், த்₃வேஷிகள் என்றும் நிந்தித்துக் கொண்டுதான் இருப்பார்கள். ஒரு மதத்தை உண்மையாகப் பின்பற்றுபவர்களோவென்றால், தங்கள் வேத₃ ஶாஸ்த்ரங்களில் நம்பிக்கையோடு தங்கள் தெய்வத்திடம் உறுதியான பற்று இருந்தபோதிலும் "எம்பெருமான் தன் குழந்தைகளான அனைவரையும் படிப்படியாக முன்னேற்றுவதற்கே பல மதங்களைப் படைத்திருக்கிறான். அவரவர் தத்தம் மதத்திலிருந்து முன்னேறுவதே முறை" என்னும் பரந்த மனப்பான்மையுடன் த்வேஷமற்ற வாழ்க்கையை நடத்துவார்கள். வயிற்றுப்

பிழைப்புக்காகச் 'சமரசம்' பேசிக்கொண்டு லோகாயத வாழ்க்கையை நடத்தும் சமரசவாதிகளைவிட இவர்களே மனிதத்தன்மை மிக்கவர்கள் என்பது நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும்.

(4) மஹேந்திரவாடி உமாசங்கரனின் கருத்து:— 'முக்கூர் லக்ஷ்மீநரசிம்மாசாரியர் ஒருதெய்வக் கொள்கையை உடைய ஸ்ரீராமாநுஜருடைய மதத்தைச் சேர்ந்தவராயிருந்தும் ஜேசுதாசினுடைய செயலை நியாயப்படுத்துவது சரியல்ல' என்று இவர் கூறுவது நியாயமானதே. ஆயினும், "ஸ்ரீராமாநுஜருடைய விஶிஷ்டாத்₃வைத ஸித்₃தா₄ந்தம் வைணவர்கள் வேறு தெய்வத்தை வணங்க இடம் தரவில்லை. நடைமுறையிலும் பல கட்டுப்பாடுகள். நம் மதத்திலேயே இவ்வளவு வேற்றுமைகளை வைத்துக்கொண்டு கிறிஸ்தவ மதத்தினருக்கு அறிவுரை கூறுவானேன்?" என்று இவர் எழுதுவதிலிருந்து வைஷ்ணவர்கள் விஷ்ணுவைத்தவிர வேறு தெய்வத்தை வணங்காமல் இருப்பதும், நடைமுறையில் பல கட்டுப்பாடுகளைக் கொண்டிருப்பதும் வெட்கப்படக்கூடிய தவறுகள் என்று இவர் நினைப்பதாக விளங்குகிறது. வேத₃ங்களிலும், கீ₃தை முதலான ஶாஸ்த்ரங்களிலும் பரமாத்மாவான ஸ்ரீமந் நாராயணனைத் தவிர வேறு தெய்வங்களை வணங்காமலிருப்பவனே மோக்ஷமடைவான் என்று கூறப்பட்டுள்ளது. மோக்ஷமடைய விரும்புகிறவனுக்குப் பல கட்டுப்பாடுகளையும் விதி₄த்திருக்கின்றன. ஆதி₃ சங்கரரும் தம் பா₄ஷ்யங்களில் இதை ஒப்புக்கொண்டிருக்கிறார். இதைப் பின்பற்றும் வைஷ்ணவர்களுடைய நெறிமுறைகள் பெருமைப்படத் தக்கவையேயொழிய வெட்கப்படவேண்டியவையல்ல. பதிவிரதை தன் புருஷன் ஒருவனையே எல்லாமாக நினைக்கிறாள். பல கட்டுப்பாடுகளையும் மனமுவந்து ஏற்றுக்கொண்டிருக்கிறாள். தா₄ஸிக்குப் பணம் கொடுப்பவர்கள் எல்லோருமே வேண்டியவர்கள். அவளுக்கு ஒரு கட்டுப்பாடும் கிடையாது. இதில் யாருடைய நிலை பெருமைப்படக் கூடியது, யாருடைய நிலை வெள்கித் தலை குனிய வேண்டியது என்பதைச் சிறிது சிந்தித்தாலும் உமா சங்கரன் போன்றோர்க்கே விளங்கும்.

(5) ஐரோம் செல்வராஜின் கருத்து:— "கிறிஸ்துவ மதச் சட்டங்களுக்குட்பட்ட ஜேசுதாஸ் விவகாரத்தில் முக்கூர்லக்ஷ்மீநரசிம்மாசாரியர் கருத்தைப் பேட்டியாக வெளியிடுவது ஆச்சர்யமாயிருக்கிறது" என்று இவர் கூறுவது மிகவும் நியாயமாகும்.

கிறிஸ்தவர்களுக்குள்ள உறுதியான மதநம்பிக்கை இந்துக்கள் என்று பெயர் வைத்துக்கொண்டிருக்கும் சைவர்களுக்கும், வைஷ்ணவர்களுக்கும் ஏற்பட்டால்தான் இந்துமதம் தழைக்கும் என்பதை 'ஜேசுதாஸ் விவகாரம்' தெளிவாகக் காட்டுகிறது.

கொத்தட்டை பண்டாரி சௌரிராஜய்யங்கார், ஸ்ரீரங்கம்.

*25. மற்ற தெய்வங்களின் கோவிலுக்குச் செல்லும் ஆசார்ய புருஷர்களிடம் ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஸமாஶ்ரயணம் செய்து கொள்ளலாமா?*

கூடவே கூடாது. ஆசார்யன் உண்மையான வைஷ்ணவனுயில்லாவிடில், ஓட்டையோடத்தில் ஏறிய ஒழுகலோடம் போலே ஆசார்யனும், ஶிஷ்யனும் ஸம்ஸாரஸாகரத்திலேயே அழுந்திவிடுவார்கள் என்று நம் ஆசாரியர்கள் அருளியுள்ளார்கள். ஆகையால் ஸ்ரீவைஷ்ணவர்கள் தம் ஆசார்யவம்ஶத்தில் வந்தவர்களில் எவருக்கு மறந்தும் புறந்தொழாமை உள்ளதோ அவரிடமே ஸமாஶ்ரயணம் செய்து கொள்ளவேண்டும். ஆசார்யர்களும் 'இனி வேறு எந்தத் தெய்வத்தையும் தொழுவதில்லை' என்று உறுதி பெற்றுக்கொண்டே ஶிஷ்யனுக்கு ஸமாஶ்ரயணம் செய்துவைக்கவேண்டும். இல்லாவிடில் இது ஒரு வயிற்றுப் பிழைப்பாகி, இருவர்க்கும் அனர்த்தத்தை விளைக்கும். தம் ஆசார்ய சந்ததியில் வந்தவர்களில் மறந்தும் புறந்தொழாமை எவருக்கும் இல்லையென்றால், ஜ்ஞாநாநுஷ்டானங்களும், மறந்தும் புறந்தொழாமையுமுள்ள வேறொரு ஸ்ரீராமாநுஜ ஸம்பந்தமுள்ள ஆசார்யஸந்நிதியில் ஸமாஶ்ரயணம் செய்துகொள்ளுவதிலும் தவறில்லை.

S. ஸௌம்யநாராயணன், ஸ்ரீரங்கம். (26, 27 கேள்விகள்)

*26. 6–6–79 அன்று இரவு 8 மணிக்கு சென்னை வானொலி-1ல் நடந்த 'அபிநயங்கள்' என்னும் நாடக வசனத்தில் 'திருநீர்மலை முருகன் கோவிலில் திருமணம்' என்று கூறப்பட்டது. திருநீர்மலையில் முருகன் கோவில் உண்டா?*

'திருநீர்மலையின்மேல் பெருமாள் கோவிலே உண்டு. அங்கு ஏராளமான திருமணங்கள் நடைபெறுகின்றன' என்பது சென்னை வாஸிகள் அனைவரும் அறிந்தது. ஆனால், மதவெறி

யாலே அகக்கண் குருடாகிவிட்ட நம் நாட்டுச் சைவ எழுத்தாளர்களுக்கு மலைகளில் இருப்பதெல்லாம் முருகன் கோயில்களாகவே காட்சியளிக்கும். "வேங்கடமலையில் இருப்பவனும் முருகனே. அழகர்மலையிலும் பழமுதிர்சோலை என்னும் முருகன் கோவில் உண்டு'' என்று பிதற்றிவரும் இவர்கள் திருநீர்மலையில் இருப்பதும் முருகனே என்று சொன்னாலும் ஆச்சர்யப்படுவதற்கில்லை. 15—7—79 விகடனில் இதுபற்றிய உண்மையை ஒருவர் சுட்டிக்காட்டியிருப்பது பாராட்டத்தக்கது.

*27. பல வருடங்களாகச் சென்னை வானொலியில் சில நாட்கள் காலையில் சைவப் பாடல்களைத் தொகுப்பு நிகழ்ச்சியாக ஒலி பரப்புவதுபோல், வைணவப் பாடல்களையும் தொகுப்பு நிகழ்ச்சியாக ஒலிபரப்பச் செய்ய வழியுண்டா ?*

சீரியர்படையைச் சேர்ந்தவர்கள் சென்னை வானொலி நிலைய இயக்குநருக்கும், டில்லி வானொலி மந்திரிக்கும் நூற்றுக்கணக்கில் கடிதங்கள் எழுதினால் வழி பிறக்கலாம்.

கொத்தட்டை V. ராமாநுஜம் M.Sc., ஸ்ரீரங்கம்.

*28. (i) ஸ்ரீவைஷ்ணவ ஸந்ததியில் பிறந்தவர்கள் தங்களது குழந்தைகளுக்கு "ஆயுஷ்யஹோம" கர்மாவைச் செய்கிறார்கள். இது சரியா ? இது காம்ய கர்மாவில் சேர்ந்ததா ?*

*(ii) திருப்புல்லாணியில் நவக்ரஹ சாந்தி செய்வது முறையா?*

*(iii) சுமங்கலிப் பிரார்த்தனை அனுஷ்டிக்கலாமா ?*

(i) பிறந்த குழந்தைக்கு அப்₂த₃பூர்த்தி (முதலாண்டு நிறைவு) கல்யாணத்தின்போது எல்லா ஸ்ரீவைஷ்ண ப்₃ராஹ்மணர்களும் ஆயுஷ்யஹோம கர்மாவைச் செய்கிறார்கள். 'ஆயுராஶாஸ்தே' என்று வேத₃மந்திரமும் உள்ளது. 'அடியோமோடும் நின்னொடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு' என்ற பெரியாழ்வாரின் அருளிச்செயலைப் பின்பற்றி எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடுவதற்காகத் தனக்கும் தன் குழந்தைகளுக்கும் ஆயுள் அபி₄வ்ருத்₃தி₄யை வேண்டி, காம்யகர்மமான ஆயுஷ்யஹோமம் செய்வதில் தவறில்லை. எம்பெருமானைப் பற்றிய நினைவேயில்லாமல் எந்தக் கர்மத்தைச் செய்தாலும் அது தவறே.

(ii) புத்ரார்த்த₂மாக எம்பெருமானுடைய திருத்தகப்பனா ரான கேசவஸோமயாஜிகள் யாக₃ம் செய்ததாக நூல்கள் கூறி யுள்ளன. காரியாரும், உடையநங்கையாரும் நெடுங்காலம் திருக்குறுங்குடி நம்பியை வேண்டி, வரம்பெற்று நம்மாழ்வா ரைப் பெற்றெடுத்தனரென்றும் குருபரம்பரைகள் கூறுகின்றன. "நெடுங்காலமும் கண்ணன் நீள் மலர்ப்பாதம் பரவிப்பெற்ற தொடுங்கால் ஒசியுமிடை" [திருவிரு 37] என்ற பாசுரத்தில் ஆழ்வாரே இதை உணர்த்தினர். த₃ஶரத₂ன் புத்ரகாமேஷ்டி யாக₃ம் செய்து நாலு ரத்னங்களைப் பெற்றது ஸ்ரீராமாயண ப்ரஸித்₃த₄ம். ஆகையால் ஸ்ரீ வைஷ்ணவர்களும் வைஷ்ணவ ஸந்ததியின் அபி₄வ்ருத்₃தி₄க்காக எம்பெருமானைப் பிரார்த்தி₂ப்ப தும், ஸந்தானகோ₃பால மந்த்ர ஜபஹோமங்கள் போன்ற கர்மங்களைச் செய்வதும் அடியோடு தவறு என்று கூறிவிட முடியாது. அதுவும் செய்யலாகாது என்றிருக்கும் பரமை காந்தி ஶ்ரேஷ்ட₂ர்கள் இக்காலத்தில் மிகவும் அரியவர்கள். ஆகை யால் திருப்புல்லாணியில் நவக்கிரஹ ஶாந்தி செய்யாமல், சந்நிதியில் ஸுதர்ஶன ஸந்தானகோபால மந்த்ரஜபஹோமங்களைச் செய் வது உசிதம். வைதி₃க கர்மாக்களில் ஸ்மார்த்தர்கள் 'ஆதி₃த் யாதி₃ நவக்₃ரஹ ப்ரீத்யர்த்த₂ம்' என்று அநுஸந்தி₄க்கிறார்கள். 'ஆதி₃த்யாதி₃ நவக்₃ரஹ அந்தர்யாமி ப₄க₃வத் ப்ரீத்யர்த்த₂ம்' என்று ஸ்ரீவைஷ்ணவர்கள் அநுஸந்தி₄க்கிறார்கள். இந்த ரீதி யில் கிரஹ தோ₃ஷநிவ்ருத்திக்காக நவக்₃ரஹ ஶாந்தி செய்யும் நிர்ப்ப₃ந்த₄ம் ஏற்பட்டால், வைஷ்ணவ ஸந்ததியின் அபி₄ வ்ருத்₃தி₄க்காக நவக்₃ரஹ அந்தர்யாமியான எம்பெருமானைக் குறித்துச் செய்யப்படுகிறது என்னும் எண்ணத்தோடு செய்வது நல்லது. நவக்₃ரஹக் கோவிலுக்குப் போவதும், அவர்களைப் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்வதும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் தகாது.

(iii) ஸுமங்கலிப் பிரார்த்த₂னையைப் பல ஸ்ரீவைஷ்ணவ குடும்பங்களில் பெண்கள் செய்கிறார்கள். பரமைகாந்தி ஶ்ரேஷ்ட₂ர்களுக்கு இதில் கலந்துகொள்வது உசிதமல்லவாயி னும், நீண்டகாலப் பழக்கத்தையொட்டி இதில் கலந்துகொள்ள வும் நேரிடுகிறது. நித்ய ஸுமங்க₃லியான பிராட்டிக்கும், பெருமாளுக்கும் உகப்பு என்னும் எண்ணத்தோடு கலந்து கொள்ளலாம்.

S. ஸௌரியநாராயணன், ஸ்ரீரங்கம் (29, 30, 31 கேள்விகள்)

*29. கோவைத் தொழிலதிபர் திரு. நா. மகாலிங்கம் "(1) இராமாயணத்திலும், மகாபாரதத்திலும், ஆதிசங்கரர் வரலாற்று நூலிலும் அவர்கள் பிறந்தபோது சூரியன் எந்த நக்ஷத்திரத்தில் எந்தப் பாதத்தில் இருந்தான் என்று தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருப்பதை வைத்து வானசாஸ்த்ரக் கணக்கைக்கொண்டு ஆராய்ந்தால் ராமர் கி. மு. 4400-ம் ஆண்டிலும், கிருஷ்ணர் கி. மு. 3200-ம் ஆண்டிலும், ஆதிசங்கரர் கி. மு. 1500-ம் ஆண்டிலும் பிறந்திருக்கிறார்கள் என்று தெளிவாகத் தெரிந்து கொள்ளமுடிகிறது. (2) ராமனும் கிருஷ்ணனும் ஆண்ட காலத்தில் அவர்கள் வழிபட்ட கடவுளாகச் சிவபெருமான் இருந்திருக்கிறார். காலத்தால் ராமனும், கிருஷ்ணனும் கடவுளானது போல், ராமனும் கிருஷ்ணனும் வாழ்ந்த காலத்தில் அவருக்கு முன் சக்கரவர்த்தியாக இருந்த சிவன், சிவபெருமானாக வழிபடப்பட்டிருக்கிறார். (3) நம் நாட்டில் சிவவழிபாடு இருப்பது போலவே உலகின் பல பகுதிகளிலும் சிவவழிபாடு இருந்திருக்கிறது என ஆராய்ச்சியாளர் இப்போது கண்டுபிடித்திருக்கிறார்கள்." என்று தமிழ்நாட்டுத் தமிழர் பேரவை மாநாட்டில் தலைமை உரையாற்றியிருப்பது 12—8—79 கல்கியில் வெளியிடப்பட்டுள்ளது. இதை ஆராயவேண்டுகிறேன்.*

(1) நம் நாட்டு வானநூல்களில் சூரியன் எந்த ராசியில் ஸஞ்சரிக்கிறான் என்றும், சந்திரன் எந்த நக்ஷத்திரத்தோடு கூடியிருக்கிறான் என்றுமே சொல்லப்படுகிறது. சூரியன் எந்த நக்ஷத்திரத்தில் எந்தப் பாதத்தில் இருந்தான் என்று ராமாயணம் முதலானவற்றில் எங்கும் கூறப்படவில்லை. சந்திரன் என்பது சூரியன் என்று பிழையாக விழுந்துவிட்டது என்று வைத்துக் கொண்டாலும், சந்திரன் ஒரு நக்ஷத்திரத்தில் ஒரு பாதத்தில் இருப்பது என்பது குறைந்த பக்ஷம் மாதம் ஒரு முறை நடக்கக்கூடியது. இதைக்கொண்டு புராண புருஷர்களின் காலத்தை நிர்ணயிக்கவே இயலாது. ஆகையால் நா. மகாலிங்கம் இப்படிப் பேசியது அப₄த்₃த₄ம். ஆதிசங்கரர் எட்டாம் நூற்றாண்டில் பிறந்தவர் என்பது பல நூற்றாண்டுகளாக அவர் வழியில் வந்தவர்களான ச்ருங்கேரிமட₂ம், த்₃வாரகைமட₂ம்,

ஜ்யோதிர்மட₂ம். பூரிமட₂ம் என்னும் நான்கு மட₂த்தைச் சேர்ந்தவர்களாலும் ஒப்புக்கொள்ளப்படுவது. சென்ற நூற்றுண்டில் ச்ருங்கேரி மட₂த்திலிருந்து பிரிந்துவந்த ஒரு சந்நியாஸி ஆரம்பித்த காமகோடி மட₂த்தைச் சேர்ந்தவர்கள் பல ஆத₄ாரங்களுக்கு முரணுக ஆதிசங்கரர் 3000 வருடங்களுக்கு முற்பட்டவர் என்று பொய்கூறிவருவதைத் தொழிலதிபர் ஆதரிப்பது மிகவும் விந்தையே.

(2) ராமன் நாராயணனை வழிபட்டான் என்று வால்மீகி ராமாயணத்தில் ப₃ாலகாண்ட₃த்தில் உள்ளது. சிவனைவழிபட்டதாக எங்கும் இல்லை. கிருஷ்ணன் பரமாத்மா என்றும், சிவன் முதலான அனைவரையும் படைத்தவன் என்றும் மஹாப₄ாரதம், விஷ்ணுபுராணம், ப₄ாக₃வதம் முதலான பண்டை நூல்களில் தெளிவாகப் பேசப்பட்டுள்ளது. அப்படியிருக்க ராமனும், கிருஷ்ணனும் வழிபட்ட கடவுளாகச் சிவபெருமான் இருந்திருக்கிறார் என்று எழுதுவதும், சடைமுடியை உடைய சிவன் ராமனுக்கும், கிருஷ்ணனுக்கும் முன் சக்ரவர்த்தியாக இருந்திருக்கிறுன் என்று எழுதுவதும் ஒரு ஆத₄ாரமும் இல்லாத பரம அப₃த்₃த₄மானவை.

(3) வேத₃ம் எந்தக் காலத்தில் தோன்றிற்று என்று எந்த ஆராய்ச்சியாளரும் கண்டுபிடிக்கமுடியாதபடி அநாதி₃யாய் இருப்பது. அந்த வேத₃த்தில் சொல்லப்பட்ட விஷ்ணு, சிவன் முதலான கடவுளர்களின் வழிபாடு உலகெங்கும் பரவியிருந்தது என்பதைக் கண்டுபிடிக்க வேத₃மே போதுமான சான்று. வேத₃த்தை அறியாததனுல் தொழிலதிபர் ஆராய்ச்சியாளர்களைக்கொண்டு இவ்வுண்மையை இப்போது கண்டுபிடித்திருக்கிறுர் என்று விளங்குகிறது. இந்திரன் வழிபாடு, சூரியன் வழிபாடு முதலானவையும் உலகப் பொதுமறையான வடமொழி வேத₃ங்களில் காணப்படுபவையாகையாலே உலகெங்கும் பரவியிருப்பதில் ஆச்சர்யமில்லை. இக்கடவுளர் விஷயத்தில் முக்கியமாக ஆராய்ச்சி செய்யவேண்டிய விஷயத்தை இவர்கள் ஆராய்வதில்லை. அதாவது—வேத₃ங்களிலும், வேத₃ங்களை விளக்கவந்த பண்டை நூல்களான ஸ்ரீராமாயண மஹாப₄ாரதங்களிலும், விஷ்ணுபுராணம் முதலான பழைய புராணங்களிலும், சங்க இலக்கியம் முதலான பண்டைத் தமிழ்

நூல்களிலும் வேத₃த்தில் காணப்படும் எல்லாக் கடவுளர்க ளுக்கும் தலைவனுன பரமாத்மா விஷ்ணு, நாராயணன் எனப் படும் திருமாலே என்று தெளிவாக முழங்கப்பட்டுள்ளது. நமது விஷ்ணுசித்தவிஜயம், சாதிமத ஆராய்ச்சி முதலான நூல் களில் இதை அசைக்க முடியாதபடி நிலைநாட்டியுள்ளோம். முடியுமாஞல் இவ்விஷயத்தை மறுக்கும்படி வடமொழி தென் மொழி அறிஞர்கள் அனைவரையும் பலமுறை அறைகூவி அழைத் திருக்கிறோம். லக்ஷக்கணக்கான வாசகர்கள் படிக்கும் குமுதத்தில் "அரசு" பதிலில் ஒருமுறை இவ்விஷயத்தைச் சுருக்க மாக வெளியிட்டிருக்கிறோம். வடமொழி அறியாதவராகை யாலே தொழிலதிபருக்கு நமது சாதிமத ஆராய்ச்சியை மாத்திரம் அனுப்பியிருக்கிறோம். அதை நடுநிலைநின்று படித்துப் பார்த்து, நேர்மையோடு அதை ஒப்புக்கொள்வதையோ, மறுப்பதையோ தொழிலதிபர் செய்வார் என்று எதிர்பார்க்கிறோம்.

*30. தொழிலதிபர் மகாலிங்கம் தமிழர் பேரவைக் கூட் டத்தில் "ஸம்ஸ்க்ருதமொழியைத் தமிழர்கள் உருவாக்கினர் என்று திருமங்கையாழ்வார் கூறியுள்ளார்" என்று பேசியதாக 23-7-79 தினமணியில் (பக்கம் 3) செய்தி வந்துள்ளது. இது உண்மையா?*

இப்படி திருமங்கையாழ்வார் எங்கும் கூறவில்லை. அநாதி யாய், அனந்தமான வேத₃த்தின் பா₄ஷையான ஸம்ஸ்க்ருத மொழியைத் தமிழர்கள் உருவாக்கினர் என்று அறிவுள்ளவர்கள் எவருமே கூறமாட்டார்கள். "செந்திறத்த தமிழோசை வட சொல்லாகித் திசைநான்குமாய்த் திங்கள் ஞாயிருகி, அந்தரத்தில் தேவர்க்கும் அறியலாகா அந்தணனை" [திருநெடு 4] என்னும் பாசுரத்தில், அனைத்துக்கும் அந்தர்யாமியான எம்பெருமான் தமிழாகவும், வடமொழியாகவும், மற்ற பொருள்களாகவும் ஆகிருன் என்று திருமங்கையாழ்வார் அருளியிருக்கிருர். இப் பாசுரத்தின் முன் பின் பகுதிகளைக் கவனிக்காமல் 'செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி' என்பதை மாத்திரம் எடுத்துக் கொண்டு, தொழிலதிபர் இப்படி விபரீதமாகப் பொருள் கொண்டுவிட்டார் போலும்!

*31. 5—4—79 குமுதத்தில் "ஒருவனே தெய்வம். அவனை ஏதாவது ஓர் உருவத்தில் ஏதாவது ஒரு வழியில் வழிபட்டு*

நன்மையைப் பெறலாம் என்று வேதம் கூறுகிறது'' என்றும், "அறிவாளிகளின் விளக்கங்களோ, வாதப்ரதிவாதங்களோ மக்களை அண்டாது என்று உபநிஷத்தே கூறிவிட்டது'' என்றும் ஸுதர்சனரை மறுத்து எழுதும்போது அக்$_{3}$நிஹோத்ரம் ராமாநுஜ தாதாசாரியர் எழுதினார். 'இம்மாதிரி வேத$_{3}$வாக்கியமோ, உபநிஷத்$_{3}$ வாக்கியமோ எதுவும் கிடையாது' என்று ஸ்ரீதே$_{3}$சிக ஸம்ப்ரதாயத் தலைவர்களில் ஒருவரான ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமியே ஸாதி$_{3}$த்திருப்பதும், ஸ்ரீதே$_{3}$சிக ஸம்ப்ரத$_{3}$ாயத் தலைவர்களில் மற்றொருவரான ஸ்ரீமதழகியசிங்கரும் 'புகழுக்காக இவர் மனம்போனபடி பத்திரிகைகளில் எழுதிக்கொண்டிருக்கிறார்' என்று ஸாதி$_{3}$த்திருப்பதும், ஆனி மாத ஸுதர்சனம் தலையங்கங்களில் வெளிவந்துள்ளது. உத்தமூர் ஸ்வாமி, திருக்கள்ளம் ஸ்வாமி, நவனீதம் ஸ்வாமி, வில்லிவலம் ஸ்வாமி முதலான தே$_{3}$சிக ஸம்ப்ரத$_{3}$ாய வித்$_{3}$வத்$_{3}$வரிஷ்ட$_{2}$ர்களனைவரும் இவ்வக்$_{3}$நிஹோத்ரி தம் வரலாற்றில் பிறந்த வைணவ நூலில் செய்திருக்கும் நாஸ்திக வாதங்கள் அனைத்தையும் கண்டித்திருப்பது, ஸுதர்சன வெளியீடான 'அக்நிஹோத்ரியும் வைணவமும்' என்னும் நூலில் காட்டப்பட்டுள்ளது. இப்படி நேர்மைக்கும், உண்மைக்கும் சிறிதும் மதிப்பில்லாமல் இவர் எழுதும் அண்டப்புளுகுகளைக் குமுதம், ஹிந்து போன்ற பத்திரிகைகள் வெளியிடுவதற்கும், இவர் கூற்றுக்களை மறுத்து உண்மைகளை எவர் வெளியிட்டாலும் அவற்றை வெளியிடாமலிருப்பதற்கும் காரணம் என்ன?

அக்$_{3}$நிஹோத்ரி காமகோடி பீடாதி$_{4}$பதியின் தயவால் அரசாங்க விருதைப் பெற்றுவிட்டார். ஆகையால் அவர் அண்ட$_{3}$ப்புளுகுகளை எழுதினாலும் அதை உண்மை என்றே பாமரமக்கள் நம்புவார்கள் என்பது இப்பத்திரிகையாளர்களுக்குத் தெரியும். இவர் எழுதுபவை பொய் என்னும் உண்மையை வெளியிட்டால் காமகோடிக் கூட்டத்தாரின் விரோத$_{4}$ம் ஏற்படுமாகையால் பத்திரிகை விற்பனை குறைந்து விடும் என்னும் ப$_{4}$யமும் இப்பத்திரிகை நிர்வாகிகளுக்கு உண்டு. மேலும் 'ஹிந்து' பத்திரிகை நிர்வாகிகளுக்கு அக்$_{3}$நிஹோத்ரி ஆசார்யர் என்றும், இவர் வகுப்பைச் சேர்ந்த குமுதம் பத்திரிகை நிர்வாகி பார்த்தசாரதி இவருக்கு மிகவும் வேண்டியவர் என்றும் விஷயம் அறிந்தவர்கள் கூறுகிறார்கள். இக்காரணத்தாலேயே—இவர் எந்தப் பொய்யை எழுதினாலும் இப்

பத்திரிகைகள் வெளியிடுகின்றன என்றும், எவ்வளவு பெரியவர்கள் அதை மறுத்தாலும் அந்த மறுப்புகளைப் பொருட்படுத்துவதில்லை என்றும், தாம் எழுதியவற்றை உண்மை என்று விளக்கும்படி இவரைக் கேட்பதாகிற அடிப்படைப் பத்திரிகை தர்மத்தைக்கூடப் பின்பற்றுவதில்லை என்றும் எளிதில் விளங்குகிறது. அரசியல் துறையில் நாட்டுக்கு உபதேசம் செய்யும் இப்பத்திரிகைகள் மதத் துறையில் நடந்துகொள்ளும் லக்ஷணம் இது.

S. வேங்கடம், சமயபுரம். (32-35 கேள்விகள்)

*32. '79 ஆகஸ்ட் கலைமகள் கேள்விக் கதம்பத்தில் 13-வது கேள்வி பதில்கள் பின்வருமாறு உள்ளன— கேள்வி:— "திருநெல்வேலியில் வாழ்ந்த வைணவப் பெரியார் ஒருவருக்கு ஏதோ நோயை உண்டாக்கித் திருச்செந்தூர் ஆண்டவன் தன்னைப் பாடும்படி செய்ததாகக் கேள்வியுற்றிருக்கிறேன். விவரம் தெரியவில்லை; விளக்கவேண்டும்"—வீ. க. இராமச்சந்திரன், கோரேகான், பம்பாய். விடையவன் (கி.வா.ஜ.) பதில்:—"சந்நியாசிக் கிராமம் என்ற இடத்தில் வாழ்ந்த பகழிக்கூத்தர் என்னும் வைணவப் புலவர் வயிற்றுவலியால் மிகவும் துன்புற்றார். செந்திலாண்டவனை வேண்டி அவனருளால் அந்த நோய்தீரப்பெற்றார். அதன்பின் அவர் திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழைப் பாடினார்." ஸுதர்சனர் பதிலில் இதுபற்றி விளக்க வேண்டுகிறேன்.*

பகழிக்கூத்தர் என்னும் பெயர் வைணவருடையதாகத் தெரியவில்லை. இவரை வைணவர் என்றே கொண்டாலும், இக்காலத்தில் நோய்தீருவதற்காக மதக்கொள்கைகளைவிட்டு நாகூர் தர்க்காவுக்கும், வேளாங்கண்ணிக்கும் பல இந்துக்கள் செல்வதுபோலே, பகழிக்கூத்தர் வயிற்றுவலி தீருவதற்காக முருகனை அடைந்தார் என்று தேறும். வைத்தியர்களுக்குள்ள நோய் தீர்க்கும் சக்தி தெய்வங்களுக்கில்லை என்று நாம் சொல்வதில்லை. ஸம்ஸாரமாகிற பெருநோய் தீரப்பெற்று மோக்ஷமடைவதற்காகத் திருமாலையே அடைந்ததாக இதிஹாஸ புராணங்களில் சரித்திரங்கள் காண்கின்றன. இக்காலத்திலும் மோக்ஷமடைய விரும்பும் ஸ்மார்த்தர்களும் ஸ்ரீமந் நாராயணனையே பற்றி நிற்பதையும், மோக்ஷத்தை விரும்பி மற்ற தெய்வங்களிடம் எவரும் போவதில்லை என்பதையும் காண்கி

ரேம். "மாஅயோயே! மாஅயோயே! மறுபிறப்பு அறுக்கும் மாசில்சேவடி மணிதிகழ் உருபின் மாஅயோயே!" என்றும், "நாறு இணர்த் துழாயோன் நல்கின் அல்லதை ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்" என்றும் பரிபாடலில் சங்ககாலச் சான்றோர்களே திருமாலைத் தவிர வேறு எவராலும் மோக்ஷத்தை அளிக்கமுடியாது என்று முழங்கினார்கள். சிவன், முருகன் முதலானவர்களுக்கு அவர்கள் இந்தப் பெருமையை எங்கும் பாடவில்லை. இவ்வுண்மையை ஒப்புக்கொள்ளும் நேர்மை கி. வா. ஜ.வைப் போன்றவர்களுக்கு இல்லாமலிருப்பது மிகவும் வருந்துதற்குரியது.

*33. அதே கலைமகளில் 'நம்பிக்கைகள்' என்னும் தொடர் கதையில் "வசிஷ்டர் தாஸிபுத்திரர்" என்று எழுதியிருப்பது உண்மையா?*

இது உண்மையல்ல. ஆதிசங்கரராலும் கொண்டாடப் பட்டு, தம் நூல்களிலும் மிகுதியாகக் கையாளப்பட்ட விஷ்ணுபுராணத்தில் முதல் அம்சம், ஏழாம் அத்தியாயத்தின் தொடக்கத்தில், வசிஷ்டரைப் பிரமன் தன் மனத்தாலேயே ஸ்ருஷ்டித்ததாக உள்ளது.

*34 அதே கதையில் "நம்முடைய பண்பே வேடிக்கை யானதுதான். அத்வைதத்தையும் ஒப்புக்கொள்ளும்; அதற்கு நேர் எதிரான சைவசித்தாந்தத்தையும் ஒப்புக்கொள்ளும். பகுத்தறிவின் அடிப்படையிலான லோகாயதத்தையும் ஏற்றுக்கொள்ளும். அதேசமயம் இந்த மாதிரியான சித்துவேலைச் சாமியார்களின் அவதாரப் புரளிகளையும் ஒப்புக்கொள்ளும். ஆனால் எதிலும் தீவிரமான நம்பிக்கையும் கிடையாது" என்று தொடங்கி எழுதியிருக்கும் விஷயங்களை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

'இந்துக்கள்' என்று பெயர் சூட்டிக்கொண்டிருக்கும் மதங்களைச் சேர்ந்த பெரும்பாலான மக்களின் நிலை இன்று இப்படியே உள்ளது இந்நிலை நீடித்தால் சைவமும், வைணவமும் விரைவில் அழிந்துவிடும். வைஷ்ணவர்கள் விஷயத்திலாவது இந்நிலை சீர்திருந்துவதற்குச் சீரியர்படை மிகவும் முயலவேண்டும்.

*35. அதே கலைமகளில் ராமாயணத்தை அடிப்படையாகக் கொண்ட 'தீயில் பூத்த மலர்' என்னும் கற்பனைக் கதையில்*

ஸ்ரீராமனும், சீதாப்பிராட்டியும் ஏகாந்தமாகச் சயனித்துக் கொண்டிருப்பதைப் பார்த்த லக்ஷ்மணன், 'ஊர்மிளையுடன் நாமும் இப்படியிருக்கவேண்டிய நேரமல்லவா' என்று ஒருகணம் நினைத்த தாகக் கற்பனை செய்யப்பட்டுள்ளது. இக்கற்பனை முறையாகுமா? அதிலேயே ராவணன் சீதையை அபஹரித்துச் சென்றபின்பு பதின்மூன்று ஆண்டுகளுக்குப் பின்னரே பட்டாபிஷேகம் நடந்தது என்று எழுதப்பட்டுள்ளது. இது சரியா?

பெருமாளுக்கும் பிராட்டிக்கும் கைங்கர்யம் செய்வதைத் தவிர வேறு எதையும் கணப்பொழுதும் நினையாத இளைய பெருமாளைப்பற்றிய இக்கற்பனை விபரீதக் கற்பனையே. ராவணன் சீதையை அபஹரித்து அசோகவனத்தில் பத்து மாதமே சிறைவைத்திருந்தான் என்று ஸ்ரீராமாயணத்திலிருந்து தெளிவாக விளங்குகிறது. ஆகையால் சீதாபஹாரத்திற்கும், பட்டாபிஷேகத்திற்கும் இடைப்பட்டகாலம் ஒரு வருஷத்திற்கு உட்பட்டதே; பதின்மூன்று ஆண்டுகள் என்பது தவறு.

ஒரு டில்லி அன்பர்.

36. 'ஸ்ரீராமாநுஜவாணி' என்னும் ஆங்கிலப் பத்திரிகை 'ஸ்ரீராமாநுஜ வேதாந்த செண்டர்' என்னும் பெயருடன் திருவல்லிக்கேணியில் உள்ள ஸ்தாபனத்தினால் நடத்தப்பெறு கிறது. அந்த ஸ்தாபனம் 21—7—79 அன்று ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்ரீராமாநுஜரது வேதாந்தத்தைப்பற்றி ஒரு கருத்தரங்கு நடத்தியது. அதைத் தொடங்கிவைத்த தமிழ்நாடு கவர்னர் ஸ்ரீப்ரபுதாஸ் பட்வாரி அவர்களால் வெளியிடப்பட்ட ஸ்ரீராமாநுஜ வாணி ஜூலை இதழில் K.V. சௌந்தரராஜன் என்பவர் எழுதிய ஒரு கட்டுரை அச்சிடப்பட்டுள்ளது. அதில் பல தவறான விஷ யங்கள் உள்ளன. ஸ்ரீராமாநுஜருடைய ஸித்₃தா₄ந்தத்திற்கு முரணான பல ஆதா₄ரமற்ற விஷயங்கள் காணப்படுகின்றன. "காஞ்சி சிவன் கோயில் ஒன்றில் காணப்படும் சிற்பம் ஒன்றி லிருந்து விஷ்ணு தன் ஒரு கண்ணைப் பிடுங்கிச் சிவனை அர்ச்சனை செய்து, சக்கரத்தைப் பெற்றான் என்று விளங்குகிறது." என்று அக்கட்டுரை முடிகிறது. இத்தகைய கட்டுரை ஸ்ரீராமாநுஜ வாணியில் வெளியிடத் தக்கதா என விளக்க வேண்டுகிறேன்.

ஸ்ரீராமாநுஜ ஸித்₃தா₄ந்த த்₃வேஷி ஒருவரால் எழுதப் பட்ட இக்கட்டுரையை ஸ்ரீராமாநுஜவாணியில் வெளியிட்டது

மிகவும் அருவருக்கத்தக்கது. அதிலுள்ள ஒரு வாக்கியத்தைக் குறித்து 'இதுகுறித்துச் சில வைதிக வைஷ்ணவர்கள் அபிப்ராய பே,த,ம் கொள்வர்கள்'' என்று ஸ்ரீராமாநுஜவாணியின் ஆசிரியர் குறிப்பு எழுதியிருக்கிறுர். இக்குறிப்பு அக்கட்டுரை முழுவதற்குமே மிகவும் பொருந்தும். வேத,த்திலோ, ஸ்ம்ருதிகளிலோ, இதிஹாஸங்களிலோ, ஸாத்விகபுராணங்களிலோ, காளித,ாஸன் முதலான பழைய ஸம்ஸ்க்ருதக் கவிஞர்களின் காவியங்களிலோ, சங்க இலக்கியங்களிலோ காணப்படாததாய், தாமஸபுராணங்களிலும், தேவாரம் முதலானவற்றிலுமே காணப்படும் விஷ்ணு தூ,ஷணக்கதையை ஆதரித்து எழுதியிருக்கும் இக்கட்டுரையை வெளியிட்டது, எம்பெருமானுருடைய திருவுள்ளத்திற்கு மிகவும் சிற்றத்தை விளேக்கும். இப்பத்திரிகையை நடத்தும் ஸ்த,ாபனத்தின் தலைவரான ஸ்ரீ உ. வே. திருக்கள்ளம் ஸ்வாமியும், உப தலைவரான ஸ்ரீ உ. வே. வேளுக்குடி ஸ்வாமியும் இக்கட்டுரையைத் தமிழ்ப் படுத்தச் செய்து, கவனித்து, இதற்கு அடுத்துவரும் இதழ் ஒன்றில் மறுப்பு எழுதச் செய்வார்கள் என்று நம்புகிறேம்.

K. K. நாராயணன், இராமநாதபுரம்.

*37. இவ்விடம் ஒரு விழாவில் கலந்துகொள்ளவந்த நீடாமங்கலம் கிருஷ்ணமூர்த்தி பாகவதர், ''திருப்பதி என்பது த்ரிபதி (மும்மூர்த்தி) என்ற சொல்லின் திரிபு என்றும், திருப்பதி மூலவர் விக்ரஹத்தின் சிரஸ்ஸு லிங்காகாரமாக இருப்பதாகவும், நெற்றியில் ப்ரஹ்மாவின் நெற்றிச் சின்னம் இருப்பதாகவும், மார்பில் லக்ஷ்மி இருப்பதாகவும், ஆக மொத்தத்தில் அந்த மூர்த்தி த்ரிமூர்த்தியாக இருப்பதாகவும் பேசினுர். இதுபற்றி விளக்கவேண்டுகிறேன்.*

திருப்பதியில் திருமாலே எழுந்தருளியிருக்கிறுன் என்பது சுமார் 1800 வருடங்களுக்கு முன்னிருந்த சமணரான இளங்கோவடிகளாலேயே ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. சோதியாகி எல்லா உலகும் தொழும் இவ்வெம்பெருமானைத் தங்கள் தங்கள் தெய்வமாக ஆக்கிவிடவேண்டுமென்று 1000 வருடங்களாகப் பலர் முயன்று, தோல்வியுற்று வருகிறுர்கள். அத்தோல்வியினுல் விளேந்த கடுப்பினுல் சொல்லப்படும் இத்தகைய பிதற்றல்களை நாம் பொருட்படுத்தாமல் இருப்பதே நல்லது.

K. P. ஆராவமுதாசார்யர், பழையகோட்டை.

*38. '79 மே மஞ்சரியில் 'இதிகாச உண்மைகள்' என்னும் தலைப்பில் கௌண்டின்யன் என்பவரால் ஸ்ரீராமனுக்குப் பட்டாபி ஷேகமானது கி. மு. 4400ல் என்றும், 23 ஆண்டுகள் ராஜ்ய பாலனம் செய்து 62-ம் பிராயத்தில் அமரரானர் என்றும் எழுதப்பட்டுள்ளது. இது ஸ்ரீராமாயணத்துக்கு முரணாக உள்ளது. விளக்கவேண்டுகிறேன்.*

கௌண்டின்யன் தாம் நிர்ணயித்திருக்கும் காலங்களுக்கு ஆதாரம் எதுவும் காட்டவில்லை. கிரக அமைப்புகளைக் கொண்டு இப்படி நிர்ணயிப்பதாக எழுதுகிறார். காலவெள்ளத்தில் ஒரே விதமான கிரக அமைப்புகள் திருப்பித் திருப்பி வரக்கூடும் என்பது அனைவரும் அறிந்த உண்மை. ஆகையால் திரேதாயுகத்திலும் அத்தகைய கிரக அமைப்புகள் வந்திருக்கலாம். ஆனால் வைதிகநூல்களில் நம்பிக்கையுள்ளவர்களான நாம் "ஸ்ரீராமன் திரேதாயுகத்தில் அவதரித்தான். பதினோராயிரம் ஆண்டுகள் ஆட்சிபுரிந்தான்" என்று ஸ்ரீராமாயணத்தில் உள்ளதை நம்புவோம். அந்த நூல்களில் நம்பிக்கையற்றவர்கள் இப்படி ஏதாவது ஆராய்ச்சி செய்துகொண்டுதான் இருப்பார்கள். அதை நாம் பொருட்படுத்தாமல் இருப்பதே நல்லது.

S. திருவேங்கடம், ஸ்ரீரங்கம் (39 40 கேள்விகள்)

*39. மதுரையில் வாரியாரின் மஹாபாரத உபந்யாஸத்தில் "ஏகலைவன் தனது கட்டைவிரலை த்ரோணருக்குத் தானே தந்தானா? அல்லது த்ரோணர் கேட்டுத் தந்தானா?" என்பது பற்றிக் கிருபானந்தவாரியாருக்கும், அவர் உபந்யாஸத்தைக் கேட்டுக்கொண்டிருந்த க்ருஷ்ண ஆரியா என்பவருக்கும் சர்ச்சை ஏற்பட்டு, த்ரோணர் கேட்டு ஏகலைவன் கட்டைவிரலைத் தந்தான் என்று யாராவது நிரூபித்தால் ஒருலட்சம் ரூபாய் தருவதாக வாரியார் சவால் விட்டாரென்றும், கிருஷ்ண ஆரியா வியாஸருடைய மஹாபாரதத்தில் அப்படியிருப்பதை எடுத்துக்காட்டி ஒருலக்ஷரூபாய் வாரியாரிடம் கோரினார் என்றும், அதற்கு வாரியார் "வில்லிபுத்தூராழ்வார் பாரதத்தில் ஏகலைவன் தானாகவே கட்டைவிரலைக் காணிக்கையாக ஸமர்ப்பித்தான்*

*என்று இருக்கிறது. ஆகையால் ஒரு லட்சம் தரமுடியாது" என்று எழுதினுரென்றும் பத்திரிகைகளில் செய்தி வந்திருக் கிறது. இதுபற்றிய உண்மை என்ன?*

வியாஸருடைய மஹாபாரதத்தில் கிருஷ்ணு ஆரியா சொல்லியபடியும், வில்லிபுத்தூரார் பாரதத்தில் வாரியார் சொல்லி யபடியும் தான் இருக்கிறது. ஆனுல் நடந்ததை நடந்தபடி சொல்லியிருப்பது அக்காலத்திலேயே இருந்த வியாஸரின் மஹா பாரதமே. பல்லாயிரக்கணக்கான வருஷங்களுக்குப் பிறகு இருந்த வில்லிபுத்தூரார் தம் பாரதத்தில் பல விஷயங்களை மாற்றி எழுதியிருக்கிருர். அதில் இது ஒன்று. முதல் நூல் களைப் பின்பற்றி வழிநூல்களை இயற்றும் காளிதாஸன், கம்பன் முதலான பல கவிகள் இம்முறையைப் பின்பற்றி யிருக்கிருர்கள். பொதுவாக ராமாயண உபந்யாஸம் என்ருல் வால்மீகி ராமாயணத்தைச் சொல்லாமலிருப்பது சரியல்ல. அதோடு கம்பராமாயணம் முதலான மற்ற ராமாயணங்களை யும் சேர்த்துச் சொல்லலாம். அதுபோல் பாரத உபந்யாஸம் செய்பவர்கள் வியாஸருடைய மஹாபாரதத்தை முக்கியமாகச் சொல்லி, மற்ற கவிகளின் பாரதங்களையும் சேர்த்துச் சுவை படச் சொல்லுவதுதான் தக்கது. சவால் என்று வந்துவிட்டால் மூலநூலைப் பற்றியது என்றே எல்லாரும் கொள்ளுவார்கள். ஆனுல் வாரியாருக்கு வடமொழிப் புலமை போதாது. ஆகை யால் அவர் கம்பராமாயணம், வில்லிபுத்தூரார் பாரதம் முதலானவற்றைத்தான் பெரும்பாலும் தழுவிப்பேசுவார். இரண்டிலுமில்லாத தம் கைச்சரக்குகளையும் சேர்த்துச் சொல்லுவார். அகில இந்திய வானெலியில் வாரியார்செய்த மஹாபாரத உபந்யாஸத்தில் பல கைச்சரக்குகள் இருந்ததை நாம் கேட்டிருக்கிருேம். பத்திரிகைகளில் அவ்வப்போது வெளிவரும் வாரியாருடைய உபந்யாஸங்கள் கட்டுரைகளில் உள்ள கைச்சரக்குகளையும் ஸுதர்சனர் பதிலில் விமர்சித்து, வாரியாருக்கும் அனுப்பியிருக்கிருேம். வாரியார் நம்மிடம் எந்தச் சவாலும் விட்டதில்லை. இப்போது சவால்விட்டுக் கிருஷ்ணு ஆரியாவிடம் மாட்டிக்கொண்டுவிட்டார். ஆனுல் வாரியார் செய்யும் நற்பணிகளையும் குறிப்பிடத்தான் வேண்டும். வாரியாருடைய வாக்குவன்மையால் கவரப்பட்டும், அவரது

முகஸ்துதியால் இழுக்கப்பட்டும் இதிஹாஸ புராணங்களையறியாத ஏராளமான த₄னிகர்களும், பாமரமக்களும் அவருடைய உபந்யாஸத்திற்கு வருகிறார்கள். வாரியாரும் தம் திறமையினால் லக்ஷக்கணக்கில் பணம் திரட்டி, பல கோயில் திருப்பணிகளுக்கு உதவியிருக்கிறார். இது மிகவும் பாராட்டத்தக்கது.

*40. 23—8—79 குமுதம் இலவசத் தொகுப்பில் வாரியாருடைய 'முக்திக்கு வழி பக்தி' என்னும் கண்ணப்பநாயனார் சரித்திரத்தோடு "தாரா நிராதாரா" என்னும் தலைப்பில் போஜ சம்பு உண்டானதற்குக் காரணமாக ஒரு கதை எழுதப்பட்டுள்ளது. இது உண்மையா? என்பதை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

ஏழரை நாழிகையில் (மூன்று மணியில்) காளித₃ாஸனும், போ₄ஜராஜனும் சேர்ந்து போ₄ஜசம்புவைப் பாடினார்கள் என்று எழுதியிருப்பது சிறிதும் நம்பத்தகாத விஷயம். காளித₃ாஸன் முதலிய கவிகளைப் பற்றிப் பல பொய்க்கதைகள் நம்நாட்டில் வழங்கப்பட்டு வருகின்றன. அவற்றுள் இது ஒன்று. இந்தக் கதையின் இடையில் "தாரா நிராதாரா சரஸ்வதி நிராலம்பா, பண்டித மண்டலே கண்டி, போஜராஜம் புவம் கதா" என்று ஒரு ஶ்லோகம் எழுதப்பட்டு, அதற்கு "சரஸ்வதிக்குப் பற்றுக்கோடு இல்லாமற்போய்விட்டது. என்னைப்போன்ற புலவர்கள் இனி கண்டிக்கப்படுவார்கள். போஜராஜா! நீ மோட்சலோகம் போய்விட்டாயே!" என்று பொருளும் எழுதப்பட்டுள்ளது. வடமொழியில் சிறிது பரிசயம் உள்ளவர்களுக்கும் இந்த ஶ்லோகம் எவ்வளவு அப₃த்₃த₄மானது என்பது விளங்கும். சில மாதங்களுக்கு முன் வெளிவந்த ஒரு குமுதம் இதழில் "ப₄ட்டிர் நஷ்டோ பா₄ரவீயோ விநஷ்ட:, பி₄க்ஷுர் நஷ்ட: பீ₄மஸேநோऽபி நஷ்ட:, பு₄க்குண்டோ₃ऽஹம் பூ₄பதிஸ்த்வஞ்ச ராஜந்!, ப₄ப்ப₄ாவல்யாம் அந்தகஸ்ஸந்நிவிஷ்ட:" [ப₄ட்டி இறந்துவிட்டான். பா₄ரவியும் செத்தொழிந்தான். பி₄க்ஷுவும் காலமானான். பீ₄மஸேநனும் மாண்டுபோனான். அரசனே! (உன்னால் மரணதண்ட₃னை விதி₄க்கப்பெற்ற) நான் 'பு₄க்குண்ட₃ன்' என்னும் பெயருள்ளவன். நீயோ 'பூ₄பதி' என்று பெயர் பெற்றவன். 'ப₄'கர வரிசையில் ப₄, பா₄, பி₄, பீ₄, பு₄ என்னும் எழுத்துக்களில் தொடங்கிய பெயரை உடையவர்களைக் காலன் வரிசையாகக் கொண்டு போகிறானாகையால்,

அடுத்தபடி காலகதியாகவேண்டியவன் நீயே] என்னும் ஶ்லோகம் தாறுமாறாக உருக்குலைக்கப்பட்டு அச்சிடப் பெற்றிருந்தது. ஒரு ஸம்ஸ்க்ருத பண்டிதரிடம் காட்டியிருந் தால் இத்தகைய தவறுகளைத் தவிர்த்திருக்கலாம் என்பதைக் குமுதம் போன்ற பத்திரிகைகள் உணரவேண்டும்.

S. கமலக்கண்ணன், ஸ்ரீரங்கம் (41-46 கேள்விகள்)

*41. பரமநாஸ்திகனான ஒருவன் எம்பெருமானையே எல்லா மாகப் பற்றிய பரமஸாத்விகனான தன் சத்ரு ஒருவனின் விநா சத்திற்காக ஶ்யேந யாகத்தை அனுஷ்டித்தால் அவனை ஆஸ்திக னுக்குவதற்காகப் பெருமான் அவனது விருப்பத்தை நிறை வேற்றுவானா ?*

ஶ்யேந யாகத்தை விரோதியைக்குறித்து அநுஷ்டித்தால் விரோதி அழிவான் என்பது பொதுவிதி — (rule). எம் பெருமானையே எல்லாமாகப் பற்றிய பரமஸாத்விகன் விஷயத் தில் எந்த அபிசாரப்ரயோகமும், பில்லி, சூனியம் முதலிய வைகளும் ஒன்றும் செய்யமுடியாது என்பது இதற்கு விதி விலக்கு—(exeeption). ஆகையால் ஶ்யேநயாகம் பரமஸாத் விகனை எதுவும் செய்யமுடியாது. அவனைக் குறித்து அபி சாரயாகம் செய்தவனையே இது தாக்கிவிடும். ஜடபரதரைக் காளிக்கு பலிகொடுக்க முயன்றவர்களைக் காளி தோன்றி வெட்டியழித்ததாக பாகவதத்தில் காணப்படும் ஜடபர தோபாக்யானம், அம்பரீஷசரிதம் முதலியவை இதற்கு ஆதாரம்.

*42. அந்திமதசையில் பெருமாளை ஐஶ்வர்யங்களுக்கு அதி பதியாக நினைத்தால் மறுமையில் பெருமாளையொத்த ஐஶ்வர்யம் அடைதல் உறுதியானல். அச்சமயத்தில் பெருமாளை ஸர்வ சக்தனாக ஒருவன் நினைத்தால் மறுமையில் ஸர்வசக்தனாகி விடுவானா ?*

உபாஸகன் பெருமாளை ஐஶ்வர்யங்களுக்கு அதிபதியாக அந்திமதசையில் நினைத்தால், மறுமையில் பெருமாளையொத்த ஐஶ்வர்யத்தை அடைகிறான் என்று கீதை முதலான ஶாஸ்த் ரங்களில் சொல்லப்பட்டுள்ளது. இவ்விடத்தில் 'ஒத்த' என்பது 'ஓரளவுக்கு ஒத்த' என்றே பொருள்படும். அதாவது இவ் வுலகத்தில் மிகப்பெரிய ஐஶ்வர்யமான ப்ரஹ்மாவின் ஐஶ்வர்யம்

போன்ற ஐச்வர்யத்தையடைகிருன் என்றே பொருள்படும். இவ்வுலகத்தில் அதற்கு மேற்பட்ட ஐச்வர்யத்தைப் பெற முடியாதன்றே? அதேபோல் உபாஸகன் எம்பெருமானை ஸர்வசக்தனுகவும், ஸர்வஜ்ஞனுகவும், மற்றும் பல கல்யாண கு₃ணங்களை உடையவனுகவும் அந்திமத₃சையில் அநுஸந்தி₄த்தால் மோக்ஷத்தையடைந்து எம்பெருமானுக்குப் பெருமளவுக்கு ஒத்த சக்தி, ஜ்ஞானம் முதலியவற்றை உடையவனுகிருன் என்றும் சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. உலகைப் படைத்து அளித்து அழிக்கும் சக்தி எம்பெருமானுக்கே யுரியது. அந்த சக்தி தவிர மற்ற சக்திகள் எம்பெருமானைப் போல் முக்தாத்மாக்களுக்கும் உண்டு என்பது சாஸ்த்ரங்களின் ஸாரம்.

*43. 'நிகி₂லபு₄வந' என்றெல்லாம் தொடங்காமல் 'அகி₂ல பு₄வந' என்று பாஷ்யகாரர் தொடங்கியதற்குக் காரணம் கேட்ட நடாதூரம்மாளுக்கு எங்களாழ்வான் ஸாதி₃த்த விடை என்ன?*

'அ'காரமானது விஷ்ணுவைச் சொல்லுவதாகையாலே க்₃ரந்த₂ம் அந்த எழுத்தில் தொடங்கவேண்டும் என்னும் திருவுள்ளத்தாலே, பரமமங்க₃ளமான அகாரத்தில் தொடங்கும் 'அகி₂ல' பத₃த்தை ஸ்ரீபா₄ஷ்யமங்க₃ள ச்லோகத்தில் இட்டார் பா₄ஷ்யகாரர் என்பது எங்களாழ்வான் ஸாதி₃த்த பதில். இது நடாதூரம்மாளுடைய சிஷ்யரான ஸுத₃ர்சனப₄ட்டரருளிய 'ச்ருதப்ரகாசிகை' என்னும் ஸ்ரீ பா₄ஷ்யவ்யாக்₂யானத்தில் காணப்படுகிறது.

*44. 'பத்துடையடியவர்க்கெளியவன்' என்று மட்டும் கூருமல் 'பிறர்களுக்கரிய வித்தகன்' என்றும் நம்மாழ்வார் கூறியது 'பக்தியும் உபாயமே' என்பதைத் திடப்படுத்துகிறதே?*

இங்கு 'பத்து' என்பது ப₄க்தியைக் குறிப்பது. ப₄க்தியானது இருவகைப்படும்—(1) ஸாத₄னப₄க்தி (2) 'தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே', 'உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்னும் மனப்பான்மை உடையவர்களுடைய ஸ்வயம் ப்ரயோஜனமான ப₄க்தி. முதல்வகையான ஸாத₄னப₄க்தியை அநுஷ்டி₂ப்பவர்களுக்கு அந்த ஸாத₄ன ப₄க்தியின் ப₂லமாக மோக்ஷத்தையளித்து, அவர்கள் விரும்பும் ப்₃ரஹ்மானந்த₃த்

யைக் கொடுக்கிறான் எம்பெருமான். இரண்டாவது வகைப் பட்ட பக்தியையுடையவர்கள் மோக்ஷத்தையும் தங்கள் பக்திக்குப் பலனாகக் கொள்ளாமல் எம்பெருமானுடைய முக மலர்த்தியையே பலனாகக் கொள்ளுகையாலே, அவர்களுக்கு மோக்ஷத்தை நிர்ஹேதுகமாக அளித்து அவர்களை அநுபவித்துத் தான் இன்புறுகிறான் எம்பெருமான். இதுவே நம் ஆழ்வா ராசார்யர்கள் பெற்ற தலைசிறந்த மோக்ஷம். இதற்கு பக்தி ஸாதனமாகாது. அதிகாரி விசேஷணமேயாகும்.

*45. ஒருவர் மீதும் அஸூயைப் படாமல் முத்தேவர்களையும் சமமாக எண்ணிப் பெற்று வளர்த்தமையால் 'அனஸூயா' என்று ஒரு ரிஷிபத்னி அழைக்கப்படுவதாக ஓர் உபந்யாஸகர் கூறுவது உண்மையா?*

'அநஸூயா' என்னும் சொல் எவரிடமும் அஸூயை யில்லாதவள் என்று பொருள்படும். இதை மும்மூர்த்திகள் விஷயமாக மாத்திரம் ஆக்கி, குறுக்கிப்பொருள் கொள்வது உபந்யாஸகரின் குறுகிய புத்தியைக் காட்டுகிறது. "தேவர் களுள் அக்னி மிகத் தாழ்ந்தவன். விஷ்ணு மிக உயர்ந்தவன்" [யஜுஸ்ஸம்ஹிதை 5-5] என்று வேதமே தேவர்களிடையே ஏராளமான ஏற்றத்தாழ்வுகள் இருப்பதாக ஓதுகிறது. வேதத் திற்கு மற்ற தெய்வங்களிடம் அஸூயை உண்டா? என்று இந்த உபந்யாஸகரிடம் கேட்டு அவர் என்ன பதில் சொல்லு கிறார் என்பதை எழுதுங்கள். 'யானை பெரியது, பூனை சிறியது' என்று ஒருவன் சொன்னால் 'உண்மையைக் கூறுகிறான்' என்று கொண்டாடுவார்களேயொழிய, பூனையின்மேல் அஸூயைப் படுகிறான் என்று அறிவுள்ளவர்கள் எவராவது கூறுவார்களா? இதுபோலவே "பிரமன், உருத்திரன் முதலான எல்லா தேவர் களையும் படைத்த திருமாலே மிகப்பெரியவன். மற்ற தெய் வங்கள் அவனுக்கு அடங்கியிருக்கும் ஜீவர்களே" என்று வேதசாஸ்த்ரங்களை ஆதாரமாகக்காட்டி ஸ்ரீவைஷ்ணவர்கள் கூறுவதும் உண்மையுரைத்தலேயொழிய, பொறாமையினாலேற் படுவதன்று.

*46. "க-கஞ்சன், ரு-ருத்ரன், மா-மால். எனவே பிரம்மா, சிவன், நாராயணனால் போற்றப்படும் பெரியநாயகி 'ரி' என்ற ரீங்காரத்தில் உறைகின்றாள்" என்று பாலஜோதிடம் (15-3-79) இதழில் உள்ளதைப்பற்றித் தங்கள் கருத்து என்ன?*

'கருமாரி' என்னும் தெய்வம் வேத₃த்தில் காணப்படும் தெய்வமல்ல. அம்மைநோயைப் போக்குவது போன்ற மிகத் தாழ்ந்த ப₂லன்களை வேண்டி, பாமர ஜனங்களால் வணங்கப் படும் தெய்வமிது. வேத₃ங்களும், ஸ்ம்ருதிகளும், இதிஹாஸங் களும், ஸாத்விகபுராணங்களும், சங்க இலக்கியங்களும் ஒரு முகமாகத் திருமாலே பிரமன், சிவன் முதலான எல்லா தே₃வர் களையும் படைத்தவன் என்று முழங்குகையில், அதற்கு முரணாக, மிகத் தாழ்ந்ததொரு தெய்வத்திற்கு 'கருமாரி' என்று பெயர் வைத்துக்கொண்டு, அதன் எழுத்துக்களுக்கு மனம்போனபடி பாலஜோதிடம் பொருளுரைப்பதினால் ப₃ாலர்கள் ஏமாறுவார்கள்; ஜ்ஞாநவ்ருத்₃த₄ர்கள் (அறிவில் மிக்கவர்கள்) ஏமாறமாட்டார்கள்.

T. T. V. லக்ஷ்மீநரசிம்மன். சென்னை-40.

*47. பாலஜோதிடம் 1—7—79 இதழில் 33-ம் பக்கத்தில் மாங்காடு செல்லும் வழியிலுள்ள போரூரில் ராமர் பூஜித்த ஸ்ரீராமநாதர் ஆலயம் உள்ளது என்று எழுதப்பட்டிருக்கிறது. இதன் உண்மையை ஆராயவேண்டுகிறேன்.*

தமிழ்நாட்டில், ஏன் ப₄ாரததே₃ஶம் முழுவதிலுமே ஸகல கல்யாண கு₃ணக்கடலான ராமனுடைய பெருமையை அறி யாதவர்கள் எவரும் இல்லை. அதனால் 'ராமன் பூஜித்தான்' என்று கதை எழுதினால்தான் சிவனுக்குப் பெருமை ஏற்படும் என்று உணர்ந்து, நம் தமிழ்நாட்டில் சமீபகாலத்தில் பற்பல ஊர்களிலுள்ள சிவலிங்கங்கள் ராமனால் பூஜிக்கப்பெற்றதாக ஸ்தலபுராணங்கள் எழுதப்பட்டன. ராமன் காலத்துக்குப் பல்லாயிரம் வருடங்கட்குப் பிறகு தோன்றிய இக்கோயில்களைப் பற்றி இப்படிக் கதை கட்டியிருப்பதையும், இப்பொய்க் கதைகளை வெளியிட்டு, பாலஜோதிடம் போன்ற வயிற்றுப் பிழைப்புப் பத்திரிகைகள் பாமரர்களை ஏமாற்றி வருவதையும் கண்டு அறிவாளிகள் சிரித்திருப்பார்களேயொழிய இக்கதைகளுக் கும், இப்பத்திரிகைகளுக்கும் மதிப்புக்கொடுக்கமாட்டார்கள்.

பாலசுந்தரராமாநுஜதாஸர், கோவை-20

*48 தினமணிச்சுடர் 1—7—79 இதழ் பக்கம் 8-ல் 'இலக்கியம் கூறும் விசித்திரப் பிராணிகள்' என்னும் தலைப்பில் A. மோஹன்ராம் M. A. என்பவர் சரபருபத்தை எடுத்து, சிவன் நரசிம்மனை அடக்கியதாக ஒரு புராணம் கூறுவதாக எழுதியுள்ளார். இதன் உண்மையை விளக்கவேண்டுகிறேன்.*

பிரமனை உள்ளிட்ட உலகத்தைப் படைத்தது, இந்த உல கத்திற்கு இடர் ஏற்பட்டபோது பற்பல அவதாரங்கள் எடுத்து அதை ரக்ஷித்தது. பிரளயகாலத்தில் உலகனைத்தையும் விழுங்கித் தன் வயிற்றில் வைத்துக் காப்பாற்றியது முதலான பரம் பொருளுக்கே உரிய பெருமைகளை வேத₃ஶாஸ்த்ரங்களும், சங்க இலக்கியங்களும் திருமாலுக்கே கூறுகின்றன. இந்தப் பெருமைகள் எதுவும் இல்லாத சிவனிடம் ப₄க்தி ஏற்படுவ தற்காக, தாமஸ புராணங்களில் திருமாலையும், அவனுடைய அவதாரங்களையும் இழிவுபடுத்தியும், திருமாலுடைய அவ தாரங்களில் சிலவற்றைச் சிவன் ஸம்ஹரித்தான் என்றும் பொய்க்கதைகள் புனையப்பெற்றன. வேத₃ங்கள், ஸ்ம்ருதிகள், இதிஹாஸங்கள், ஸாத்விக புராணங்கள், காளித₃ாஸன் முத லான ப்ராசீந சிவப₄க்தகவிகளின் நூல்கள், சங்க இலக்கியம் முதலான பழைய தமிழ்நூல்கள் ஆகிய எதிலுமே இக்கதை களில் ஒன்றுகூடக் காணப்பெறாததிலிருந்து இவை பிற் காலத்தில் புனையப்பெற்ற பொய்க்கதைகளே என்று நிர்ண யிக்கலாம். நமது 'சாதிமத ஆராய்ச்சி' என்னும் நூலில் இவ் விஷயம் விரிவாக நிலைநிறுத்தப்பட்டுள்ளது.

ஸ்ரீவத்ஸ K ராஜா. சென்னை-29.

*49. சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்தினர் வெளி யிட்டுள்ள கா. சி. கந்தையாப்பிள்ளையின் 'தமிழகம்' என்னும் நூலில் 'தமிழரின் சமயம் சைவமே' என்றும், விஷ்ணுவைப் பற்றி எங்கும் குறிப்பிட்டிருக்கவில்லை என்றும், சைவத்துக்கு நான்மறைகள் பிரமாணம் என்றும் எழுதப்பட்டுள்ளது. விஷ்ணுவைக் கூறாத வேதம் ஒன்று இருக்கிறதா?*

ந.சி.கந்தையாப்பிள்ளைக்கு வேத₃த்தைப் படிப்பதற்குத் தக்க வடமொழிப் புலமை இல்லாமலிருக்கலாம். அதனாலேயே அவர் வேத₃ம் நூற்றுக்கணக்கான இடங்களில் விஷ்ணுவை முழுமுதல் வனாகக் குறிப்பிட்டிருப்பதை அறியாமலிருக்கலாம். ஆனால் பரிபாடல் முதலான சங்கநூல்களிலும் சிலப்பதிகாரம் போன்ற காப்பியங்களிலும் திருமாலே முழுமுதல்வனாகக் குறிக்கப்பட்டி ருப்பதையும், மற்ற தெய்வங்கள் அவனால் படைத்தளித்தழிக் கப்படுவதாகக் கூறப்பட்டிருப்பதையும் இவர் அறியாமலிருக்க முடியாதே. ஆகையால் இவர் நெஞ்சறியப் பொய்கூறுவ தாகவே கொள்ளவேண்டும்.

S. கிருஷ்ணமாச்சாரி, ஸ்ரீரங்கம்.

*50. அடியேன் சமீபத்தில் கயை, பதரி யாத்ரை செய்து வந்தேன். கயையில் ஶ்ராத்தம் செய்து, பதரியில் ப்ரஹ்ம கபாலத்தில் பிண்டப்ரதானமும் செய்தபின்பு, வருடந்தோறும் தாய்தந்தையர்களுக்கு ஶ்ராத்தம் செய்யவேண்டுமா?*

"கயை, பதரி முதலானவிடங்களில் ஶ்ராத்₈த₄ம், பிண்ட₈ ப்ரத₃ானம் முதலானவற்றைச் செய்தால் பித்ருக்கள் முக்தி யடைந்து விடுகிருர்கள். அதற்குப் பிறகு அவர்களுக்கு ஶ்ராத்₈த₄ம் செய்யவேண்டியதில்லை" என்று க₃யாமாஹாத்ம்யம், ப₈த₈ரீமாஹாத்ம்யம் முதலானவற்றில் இருப்பதாகக் கூறுகிருர் கள். இவை க₃யா ஶ்ராத்₈த₄ம் முதலானவற்றின் பெருமை யைக் கூறவந்த நூல்களாகையாலே இவற்றைக் கொண்டு தர்ம ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்பட்ட மாதா பித்ரு ஶ்ராத்₈ த₄ங்களை விட்டுவிடுவது உசிதமல்ல என்றே ஶிஷ்டர்கள் நிர்ணயித்துள்ளார்கள். ஶிஷ்டர்களில் தலைவரான எந்தையாரும் கயை பதரி யாத்ரைக்குப் பின்பு பல ஶாஸ்த்ர நூல்களை ஆராய்ந்து, பல பெரியவர்களைக் கேட்டபின் இப்படியே நிர்ணயம் செய்து, கடைசி வரை தாமும் மாதா பித்ரு ஶ்ராத்₈த₄ங்களைச் செய்து வந்தார்.

N. சாரநாதன், தென்பாதி. J. ராமாநுஜம், ஈரோடு.

*51. பாஞ்சராத்ர ஆகமத்திற்கும், வைகாநஸ ஆகமத் திற்குமுள்ள முக்கிய வேறுபாடுகளென்ன?*

இரண்டும் விஷ்ணுவின் ஆலயங்களை அமைத்து விஷ்ணு வைத் தொழும் இரண்டு முறைகளைக் கூறுகின்றவையானாலும் அவற்றினிடையே பின்வரும் வேற்றுமைகளும் உள்ளன:— 1. வைக₂ானஸ வழிபாட்டில் மந்த்ரங்களுக்கு ப்ராத₄ான்யமும், பாஞ்சராத்ர வழிபாட்டில் தந்த்ரங்கள் எனப்படும் முத்₃ரை களுக்கு ப்ராத₄ான்யமும் கொடுக்கப்படுகிறது. 2. ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மணர் எவரும் பாஞ்சராத்ர தீ₃க்ஷை பெற்று அர்ச்சகராக லாம். வைக₂ானஸஸூத்ரத்தில் பிறந்தவர்கள்தான் வைக₂ானஸ அர்ச்சகர்கள் ஆக முடியும். 3. பாஞ்சராத்ர அர்ச்சகர்களுக்கு ஶங்க₂ சக்ராங்கனம் அவசியம். வைக₂ானஸ அர்ச்சகர்களுக்கு

கர்ப்பத்தில் விஷ்ணுபலிகர்மத்தின்போதே எம்பெருமான் சக்ராங்கனம் செய்து விடுகிறுனைகயாலே தனியாகச் சக்ராங்கனம் செய்துகொள்ளவேண்டிய அவசியமில்லை என்று வைகானஸர்கள் கூறுகிறுர்கள். இவையே முக்கிய வேறுபாடுகள்.

N. சாரநாதன், தென்பாதி.

*52. எம்பெருமானுர் பாஞ்சராத்ர ஆகமத்தையே வைணவக்கோயில்களில் புகுத்த முயற்சி செய்ததாகச் சொல்லப்படுகிறதே. அது வாஸ்தவம்தானு? அப்படியென்றுல் ஏன்?*

ஶாஸ்த்ர வரம்புகளையெல்லாம் நிலைநிறுத்த வந்த எம்பெருமானுர் ஒரு ஸந்நிதிக்குரிய ஆகமத்தை மற்றென்றுக மாற்றுவார் என்று நினைப்பதும் தவறு. ஸ்ரீரங்கம் கோவில் பாஞ்சராத்ர ஆகமத்தைச் சேர்ந்த பாரமேஶ்வரஸம்ஹிதையின்படி அநாதிகாலமாக ஆராதிக்கப்பட்டுவந்தது. எம்பெருமானுர் காலத்திற்குச் சற்றுமுன் சில காரணங்களால் அது வைகானஸர்கள் கையில் வந்துவிட்டது என்றும், அது நியாயமல்லவாகையால் எம்பெருமானுர் மறுபடியும் பாஞ்சராத்ர ஆராதன முறையை ஏற்படுத்தினுர் என்றும் கோயிலொழுகு கூறுகிறது. சமீபகாலத்தில் இந்தச் செய்தியைப் பற்றிக்கொண்டு எம்பெருமானுர் கோயில்களில் பாஞ்சராத்ரத்தைப் புகுத்திவிட்டார் என்று புரளியை கிளப்பிவிட்டிருக்கிறுர்கள். இதற்கு எந்த ஆதாரமும் இல்லை.

K. பக்ஷிராஜன், நெல்லை வழக்கறிஞர்.

S. ஸௌம்யநாராயணன். ஸ்ரீரங்கம்.

*53. '79 அக்டோபர் கலைமகளில் காமகோடி பீடாதிபதி—ராமபிரான் தாடகையாகிற பெண்ணையும், வாலியாகிற குரங்கையும், ராவணனுகிற ப்ராஹ்மணனையும் கொன்றதனுல் பாபம் ஏற்பட்டது என்றும், அதைப் போக்கிக்கொள்ளப் பலவிடங்களில் சிவலிங்க ப்ரதிஷ்டையாகிற பிராயச்சித்தம் செய்தாரென்றும் 'பிராயச்சித்தம்' என்னும் கட்டுரையில் எழுதியிருப்பது நியாயமானதா?*

இப்படிச்சொல்லுவது சிறிதும் நியாயமற்றது, ஆதாரமற்றது என்பதை 'மஹாதேவ ஶப்தார்த்த விளக்கம்' என்னும் கட்டுரையில் ஸ்ரீ உ. வே. ஶதாபிஷேகம் கோவிந்த

நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியும், 'ராமலிங்கப்ரதிஷ்டை' என்னும் நூலில் இராமநாதபுரம் வழக்கறிஞர் திரு S. T. சடகோபன் அவர்களும் பல ஆதாரங்களைக்காட்டி நடுநிலைநின்று நிலை நிறுத்தியிருக்கிறார்கள். இவற்றுக்கு எந்த பதிலும் சொல்ல முடியாமையாலே கலைமகள் முதலான பத்திரிகைகள் திருப்பித்திருப்பி எழுதுவதன் மூலம் பொய்யை உண்மையாக்கிவிடப் பார்க்கின்றன. பீடாதிபதியைக் குறித்துச் சில கேள்விகளை இங்கு கேட்கிறோம். இக்கேள்விகளுக்கு அவரோ அவருடைய *ஶி*ஷ்யர்களோ நடுநிலையாளர்கள் உகக்கும்படி பதில் எழுதிவிட்டால், நாம் ஸுதர்சனர் பதில் எழுதுவதையே நிறுத்திக்கொள்கிறோம். கலைமகள் இந்த வாய்ப்பைப் பயன் படுத்திக் கொள்ளட்டும்.

**கேள்விகள்:—** 1. ஸாக்ஷாத் பகவான் துஷ்டநிக்ரஹம் செய்வதற்காக எடுத்த அவதாரங்களில் நூற்றுக்கணக்காகவும், ஆயிரக்கணக்காகவும் அஸுர ராக்ஷஸர்களை அழித்ததினால் அவனுக்குப் பாபம் ஏற்படுமா? ஹிரண்யன் கஶ்யபப்ரஜாபதியின் பிள்ளை. பீடாதிபதியின் கொள்கைப்படி அவனும் ப்ராஹ்மணனே. அவனைக் கொன்றதால் நரசிம்மனுக்குப் பாபம் ஏற்பட்டதாகவோ, பிராயச்சித்தம் செய்ததாகவோ எங்காவது கதை உண்டா? ராவணனுடைய தம்பி கும்பகர்ணனைக் கொன்றதால் ஏற்பட்ட பாபத்திற்குப் பிராயச்சித்தம் செய்ததாக ஏன் கதையில்லை? ஜனஸ்தானத்தில் பதினாலாயிரம் ராக்ஷஸர்களையும், ராவணனுடைய மூல பல சேனை முழுவதையும், மற்றும் பற்பல அவதாரங்களில் லக்ஷக்கணக்கான அஸுர ராக்ஷஸர்களையும் கொன்றதால் பகவானுக்குப் பாபம் ஏற்பட்டதாகவோ, பிராயச்சித்தம் செய்ததாகவோ எங்குமே கதையில்லையே, ஏன்? சிவன் த்ரிபுராஸுரர்கள் முதலான பல அஸுரர்களைக் கொன்றதாலும், ப்ரஜாபதிகளில் ஒருவனாய், ப்ராஹ்மண *ஶ்*ரேஷ்டனான தக்ஷனைக் கொன்றதாலும், முருகன் சூரபத்மனைக் கொன்றதாலும், காளி மஹிஷாஸுரன் முதலானோரைக் கொன்றதாலும் பாபம் ஏற்பட்டதாகவோ, பிராயச்சித்தம் செய்து கொண்டதாகவோ எங்குமே கதையில்லையே; ஏன்?

2. ஒரு பாபத்திற்கு ஒரு முறைதான் பிராயச்சித்தம் செய்வது ஶாஸ்த்ர ஸித்தமாயிருக்க, ராமன் ராவணனைக் கொன்றதற்காகப் பல இடங்களில் பிராயச்சித்தம் செய்து கொள்ளவேண்டிய அவசியம் என்ன? பரதனைக் காணவேணுமென்று துடித்துக்கொண்டு புஷ்பக விமானமேறிச் செல்கின்ற இராமன் இப்படிப் பலவிடங்களில் இறங்கிப்

ப்ராயச்சித்தம் செய்துகொண்டிருந்திருக்க முடியுமா ? இதிலிருந்தே இக் கதைகள் சைவர்களால் புனையப்பெற்ற கட்டுக்கதைகள் என்று விளங்கவில்லையா ?

3. கச்யப ப்ரஜாபதி ப்₃ரஹ்மாவின் பிள்ளை; அவருக்கு தே₃வர்கள், அஸுரர்கள், அரக்கர்கள், பாம்புகள், பறவைகள் முதலான பல ஜாதிகளில் குழந்தைகள் உண்டு. அவர்கள் அனைவரையும் ப்₃ராஹ்மணர்கள் என்று சொல்லமுடியாது. அதேபோல் ப்₃ரஹ்மாவின் பிள்ளையான விச்ரவஸ்ஸுக்கு ராக்ஷஸியிடம் பிறந்த ராவணனும் ராக்ஷஸ ஜாதியைச் சேர்ந்தவனேயொழிய, ப்₃ராஹ்மண ஜாதியைச் சேர்ந்தவனல்லன் என்பதை மறுக்க முடியுமா?

4. "ப்ராயச்சித்தாந்யசேஷாணி தப:கர்மாத்மகாநி வை। யாநி தேஷாம் அசேஷாணாம் க்ருஷ்ணாநுஸ்மரணம் பரம் ॥" [தவம் கர்மாநுஷ்டா₂னம் முதலான உலகிலுள்ள எல்லாப்பிராயச்சித்தங்களைக் காட்டிலும் கிருஷ்ணனை நினைப்பதே மேலானது] என்று ஸ்மார்த்த வைஷ்ணவ வேறுபாடில்லாமல் எல்லா ப்₃ராஹ்மணர்களும் கர்மாநுஷ்டா₂னத்தின்போது அநுஸந்தி₄க்கிறார்கள். அந்தக் கிருஷ்ணனுக்கே நரகாஸுரனைக் கொன்றதால் வீரஹத்திதோ₃ஷம் வந்தது என்றும், அவருடைய முன் அவதாரமான ராமனுக்கு ராவணதாடகாவாலிகளைக் கொன்றதால் ப்₃ரஹ்மஹத்தி ஸ்த்ரீஹத்தி வாநரஹத்தி தோ₃ஷங்கள் வந்தன என்றும் ஒரு பீடா₂தி₄பதி எழுதுவது எப்படிப்பொருந்தும் ?

இந்தக் கேள்விகளுக்கு ப்₃ரஹ்மஹத்திப் பிரசாரம் செய்து வரும் கலைமகளிலோ அல்லது வேறு பத்திரிகைகளிலோ எவரேனும் பதிலுரைத்து நடுநிலையாளர்களை உகப்பித்துவிட்டால், நாம் ஸுதர்சனர் பதில் எழுதுவதை நிறுத்திக்கொள்கிறோம். இயலாவிடில் பீடாதி₄பதியின் விஷ்ணுத்₃வேஷக் கட்டுரைகளை வெளியிடுவதை இப்பத்திரிகைகள் நிறுத்திக் கொள்ளட்டும். நிறுத்தாவிடில், மதத்துறையில் மோசடி செய்வதற்காகவே ஏற்பட்டவர்கள் பீடாதி₄பதியும், இப்பத்திரிகை நிர்வாகிகளும் என்று நடுநிலையாளர்கள் முடிவு கட்டுவர். ப்₃ரஹ்மஹத்தி ப்ரசாரகர்களின் மாயங்கள் அனைத்தையும் அழித்துக் கொண்டு ஸுதர்சனர் பதிலும் பல சதகங்கள் தொடரும்.

**K.A. காளியப்பமுதலியார், திருப்பத்தூர். (வ.ஆ.)**

*54. 39-வது கேள்விபதிலில் 'வில்லிபுத்தூரார் பாரதத்தில் ஏகலைவன் சரிதம் வாரியார் சொல்லியபடிதான் இருக்கிறது' என்று எழுதியது சரியல்ல. அந்த பாரதம் வாரணு*

வதச் சருக்கம் 50-வது பாட்டு ''ஏகலைவன் என்ெருரு கிராதன்'' என்று தொடங்கி '' மாகலை நிறைந்து குருதக்கிணை வலக்கை யினில் வல்விரல் வழங்கியுளனுல்'' என்று முடிகிறது. தானே வழங்கினுை, கேட்டு வழங்கினுை என்பது பாட்டில் குறிப்பி டப்படவில்லை. சரீரத்தில் கண், காது போன்ற அவயவங்களை வழங்காமல் வலக்கைக் கட்டைவிரலை வழங்கியிருப்பதாகப் பாட்டில் உள்ளது. இதிலிருந்தே அர்ஜுனனுக்குப் போட்டியாக ஏகலைவன் வில்வீரனுகி விடக்கூடாது என்னும் கருத்தால் துரோணர் கேட்டே ஏகலைவன் வழங்கியிருக்க வேண்டும் என் பது விளங்கும். ஆகவே வியாஸருடைய பாரதத்துக்கும் வில்லி பாரதத்துக்கும் முரணில்லை. ஆகையால் வாரியார் சொல்லி யது எந்த பாரதத்துக்கும் பொருந்தாது. இது பற்றிக் கருத் துரைக்க வேண்டுகிறேன்.

'வழங்கியுளனுல்' என்றுள்ள பத₃த்தின் ஸ்வாரஸ்யத் தைக் கருதி '*துஷ்யது து₃ர்ஜந:*' என்னும் நியாயப்படி வாரி யார் சொன்னது சரி என்று எழுதினேம். நடுநிலைநின்று ஆராய்ந்தால் அன்பர் காளியப்பமுதலியார் சொல்லுவதே சரி என்று விளங்கும். இவ்விஷயத்தில் முதல் நூலை ஒட்டியே வழிநூலும் அமைந்துள்ளது என்னும் சிறப்பும் ஏற்படும்.

R. பத்மநாபன், பாளையங்கோட்டை.

55. பாளையங்கோட்டை ஸ்ரீகோபாலஸ்வாமி கோவிலின் முன்பு V. கோபால்ஜி என்ற அத்வைத (ப்₃ரஹ்மசாரி) ஸந்யாஸி மகாபாரதத் தத்துவ விளக்கவுரை கூறினுர். ஸ்ரீராமர், ஸ்ரீக்ருஷ்ணர் பிறக்கவேயில்லை. புராண இதிஹாஸக் கதைகள் நடக்கவே இல்லை. தற்போது இந்தியாவில் இருப்பவை அயோத்தி இல்லை, கங்கை இல்லை, இமயம் இல்லை. இதி ஹாஸ புராணங்களில் ரிஷிகள் குறிப்பிட்டவையனைத்தும் நம் மனத்திற்குள்ளேயேதான் நடக்கிறது. அப்படிப்பட்ட மனப் போராட்டங்களே ராம ராவண யுத்தமாகவும், மஹாபாரத யுத்தமாகவும், மற்றும் பல போர்களாகவும் ரிஷிகளால் வர்ணிக்கப்பட்டுள்ளது. ஆகையால் பரமாத்மா அவதாரம் செய்யவே இல்லை. ஒரே நாளில் ஜயந்தி வருவதால் ஸ்ரீராமா நுஜர் சங்கரரின் அவதாரமே. திருமலை தெய்வம் முருகனே,

சக்தியே என்றெல்லாம் பிதற்றி வருகிருர். விஷ்ணு வைஷ்ணவ தூஷணங்களை அளவுகடந்து செய்கிருர். தக்க பதில் கொடுக்க வேண்டுகிறேன்.

பரமபுருஷனை நாராயணன் பல அவதாரங்களை எடுக்கிருன் என்பது "அஜாயமானோ ப₃ஹுதா₄ விஜாயதே தஸ்ய தீ₄ரா: பரிஜாநந்தி யோநிம்" [புருஷஸூக்தம்] [பிறப்பற்றவனுயினும் பரமபுருஷன் பலபடியாகப் பிறக்கிருன். அறிவாளிகளில் சிறந்தவர்களே அவனுடைய அவதார ரஹஸ்யத்தை அறிவார்கள்] என்றும், "பிதா புத்ரேண பித்ருமாந் யோநி யோநௌ, நாவேத₃விந்மநுதே தம் ப்₃ருஹந்தம்" [காட₂கம் 3-9-55] [ஸர்வலோக பிதாவானவன் தன் பிள்ளைகளில் ஒருவனைப் பிதாவாகக்கொண்டு ஒவ்வொரு யோனியிலும் பிறக்கிருன். வேத₃மறியாதவன் அவனைப் பரமாத்மா என்று அறியமாட்டான்.] என்றும் வேத₃த்திலேயே முழங்கப்பட்டுள்ளது. இதை அறிவில் சிறந்தவர்களே அறியமுடியுமென்றும், அறிவிலிகள் அறியமாட்டார்கள் என்றும் வேத₃மே கோ₄ஷிக்கிறது. இந்த உபந்யாஸகர் எந்த கோஷ்டியில் சேர்ந்தவர் என்பதை அவரவர் கண்டு கொள்ளலாம். வேத₃ வேதா₃ந்தங்களில் மத்ஸ்யம், கூர்மம், வராஹம், ந்ருஸிம்ஹம், வாமனன், த்ரிவிக்ரமன், க்ருஷ்ணன் முதலான அவதாரங்கள் எடுக்கப்பட்டிருப்பதை விஷ்ணுசித்த விஜயம் இரண்டாம் பாகத்தில் [947-1059] பக்கங்களில் விரிவாகக் காட்டியிருக்கிறோம். வேத₃ வேதா₃ந்த ஜ்ஞானமில்லாதவர் இவர் என்பதையே இவரது உபந்யாஸங்கள் காட்டுகின்றன. சிலப்பதிகாரத்திலேயே திருமாலாக வழங்கப்படும் வடவேங்கடவனை முருகன் என்றும், சக்தி என்றும் பிதற்றும் இவர் நேர்மை சிறிதுமற்றவர் என்பது நடுநிலையாளர்களுக்கு நன்கு விளங்கும். "சங்கரரின் அத்₃வைதக் கொள்கைகள் முழுவதையும் தம் நூலில் கூ₃ண்டி₃த்திருக்கும் ராமானுஜர் எப்படி அவருடைய அவதாரமாக முடியும்?" என்று கேட்பதற்கு ஆளில்லாமையாலேயே ஊமைக்கு உளறுவாயன் சண்ட ப்ரசண்டன் என்கிற ரீதியில் இவர் உபந்யஸிக்கத் தொடங்கிவிட்டார். நாஸ்திகர்களுடைய தெய்வ நிந்தைப் பிதற்றல்களுக்குக் கூட்டம் சேருவதுபோல் அரை நாஸ்திகரான இவருடைய பிதற்றல்களுக்கும் கூட்டம் சேரு

கிறது. மதத்துறையில் நம்நாடு எத்தகைய இழிநிலைக்கு வந்து கொண்டிருக்கிறது என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு. "புலையறமாகிநின்ற புத்தொடு சமணமெல்லாம் கலையறக்கற்ற மாந்தர் காண்பரோ கேட்பரோதாம்" [திருமாலை 7] என்று ஆழ்வார் அருளியபடி இத்தகைய அரைநாஸ்திகப் பேச்சுக்களைக் கேளாமலிருப்பதே ஆஸ்திகர்களுக்கு அழகு.

C. திருநாராயணன், சென்னை-18. கி. பக்ஷிராஜன், நெல்லை வழக்கறிஞர்.

*56. 1979 அக்டோபர் 10, 11 தேதிகளிட்ட இண்டியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகையில் 'Glory of Siva' (சிவனின் பெருமை) என்னும் தலைப்பில் ஒரு கட்டுரை வெளிவந்துள்ளது. அண்ணா N. சுப்பிரமணிய அய்யர் மயிலை ராமகிருஷ்ண மடத்தில் செய்த உபந்யாஸத்தின் ஸாரமாக அது குறிப்பிடப்பட்டுள்ளது. அதில் கண்ணன் சிவனை ஜகத்காரணனாகத் துதித்ததாகவும், சிவனும் பார்வதியும் கண்ணனுக்குப் பல வரங்கள் கொடுத்ததாகவும், உபமன்யுவிடமிருந்து கண்ணன் சிவ ஸஹஸ்ரநாமத்தைக் கேட்டதாகவும், மஹாபாரதத்தில் அநுஶாஸநபர்வத்தில் விஷ்ணு ஸஹஸ்ரநாமத்துக்கு முன்னதாகவே உள்ளதாகக் குறிப்பிடப் பட்டு, சிவ ஸஹஸ்ரநாமமும் அங்கு இருப்பதாகக் கூறப் பட்டுள்ளது. இஃது உண்மையா?*

1910-ம் வருஷம் கும்பகோணம் வைதிகவர்த்திநீ முத்ராக்ஷரசாலையில் பதிப்பிக்கப்பெற்ற மஹாபாரத க்ரந்த லிபிப் பதிப்பில் அநுஶாஸந பர்வத்தின் 252 அத்யாயங்களை அச்சிட்டு முடித்த பின்பு 'ப்ரக்ஷிப்தமான அத்யாயம்' எனும் தலைப்பில் 576வது பக்கம் முதல் 642-வது பக்கம் ஈறாக 22 அத்தியாயங்கள் அச்சிடப்பட்டுள்ளன. அதிலேயே அண்ணா N. சுப்பிரமணிய ஐயர் உரையாற்றிய சிவஸஹஸ்ரநாமம் முதலானவை காணப் படுகின்றன. 576-வது பக்கத்தின் கீழே அச்சிடப்பட்டுள்ள அடிக்குறிப்பில் இந்த அத்தியாயங்கள் ப்ரக்ஷிப்தங்களே (இடைச்செருகல்களே) என்பதை நிலைநாட்டப் பின்வரும் ஆறு காரணங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. (1) பெரும்பாலான ஓலைச்சுவடிகளில் இவ்வத்தியாயங்கள் காணப்படவில்லை. (2) சிவ ஸஹஸ்ரநாமத்துக்கு வியாக்கியானம் செய்த முன்னோர்கள் அந்த ஸஹஸ்ரநாமம் லிங்கபுராணத்திலும், ஆதித்யபுராணத்தி

லும் இருப்பதாகச் சொல்லியே வியாக்கியானங்கள் செய்தி யிருக்கிறார்களேயொழிய, மஹாபாரதத்திலிருப்பதாகச் சொல்லி வியாக்கியானம் செய்யவில்லை. (3) மஹாபாரதத்தின் கதை களில் ஒன்றையும் விடாமல் சுருக்கி மஹாபாரதஸங்க்ரஹம் எழுதிய வித்யாரண்யரும் இந்த அத்தியாயங்களைத் தொட வில்லை. (4) பாரதத்தைத் தெலுங்கு பாஷையில் எழுதிய திக்கநஸோமயாஜியும் இவ்வத்தியாயங்களின் அர்த்தங்களை வர்ணிக்கவில்லை. (5) அநுசாஸந பர்வத்துக்கு வ்யாக்யானம் செய்த அர்ஜுநமிச்ரர் முதலானாரும் "இந்த உபமந்யூபாக் யானம் பல ஓலைச் சுவடிகளில் காணப்படாமையால் ப்ரக்ஷிப் தம் என்று விளங்கியபோதிலும் சில சுவடிகளில் காணப்படுவ தால் வியாக்கியானம் செய்கிறோம்" என்று தொடங்கி வியாக்கி யானம் செய்திருக்கிறார்கள். (6) பகவத்கீதை, மோக்ஷ தர்மம், அநுகீதை முதலான நூற்றுக்கணக்கான மஹாபாரத ப்ரகரணங்களில் நாராயணனே ஸகல ஜகத்காரணனென்றும், பிரமன், சிவன் முதலானோர் அவனால் படைக்கப்பட்ட ஜீவர்கள் என்றும் மிகத் தெளிவாக முழங்கியிருப்பதற்கு நேர்மாறாக இருக்கையாலும் இவ்வத்தியாயங்கள் ப்ரக்ஷிப்தங்களே என்பது நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும்.

ஆதிசங்கரர் முதலான பற்பல மதங்களைச் சேர்ந்த ஆசார்யர்களால் பாஷ்யம் இடப்பட்டதாய், சரகஸம்ஹிதை போன்ற வைத்திய நூல்கள் முதலான இதர சாஸ்த்ர க்ரந் தங்களிலும், காதம்பரீ முதலான காவியங்களிலும் ஆயிரக் கணக்கான வருஷங்களாகக் கையாளப்படுவதான விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தின் பெருமையைக் கண்டு கடுப்புற்ற சைவர்கள் சிவ ஸஹஸ்ரநாமத்தையும், சிவ பரத்வத்தையும் மஹாபாரதத்தில் நுழைத்துவிட்டால் அவையும் பரவிவிடும் என்னும் எண்ணத்தாலே இவ்வத்தியாயங்களைச் சேர்த்திருக்கி றார்கள் என்பது மஹாபாரதம் முழுவதையும் படித்த மத் யஸ்த பண்டிதர்களுக்கு மாத்திரமல்லாமல் ஸாமாந்ய ஜனங்க ளுக்குக் கூட இக்காரணங்களிலிருந்தே விளங்கும். ஆகையால் ராமாடணத்திலுள்ள சில ப்ரக்ஷிப்த ஸர்க்கங்கள்போலே இவையும் ப்ரக்ஷிப்தாத்யாயங்களே என்று நிர்ணயிக்கத் தட்டில்லை. [நாம் இண்டியன் எக்ஸ்பிரஸ்ஸுக்கு இவ்விஷயங் களைச் சுருக்கமாக எழுதியுள்ளோம்.]

S. வேங்கடம், சமயபுரம்.

*57. தினமணிச்சுடர் 4—11—79 இதழில் 'ஊற்றுக்காடு லக்ஷ்மிநாராயணன்' என்னும் தலைப்புள்ள கட்டுரையின் கடைசியில் நாராயணஸ்வாமி என்பவர் ''லிங்கத்திற்கு 'சிசினதேவர்' என்ற பெயருண்டு. அதன் கருத்தைப் புரிந்துகொள்ள இவ்வூர் இலிங்கம் ஏற்றது'' என்று கூறியிருக்கிருர். வடமொழி தெரியாத எனக்கு இதன் கருத்து புரியவில்லை. புரியவைக்கவேண்டுகிறேன்.*

வடமொழியில் '*ஶிஶ்நம்*' என்னும் சொல் ஆண்குறியைக் குறிக்கும். அதுவே தமிழில் 'சிசினம்' என்று எழுதப்பட்டிருக்கிறது. ஊற்றுக்காடு லிங்க₃ம் சிசினத்தின் வடிவிலேயே அமைந்திருப்பதை அநுப₄வித்து, லிங்க₃த்துக்குள்ள 'சிசினதேவர்' என்னும் பெயரையும் வெளிப்படுத்தியுள்ளார் கட்டுரையாளர். ப்₄ருகு₃ மஹரிஷியின் சாபத்தாலே சைவர்கள் சிவனின் லிங்க₃த்தை (ஆண்குறியை)ப் பூஜிப்பவர்களாக ஆனது பாத்₃மபுராணத்தில் விவரிக்கப்பட்டிருப்பதை 'ஸாத்விகவிஜய'த்தில் காட்டியிருக்கிறோம். '*ஶிஶ்ந*' பூஜகர்கள் உண்டு என்று ருக்₃வேத₃த்திலேயே காட்டப்பட்டிருக்கிறது. லக்ஷக்கணக்கானவர்கள் படிக்கும் பத்திரிகையில் இந்த விஷயத்தை வெளியிட்டது மிகவும் அருவருக்கத்தக்கது.

K. கோபாலன், வழக்கறிஞர், ஹைதராபாத்.

*58. தென்ஞசார்ய ஸம்ப்ரதாயத்தில் தேவதாந்தரங்களுக்கு ஆராதனமான கர்மாநுஷ்டானங்களைச் செய்யவேண்டியது அவசியமா? தேவதாந்தரங்களுக்குப் படைப்பதை அவர்களுக்கு அந்தர்யாமியாயிருந்து எம்பெருமான் உண்கிருன் என்று கூறினுல் 'எம்பெருமான் உச்சிஷ்டத்தை (எச்சிலை) உண்கிருன்' என்று ஆகாதா?*

நம்முடைய தே₃ஹம் உண்ணும் உணவினுல் நம் ஆத்மா திருப்தியடைவதைப் பார்க்கிறோம். இவ்விடத்தில் தே₃ஹம் உண்ட உச்சி₂ஷ்டத்தை (எச்சிலை) ஆத்மா உண்கிறது என்று கூறமுடியுமா? இதனுலேயே—தன் *ஶரீ*ரமான தே₃வதாந்தரங்களுக்குப் படைக்கப்பட்டவற்றினுல், ஆத்மாவான எம்பெருமான் திருப்தியடைகிருன் என்று *ஶா*ஸ்த்ரங்கள் கூறுவதிலிருந்து அவன் உச்சி₂ஷ்டத்தை உண்கிருன் என்று தேருது என விளங்கும். தென்ஞசார்ய ஸம்ப்ரதா₃யத்தில் மிகவும் அவசிய

மான நித்ய நைமித்திக கர்மங்கள் இயன்றவரையில் அநுஷ்டி₂க்கப்பட வேண்டியவையே என்றே எல்லாப் பூர்வாசார்யர்களும் அருளிச்செய்துள்ளனர். இன்றளவும் ஶிஷ்டர்களுடைய அநுஷ்டா₂னமும் அப்படியே காண்கிறது. ஒரு ப₂லனை உத்₃தே₃ஶித்துச் செய்யப்படும் காம்யகர்மங்களைத்தான் நம் ஸம்ப்ரதா₃யத்தில் விடச் சொல்லியிருக்கிறார்கள்.

**கோ. தேவராஜன், நெய்வேலி (59-62 கேள்விகள்)**

*59. உலகம் முழுவதையும் விஷ்ணுவே படைத்தார் எனில், அவர் ஏன் மற்ற தேவதைகளை (தெய்வங்களை)ப் படைக்க வேண்டும்? எல்லாம்வல்ல அவரே உலகைக் கண்காணிக்கலாமே?*

பரமாத்மா அவரவர் புண்யபாபங்களுக்கு அநுகு₃ணமாகச் சேதனர்களை தே₃வர், மனிதர், திர்யக், ஸ்தா₂வரம் என்னும் நாலுவகைப்பட்ட யோனிகளிலே பிறக்கச் செய்கிறான் என்று ஶாஸ்த்ரம் கூறுகிறது. மிகுந்த புண்யம் செய்தவர்கள் தே₃வர்களாகப் பிறக்கிறார்கள். புண்யம் செய்தவர்களை ஒவ்வொரு நாட்டிற்கு அரசர்களாக்கி அவர்களைக்கொண்டு நாட்டை ஆளச் செய்வதுபோலே, பிரமன், சிவன், இந்திரன் முதலான தே₃வர்களைப் படைத்து எம்பெருமான் உலகங்களை ஆளச்செய்கிறான். வெளித்தோற்றத்திற்கு இவ்வரசர்களும், தே₃வர்களும் ஆள்வதாகத் தோன்றினாலும், அவர்களுக்குள்ளிருந்து உலகனைத்தையும் ஆள்பவன் எம்பெருமானே. அவரவர் கர்மாநுகு₃ணமாகவும், கு₃ணாநுகு₃ணமாகவும் படிப்படியாக ஒவ்வொரு தெய்வங்களை ஆஶ்ரயித்துக் கடைசியில் தன்னை அடைவதற்காகவும் எம்பெருமான் பல தெய்வங்களைப் படைத்திருக்கிறான் என்றும் ஶாஸ்த்ரங்கள் கூறுகின்றன.

*60. அவதாரங்களை இங்கு (இந்தியாவில்) மட்டும் ஏன் எடுக்கவேண்டும்? உலகின் பல இடங்களில் எடுக்காதது ஏன்?*

த₃ஶாவதாரங்கள் எடுக்கப்பட்ட க்ருத த்ரேதா த்₃வாபர யுக₃ங்களில் பா₄ரததே₃ஶம் தவிர மற்ற நாடுகளில் காட்டுமிராண்டி ஜனங்களே வாழ்ந்து வந்ததாக அந்த நாட்டுச் சரித்திரங்களே கூறுகின்றன. ஆகையால் அவதாரம் தேவையில்லாத அந்த நாடுகளில் அவதரிக்காமல், வேத₃நாக₃ரிகம் பரவியிருந்த பா₄ரத தே₃ஶத்திலேயே பெரும்பாலான அவதாரங்கள் ஏற்பட்டன. அவற்றிலும் மத்ஸ்யாவதாரமும், கூர்மாவதாரமும் கடலில்

உண்டானவை. வராஹாவதாரம் பூ₄மி முழுவதையும் தூக்கி எடுப்பதற்காக ஏற்பட்டது. வாமனுவதாரத்தை எடுத்த இடம் தே₃வலோகம். அவன் திரிவிக்கிரமனுய் வளர்ந்தபோது எல்லா உலகங்களையும் தாவியளந்தான். த₃ஶாவதாரங்கள் தவிர, மற்றும் கணக்கற்ற அவதாரங்கள் உண்டென்று வேத₃ ஶாஸ்த்ரங்கள் கூறுகின்றன. அவற்றை மற்ற நாடுகளிலும், நம் கண்ணுக்குத் தெரியாத மற்றும் பல உலகங்களிலும் எடுத்திருக்கவுங்கூடும். அவதாரங்கள் ஸாக்ஷாத் அவதாரங்கள் என்றும், ஆவேஶாவதாரங்கள் என்றும், அம்ஶாவதாரங்கள் என்றும் மூவகைப்படும். எம்பெருமான் நேரே வந்து பிறப்பது ஸாக்ஷாத் அவதாரம். மற்ற இரண்டுவகை அவதாரங்களிலும் ஒரு ஜீவனை இடையிட்டுக்கொண்டு பிறக்கிருன். பிரமன், சிவன் முதலானவர்களும் எம்பெருமான் ஒரு ஜீவனை இடையிட்டுக்கொண்டு பிறக்கும் அம்ஶாவதாரமாகக் கூறப்படுகின்றனர். வெளிநாடுகளில் பிறந்து, பெரிய மதங்களைத் தோற்றுவித்த ஏசுகிறிஸ்து, முகம்மதுநபி முதலானவர்களையும் எம்பெருமானின் அம்ஶாவதாரமாகக் கொள்ளுவதில் குறையில்லை. *''யத்₃யத் விபூ₄திமத் ஸத்த்வம் ஶ்ரீமத் ஊர்ஜிதமேவ வா। தத்ததே₃வ அவக₃ச்ச₂ த்வம் மம தேஜோம்ஶஸம்ப₄வம் ॥''* [கீ₃தை 10-41]என்று பல வகைகளில் சிறப்புற்ற சேதநாசேதநப்பொருள்கள் அனைத்திலுமே தன் அம்ஶம் இருப்பதாக எம்பெருமான் அருளியிருப்பது இங்கு நோக்கத்தக்கது. இப்படி கணக்கற்ற அவதாரங்களை எம்பெருமான் எடுத்திருந்தபோதிலும், வேத₃ நெறியை மீருமலிருந்த ஸாக்ஷாத் அவதாரங்களே வணங்கத் தக்கவை என்று ஶாஸ்த்ரங்கள் கூறுகின்றன.

*61. முற்பிறப்பின் பயனுய் தற்போது கஷ்டத்தை அநுப₄விக்கும் மனிதனுக்கு அக்கஷ்டத்திலிருந்து இங்கேயே விடுபட வழியே கிடையாதா? உதாரணமாகப் பல பக்திமான்களும் இங்கு கஷ்டப்படுகிருர்களே.*

முன்வினைப் பயனுக இங்கு ஜீவர்கள் அனைவரும் ஸுக₂ து₃:க₂ங்களை அநுப₄விக்கின்றனர். அதைப் பொறுத்துக் கொள்ளத்தான்வேண்டும். இக்கஷ்டங்கள் நேரும்போது 'எம்பெருமானை அடையத் தடையாயிருக்கும் நம்முடைய கர்மங்கள் கழிகின்றன' என்று ஜ்ஞாநிவர்யர்களான பூர்வாசார்யர்கள்

ஸந்தோஷப்பட்டிருக்கிறார்கள். பரமஜ்ஞாநியான குந்திதே₃வி கண்ணனைப் பார்த்து "உன்னை நினைப்பதற்கு வாய்ப்பளிக்கும் கஷ்டங்கள் எங்களுக்கு அடிக்கடி நேரட்டும்" என்று ப்ரார்த்தித்தாள். ஆகையால் ப₄க்திமான்கள் தங்களுடைய முன் வினைப் பயனாக இங்கு படும் கஷ்டங்களைப் பொறுத்துக் கொண்டு, எம்பெருமானுக்கும் அவனடியார்களுக்குமேயான வாழ்க்கையை நடத்தவேண்டும். இப்படிப்பட்டவர்களுக்கே இப்பிறப்பு முடிந்தவுடன் எம்பெருமான் நிர்ஹேதுகமாக மோக்ஷத்தையே அளித்து, அவர்களைப்பெற்று பெரும்பேறு பெற்றவனாகத் தான் இன்புறுகிறான் என்பது ஸகல *ஶா*ஸ்த்ர ஸாரம்.

*62. இங்கு உள்ள ஒரு சிலர் உங்களை 'வடகலை' துவேஷி என்று கூறுகிறார்கள். நான் நம்பவில்லை. ஆனால் அவர்களுக்கு எப்படி பதில் சொல்லுவது என்று தெரியவில்லையே.*

"வடகலை" ஸம்ப்ரதா₃ய ப்ரவர்த்தகரான ஸ்ரீ வேதா₃ந்த தே₃*ஶி*கருடைய கிரந்த₂ங்களில் நியாய ஸித்₃தா₄ஞ்ஜனம், அதி₄கரண ஸாராவளி ஆகியவற்றை தே₃*ஶி*கஸம்ப்ரதா₃யவித்₃வத்₃ வரிஷ்ட₂ரான ஸ்ரீ உ. வே. கோழியாலம் ரங்க₃நாதா₂சார்ய ஸ்வாமியிடம் காலக்ஷேபமுறையில் அதி₄கரித்தவனடியேன். இப்போதும் கீ₃தாதாத்பர்யசந்த்₃ரிகையைக் காலக்ஷேபமுறையில் அந்த ஸ்வாமியிடம் அதி₄கரித்தபின்பே கீ₃தாவ்யாக்₂யானம் எழுதிவருகிறேன். எந்தையாரிடமும், மற்றும் பல மஹநீயர்களிடமும் தென்னாசார்ய ஸம்ப்ரதா₃ய க்₃ரந்த₂ங்களையும் அதி₄கரித்திருக்கிறபடியால், அடியேனுக்குரிய தென்னாசார்ய ஸம்ப்ரதா₃யத்தையும், தே₃*ஶி*கஸம்ப்ரதா₃யத்தையும் தெளிவாக அறியும் வாய்ப்பு அடியேனுக்கு உள்ளது. இதனால் அடியேனது நூல்களில் இரண்டு ஸம்ப்ரதா₃யத்தின் அடிப்படைகளையும் தெளிவாகக் காட்டி, இரு ஸம்ப்ரதா₃யாசார்யர்களின் திருவுள்ளங்களையும் விளக்கி வருகிறேன். இரு ஸம்ப்ரதா₃ய ஸ்த₂ர்களும் தத்தம் ஸம்ப்ரதா₃யத்தில் உறுதியுள்ளவர்களாய், இரு ஸம்ப்ரதா₃யங்களையும் ஒன்றாக்கிக் குழப்பாமல், பரஸ்பர சகிப்புத்தன்மையோடு வாழ்வதொன்றே வைணவம் வளர்வதற்கு வழி என்றும் காட்டி வருகிறேன். இஃதொன்றையும் அறியாதவர்களும், தே₃*ஶி*கன் மிகவும் உகந்ததான மறந்தும்

புறந்தொழாமையே இல்லாதவர்களுமே என்னை 'வடகலை த்₃வேஷி' என்று கூறுவார்கள். தே₃ஶிக ஸம்ப்ரதா₃யத்தைச் சேர்ந்த பல வித்₃வான்களும், ரஸிகர்களான அன்பர்கள் பலரும் இக்கூற்று பொய்யானது என உணர்ந்திருக்கிறார்கள். ஆகை யால் முற்கூறிய து₃ஷ்ப்ரசாரத்தை நம்பவேண்டா.

S. K, ராமசாமி, ஸ்ரீரங்கம்

*63. 21—10—79 காலை 7 மணிக்கு திருச்சி வானொலியில் "பட்டி விடுவராது" "இதர தைவமுலவல்ல" என்னும் இரு தியாகராஜ கீர்த்தனைகளுக்கு விளக்கம் செய்த கல்லூர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்த்ரி என்பவர் அக்கீர்த்தனைகளில் பார்வதியே ராமனாக அவதரித்ததாகக்கூறி "ஸ்த்ரியம் புருஷவிக்₃ரஹம்" என்னும் வால்மீகி ராமாயண ஶ்லோகத்தையும் அதற்கு ஆதா₄ரமாகக் காட்டினார். சிவனும் ஸீதாலக்ஷ்மியும் ஒன்றே எனக்கூறி, அதற்கு ஆதா₄ரமாக சிவனுக்குரிய பில்வமரம் லக்ஷ்மிக்கும் உரியதாயிருப்பதைக் காட்டினார். சிவவிஷ்ணு ஸாம்யவாத₃மும் பேசினார். அக்கீர்த்தனைகளிலும், வால்மீகி ராமாயணத்திலும் இவற்றுக்கு இடமுண்டா?*

அக்கீர்த்தனைகளிலும், வால்மீகி ராமாயணத்திலும் சாஸ்த்ரி களின் வாத₃ங்களுக்குச் சிறிதும் இடமில்லை. "ராமா! என்னைக் கைப்பிடித்துக் கரைசேர்ப்பாய். நான் பிறந்த அன்றே எனக்கு உன்னிடம் உண்மையான ப₄க்தியைக் கழுத்தில் தாலி கட்டுவதுபோல உறுதியாக அனுக்₃ரஹித்து, என் கௌ₃ரவம் கெடாமல் என்னைக் காத்து, அழியும் தன்மையுடையது, அழியாமல் என்றென்றுமிருப்பது ஆகியவற்றை எனக்கு உணர்த்தி, செய்யத்தகுந்தவை, தகாதவை என்ற பகுத்தறிவையும் புகட்டி, தனித்த முழுமுதற்பொருள் நீயே என்பதைச் சுட்டிக்காட்டி, உனதடியானாகிய என் கையைப் பிடித்து நழுவவிடாமல் காப்பாய்." என்பது முதல்கீர்த்தனையின் பொழிப்புரை. "ஸ்ரீராமா! உன்னையல்லாத தெய்வங்களால் பூ₄மியில் க்ஷேமம் உண்டாகுமா? இராமனே பரம்பொருள் எனும் மதத்தினின்றும் பிறழாது, எப்பொழுதும் மனத்தில் ஸ்ரீராம மோகங்கொண்ட எனக்கு இதர தெய்வங்களிடமிருந்து க்ஷேமம் உண்டாகுமா? ஸ்ரீராமா! (என்) மனத்தை அறிந்து காப்பாற்றினாலும் மறந்தாலும் நீயே தியாகராஜனால் கொண்

டாடப்பட்டவன். தன்னுடையவன் என என்னை உன்னுடைய வனுய்ப் பாவிப்பதற்குச் சமயம் இதுவே." என்பது இரண்டாவது கீர்த்தனையின் பொழிப்புரை. இவற்றிலிருந்து தியாகராஜர் ராமன் ஒருவனையே முழுமுதல்வனுகக் கொண்டவர் என்று தெளிவாக விளங்குகிறது. ஆகையால் சாஸ்த்ரியின் வாதங்களுக்கு இங்கு சிறிதும் இடமில்லை. இராமன் தன்னைக் காட்டுக்கு அழைத்துப்போக மறுத்ததைக் கண்டு, "நீ செய்யும் இக் காரியத்தைக் கேள்விப்பட்டால் ஆண்வேஷங்கொண்ட பெண் பிள்ளைக்கு நமது பெண்ணைக் கொடுத்துவிட்டோமே என்று என் தகப்பனுர் வருந்துவார்" என்று குத்திக்காட்டித் தன்னைக் காட்டுக்கு அழைத்துச்செல்லும்படி செய்கிருள் சீதை. இதிலிருந்து பார்வதியே ராமனுக அவதரித்ததாகத் தேறுவதாக அறிவுள்ளவர் எவரும் கூறமாட்டார்கள். லக்ஷ்மிக்கு உரியதாக ஸ்ரீஸூக்தத்தில் ஓதப்பட்ட பில்வமரத்தை, லக்ஷ்மீ தராஸனுகையாலே சிவன் தனக்கும் பிரியமாகக் கொண்டான் என்னும் உண்மையை மாறுபடுத்தி, சிவனையும் லக்ஷ்மியையும் ஒன்ருக்குவதும் ஆதாரமற்றது. பரமவைஷ்ணவரான ஆதி சங்கரரையே சைவராக்குவதற்காக அவருடைய பாஷ்யங்களுக்கு முரணுன பல ஸ்தோத்ரங்களை அவர் பேரில் ஏறிட்ட ஸமூஹம், தியாகராஜர் பேரிலும் சில கீர்த்தனைகளை ஏறிட்டு, அவருடைய உண்மையான கீர்த்தனைகளுக்கு அபார்த்தம் செய்து அவரைச் சைவராக்கப் பார்ப்பதில் வியப்பில்லை. பார்வதியும் ராமனும் ஒன்றென்று பேசிய இந்த சாஸ்திரியே 11—11—79 ஞாயிறு காலை 7 மணிக்குத் திருச்சி வானுெலியில் நிகழ்த்திய தியாகராஜகீர்த்தனை விளக்கத்தில் பார்வதிக்குத் தமையன் விஷ்ணு என்று பேசுகிருர். இப்படித் தியாகராஜ கீர்த்தனைகளுக்கு சம்பந்தமேயில்லாமல் முன்னுக்குப் பின் முரணுகப்பேசும் இத்தகைய பிதற்றல்களைக்கண்டு அறிவாளிகள் சிரித்திருப்பார்களேயொழியப் பொருட்படுத்தமாட்டார்கள்.

V. ஸ்ரீநிவாஸன், திருச்சி-17.

*64. 36-வது கேள்வி பதிலுக்கு விஷயமான கட்டுரையை ஸ்ரீந்ருஸிம்ஹ ப்ரியா கண்டித்திருப்பதையும், ஸ்ரீராமாநுஜவாணி அக்டோபர் '79 இதழில் பல ஸ்ரீவைஷ்ணவர்கள் கண்டித்திருப்பதையும், ஒரு நிருபர் தங்களைக் கண்டித்திருப்பதையும், கட்டுரை*

*யாசிரியரும், ஸ்ரீராமாநுஜவாணி ஆசிரியரும் கண்டனங்களுக்கு பதிலுரைத்திருப்பதையும் விமர்சிக்க வேண்டுகிறேன்.*

விவாத₃விஷயமான கட்டுரை ஸ்ரீராமாநுஜரின் கொள்கையை விளக்கவந்த பத்திரிகையில் வெளியிடத்தக்கதன்று என்பது உண்மையான வைஷ்ணவர்களின் ஒருமுகமான கருத்து என்னும் விஷயம் ஸ்ரீராமாநுஜவாணியை நடத்தும் ஸ்த₂ாபனத்தின் தலைவரான ஸ்ரீ உ. வே. திருக்கள்ளம் நரஸிம்ஹராக₄வாசார்ய ஸ்வாமியை ஆசிரியராகக் கொண்ட ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியாவின் க₂ண்ட₂னத்திலிருந்தும். ஸ்ரீராமாநுஜவாணியில் வெளியிடப் பட்டிருக்கும் 18 கடிதங்களில் பெயரில்லாத ஒரு நிருபர் தவிர மற்றவர்கள் அனைவரும் அக்கட்டுரையைக் க₂ண்டி₃த்திருப்பதி லிருந்தும் அனைவர்க்கும் விளங்கும். அக்கட்டுரை முழுவதை யும் தமிழ்ப்படுத்தினால், அது அக்₃நிஹோத்ரியின் வரலாற்றில் பிறந்த வைணவநூலின் சுருக்கம்போல் விளங்குவது என்பது ஆங்கிலமறியாதவர்க்கும் விளங்கும். சிற்பங்கள் பற்றிய (ஆர்க்க லாஜிகல்) ஆராய்ச்சியையும், சரித்திர ஆராய்ச்சியையும் அடிப் படையாகக்கொண்டு அக்கட்டுரை எழுதப்பட்டதாகவும், அத்தகைய கட்டுரையை ஸ்ரீராமாநுஜவாணியில் வெளியிடுவது தவறில்லாததோடன்றியில் அவசியமானது என்றும் கட்டுரை யாசிரியரும், வாணியின் ஆசிரியரும், பெயரில்லாத நிருபரும் எழுதியிருக்கிறார்கள். நாம் 'அருவருக்கத்தக்கது' என்று எழுதியது கடுமையானது (uncharitable) என்று பெயரில்லாத நிருபர் எழுதுகிறார் அவரும், வாணியின் ஆசிரியரும் விஷ்ணு தன் கண்ணைப்பிடுங்கி சிவார்ச்சனைசெய்து சக்கரத்தைச் சிவ னிடமிருந்து பெற்றதாகக் கூறும் கதையை வெளியிட்டது விஷ்ணுபரத்வத்தையே ஸ்த₂ாபிக்கும் என்றும் எழுதுகிறார்கள்! இவர்களைக் குறித்து நாம் ஒரு சவால் விடுகிறோம். விவாத₃ விஷயமான கட்டுரையை இவர்களே தமிழ்ப்படுத்தி நமக்கு அனுப்பட்டும். அதை அப்படியே ஸுத₃ர்சனத்தில் வெளியிட்டு, ஶ்ருதி ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களுக்கும், பண்டையிலக்கியங்க ளுக்கும், பூர்வாசார்ய க்₃ரந்த₂ங்களுக்கும் அக்கட்டுரை எவ் வளவு முரண்பட்டது என்றும், இவையொன்றையும் அறி யாமல், பட்டம் பதவிகள் பெறுவதற்காக அரைகுறைப் படிப்பாளிகளான சில ஆராய்ச்சியாளர்கள் சில சிற்பங்களையும்

கல்வெட்டுகளையும் மாத்திரம் ஆதாரமாகக்கொண்டு எழுதிய அரைவேக்காட்டு ஆராய்ச்சிகளைத் தழுவி எழுதப்பட்டது என்றும் நாம் நிரூபிப்போம். இந்தச் சவாலை ஏற்றுக்கொள்ளும் துணிவில்லாவிடில், இனியாவது இத்தகைய அபத்தக்கட்டுரைகளை வாணியில் இவர்கள் வெளியிடாமலிருப்பார்களாக.

S ஸௌம்யநாராயணன், ஸ்ரீரங்கம்.

*65. 53-வது கேள்வி பதிலில் தாங்கள் சவால்விட்டிருப்பதை ஏற்றுக்கொள்ள இயலாமையால் கடுங்கோபங்கொண்டு, நவம்பர் '79 கலைமகளில் 'புராணங்கள்' எனும் கட்டுரையில் ராமனுக்கு ராவணனைக் கொன்றதால் ப்ரஹ்மஹத்தி தோஷத்தோடு வீரஹத்தி தோஷமும், சாயாஹத்தி தோஷமும் ஏற்பட்டதாகவும், அதற்காக ராமேச்வரத்திலும், மற்றும் இரண்டு இடங்களிலும் ராமன் லிங்கப்ரதிஷ்டை செய்ததாகவும் ஸ்தலபுராணங்களை ஆதாரமாகக் காட்டி எழுதியிருப்பதைப் பார்த்தீர்களா? பதில் கொடுக்கவேண்டுகிறேன்.*

ராவணன் ஆயிரக்கணக்கான ரிஷிகளைக் கொன்றும், கொல்லச்செய்தும் கணக்கற்ற ப்ரஹ்மஹத்திகளைச் செய்தவன். நாலு வேதமும் படித்த நல்ல ப்ராஹ்மணனானாலும் அவன் ஒரு ப்ரஹ்மஹத்தியைச் செய்தால் அவனுடைய ப்ராஹ்மண்யம் அழிந்துவிடும். ராக்ஷஸிக்குப் பிறந்த ராக்ஷஸனாய், ஆயிரக்கணக்கான ப்ரஹ்மஹத்திகளைச் செய்த ராவணனை ப்ராஹ்மணன் என்று கூறி, அவனைக் கொன்றதினால் ராமனுக்கு ப்ரஹ்மஹத்தி, வீரஹத்தி, சாயாஹத்தி (புகழ்க்கொலை) என்னும் மூன்று தோஷம் ஏற்பட்டதாகக் கூறுகிறவர்களே — பரப்ரஹ்மமான ராமனை இழிவுபடுத்துவதால் ப்ரஹ்மஹத்தி தோஷமும், மஹாவீரனான ராமனின் புகழைப் பொறுக்க மாட்டாமல் பொய்க்கதைகளைப் பேசுவதால் வீரஹத்திதோஷமும், சாயாஹத்தி தோஷமும் புரிந்தவராகிறார்கள். ஸ்வத: ப்ரமாணமான வேதங்களிலும், அதற்கு முரண்படாமல் பேசுகையாலே ப்ரமாணமான ஸ்ம்ருதீதிஹாஸ ஸாத்விகபுராணங்களிலும் தங்கள் கொள்கைக்கு எந்த ஆதாரமும் இல்லாமையால், சமீபகாலத்தில் கற்பிக்கப்பட்ட ஸ்தலபுராணங்களே பரமப்ரமாணம் என்று பேசத்தொடங்கிவிட்ட இந்த ப்ரஹ்மஹத்தி ப்ரசாரகர்களைக் குறித்து நாம் பரிதாபப்பட வேண்டுமேயொழியக் கோபங்கொள்ள இடமில்லை.

V. ஸ்ரீநிவாசன், திருச்சி-17.

*66. (1) 1979 'கல்கி' தீபாவளி மலரிலும், நவம்பர் '79 கலைமகளிலும் இராவணனுடைய புகழை இராமன் அழித்து விட்டதாகப் பீடாதிபதி கூறுகிருர். புகழ் அழிக்கக்கூடியதா? (2) ''யுத்தத்தில் எதிரிகளை அழிப்பது க்ஷத்ரிய தர்மம், த்ரோணர் முதலான ப்ராஹ்மணர்களையும் பீஷ்மபிதாமஹர் முதலானுரையும் யுத்தத்தில் அழிப்பதால் பாபமில்லை, வீர ஸ்வர்க்கமும், மோக்ஷமுங்கூடக் கிட்டும்'' என்று கீதையில் கண்ணன் அருளியிருக்கிருன். இதற்கு முரணுக 'யுத்தத்தில் ராமன் ராவணனைக் கொன்றது ப்ரஹ்மஹத்தி பாபத்தை விளைக்கும்' என்று பீடாதிபதி கூறுவது எப்படிப் பொருந்தும்?*

(1) மனிதனுடைய உடலை அழிக்கலாம்; உடலையழித் தாலும் புகழை அழிக்கமுடியாது என்பது அனைவரும் அறிந் ததே. புகழுடம்பு என்றே சொல்லுவதுண்டு. ஏராளமான ரிஷிகளைக் கொல்லுவதன்மூலமும், கொல்லச் செய்வதன்மூல மும், சீதாபஹாரத்தின்மூலமும் ராவணன் தான் உயிருடன் இருக்கும்போதே தன் புகழைப் பெரும்பாலும் தானே அழித்துக் கொண்டுவிட்டான். எஞ்சியிருந்த வீர்யம், தை₄ர்யம் முதலான வற்ருலுண்டான அவனது புகழ் இன்றும் இருக்கிறது. இப்படி யிருக்க, ராமன் ராவணனுடைய புகழை அழித்தான் என் றும், அதற்காகப் பிராயச்சித்தம் செய்தான் என்றும் எழுது வது அபாண்டப் பழியாகும்.

(2) 'ஆசார்யரும், ப்₃ராஹ்மணருமான த்₃ரோணரையும், பிதாமஹரான பீ₄ஷ்மரையும் யுத்₃த₄த்தில் க்ஷத்ரியனை அர்ஜுனன் கொல்லுவதால் பாபமில்லை; மோக்ஷமுள்ளிட்ட நற்பயன்களும் கிடைக்கும்' என்று கீ₃தையில் கண்ணன் தெளி வாக அருளியுள்ளான். ஆதி₃சங்கரரும் அப்படியே பா₄ஷ்யம் செய்திருக்கிருர். கீ₃தை முதலான வேதா₃ந்த க்₃ரந்த₂ங்களை யும் ஶாங்கரபா₄ஷ்யங்களையும் மறந்து, ஸ்த₂லபுராணங்களிலும், ஆதி₃சங்கரர்பேரில் ஏறிடப்பெற்ற ஸ்தோத்ரங்களிலுமே பழகிக்கொண்டிருப்பதால் கீ₃தா ஶாங்கரபா₄ஷ்யங்களுக்கு முரணுக எழுதுகிருர் பீடாதி₄பதி என்பது தெளிவாக விளங்கு கிறது. சங்கரரின் வழிவந்தவராகத் தம்மைக் கூறிக்கொள்ளும் ஒருவருக்கு இத்தகைய வீழ்ச்சி விளைந்தது வருந்தத்தக்கது.

S. K. ராமஸ்வாமி, ஸ்ரீரங்கம்.

*67. 2—12—79 காலை 7 மணிக்குத் திருச்சி வானொலியில் 'ரகு₄வீர! ரணதீ₄ர!' என்னும் தியாகராஜகீர்த்தனைக்கு விளக்கம் சொன்ன கல்லூர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்த்ரி, கீர்த்தனைக்கு ஸம்ப₃ந்த₄மேயில்லாமல் மனம்போனபடி பேசியதை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

தியாகராஜகீர்த்தனையில் ஒரு பத₃த்தையும் சாஸ்த்ரி விளக்க வில்லை. 'உசேனி' என்னும் ராகத்தின் பெயரை எடுத்துக் கொண்டு, அதை 'உசேனானி' ஆக்கி, 'அது உத்க்ருஷ்ட சேனானியாகிற கந்தனைக் குறிக்கிறது' என்று சொல்லி, கீ₃தை யில் விபூ₄த்யத்₄யாயத்தில் 'சேனானிகளுள் கந்தன் நானே' என்று கூறியுள்ளதை ஆதா₄ரமாகக் காட்டி, கந்தனும் ராமனும் ஒன்றே என்று கீர்த்தனையோடு எத்தொடர்புமில்லாமல் பிதற்றினார் சாஸ்த்ரி. கண்ணன் அவ்வத்தியாயத்தில் முன்னும் பின்னும் தன்னைச் சந்திரனாகவும், இந்திரனாகவும், மனமாகவும், கடலாகவும், இமயமலையாகவும், அரசமரமாகவும், மற்றும் பல சேதநாசேதநப்பொருள்களாகவும் கூறியிருப்பதற்கு இந்த சாஸ்த்ரி என்ன பொருள் கூறுகிறார் என்று தெரியவேண்டும். கந்தன் இயற்கையாகப் பிறந்தவன் என்று ராமாயணத்தில் கூறியிருப்பதாகப் பெரும்பொய்யையும் பேசினார் சாஸ்த்ரி. சிவனும் பார்வதியும் புணர்ந்ததாலுண்டான வீர்யம் ஆறு கார்த்திகைப் பெண்களால் த₄ரிக்கப்பெற்று, கார்த்திகேயன் உண்டானான் என்று ராமாயணத்தில் விரிவாகச் சொல்லப் பட்டிருப்பதற்கு முரணாகப் பேசப்பட்ட ப்₃ரஹ்மாண்ட₃ப் புளுகு இது. 'மத்₄யமபத₃லோபம்' என்பதை 'மத்₄யமபத₃ லோப₄ம்' என்று பலமுறை சொன்னது இவருடைய ஸம்ஸ்க்ருத அறிவும் அரைகுறையானது என்பதைக் காட்டிற்று. கீர்த்தனைக்குச் சம்பந்தமில்லாமலே இப்படி ஒரு விளக்கத்தை ஒலிபரப்பியது திருச்சி வானொலியின் சரித்திரத் தில் ஒரு கரும்புள்ளியாகும்.

S. G சாரி, தொட்டியம்.

*68. சாவி பத்திரிகையில் நவம்பர் 25 டிசம்பர் 2 இதழ்களில் 'கந்த சஷ்டி கவசம்' என்னும் நூலில் ஆண்குறி*

முதலான அவயவங்களைக் காக்கும்படி பாடியிருப்பதாலும், 'குத்து வெட்டு' முதலான குரூரமான பதங்களிருப்பதாலும் இலங்கை வானொலி அதை ஒலி பரப்புவதைத் தடை செய்துவிட்டதாகவும், முதலில் அந்நூலை ஆதரித்து வந்த கிருபானந்தவாரியார் திடீரென்று 'பல்டி'யடித்து விட்டதாகவும் செய்திகள் காணப் படுகின்றன. வைணவத்தில் இத்தகைய நூல்கள் உண்டா?

வைணவத்தில் இத்தகைய நூல்கள் கிடையாது. சுய நலம் சிறிதும் கலக்காமல் எம்பெருமானுக்கும், அவனடியார் களுக்கும் நன்மைகளை விரும்பிப் பல்லாண்டு பாடுவதை அடிப்படையாகக் கொண்டதே வைஷ்ணவம். இவ்வுலக போகங்களைத் தமக்காகப் பெறுவதற்கும், தமக்கு ஏற்படும் இடர்களை நீக்குவதற்கும் சைவத்தில் ஏராளமாக உள்ள சஷ்டி கவசம் போன்ற நூல்கள் வைணவத்தில் கிடையாது. விஷ்ணு ஸஹஸ்ரநாமம் முதலானவற்றையும் தம் நன்மைக் காகப் பாராயணம் செய்வது சிறந்ததல்ல என்பதே ஸ்ரீவைஷ் ணவ ஆசார்யர்களின் முடிவு. வாரியாரைப் போன்ற பொது மக்களைக் கவரும் உபந்யாஸகர்கள் சந்தர்ப்பத்துக்குத் தக்க படி தம் கொள்கைகளை மாற்றிக் கொள்வதும் அனைவரும் அறிந்ததே.

S. திருவேங்கடம் சமயபுரம்.

69. நவம்பர் 79 கலைமகளில் ர. சு. நல்லபெருமாள் எழு திய 'நம்பிக்கைகள்' என்னும் தொடர்கதையில் சாக்த ஆகமங் களில் வர்ணிக்கப்படும் சக்கர பூஜையில் ஒரு சக்கரத்தை எழுதி, அதன் நடுவில் ஒரு பெண்ணை நிர்வர்ணமாக உட்காரவைத்து, அவளுக்குப் பூஜை செய்து, அவளுக்கு எதிரே மது, வேக வைத்த மாம்ஸம், மீன், தானியங்கள் எல்லாவற்றையும் வைத்து அந்தச் சக்கரத்தைச் சுற்றி ஆண்களும், பெண்களும் நிர்வா ணமாக உட்கார்ந்து கொண்டு மது அருந்தி, மீன், மாம்ஸம் தானியம் ஆகியவற்றை உண்டு, சாஸ்த்ர வரம்பை மீறி மைது னத்தில் (ஆண் பெண் சேர்க்கையில்) ஈடுபடுவார்கள் என்றும், இது இன்றும் அநுஷ்டானத்தில் இருக்கிறது என்றும் எழுதப் பட்டுள்ளது. மதாநுஷ்டானங்களில் இப்படி ஆபாஸத்தைக் கை யாளுவது முறையாகுமா?

சைவ சாக்த ஆகமங்களில் இப்படிப்பட்ட அநுஷ்டா னங்கள் இருப்பது ப்ரஸித்தம். இதை 'வாமாசாரம்' என்று கூறுகிறார்கள். ஸ்ரீபாஷ்யத்தில் பசுபத்யதிகரணத்தில்[2-2-35] *''ப்ருகாஸனஸ்தம் ஆத்மாநம் த்யாத்வா நிர்வாணம் ருச்சதி''* [பெண் குறி வடிவிலுள்ள ஆஸநத்தில் இருப்பதாகத் தன்னைத் தியானித்து மோக்ஷத்தையடைகிறான்.] என்று கூறும் சைவா கம வசனம் எடுக்கப்பட்டுள்ளது. இன்றும் மதத்துறையி லுள்ள சில பெரிய புள்ளிகள் [சைவர்களும் சைவாத்வைதி களும்] இத்தகைய பூஜைகளைச் செய்து, இவ்வுலகப்பெரு மைகளைப் பெற்றுள்ளதாக நாம் ஆப்தர்களிடமிருந்து கேள்விப் படுகிறோம். மோக்ஷத்தையே குறிக்கோளாகக்கொண்ட வைஷ் ணவத்தில் இத்தகைய அநுஷ்டானங்களை நெஞ்சாலும் நினைக்க முடியாது. போகத்தைக் குறிக்கோளாகக் கொண்ட சைவத் தில் இத்தகைய அநுஷ்டானங்கள் மலிந்துள்ளன. சிவனும் பார்வதியும் காமபோகத்தில் ஈடுபடுவதாகவும், அதனால் வீர்யம் வெளிப்படுவதாகவும் இதிஹாஸ புராணங்களில் வரு வதும், சுந்தரமூர்த்தி நாயனார் சரிதத்தில் சிவலோகத்திலேயே சிவனடியார் பார்வதியின் தோழியிடம் காமாவேசப்பட்டதாக வருவதும், சிவலோகமும் ப்ராக்ருத காமத்திற்கு அப்பாற் பட்டதல்ல என்று விளக்குகின்றன. இவற்றை நடுநிலைநின்று ஆராய்ந்தால், மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக்காக ஏற்பட் டது வைஷ்ணவம் என்றும், அர்த்தகாமங்களில் ஈடுபட்ட வர்களுக்கு அவற்றையளித்து, காலக்ரமத்தில் அவர்களை மோக்ஷபரர்களாக ஆக்குவதற்கு ஏற்பட்டது சைவம் என்றும் விளங்குகிறது. 'ஏழு ஜன்மங்கள் உண்மையான சைவர்களா யிருந்தவர்கள் அடுத்த ஜன்மத்தில் வைஷ்ணவர்களாகிறார்கள்' என்றும், 'மோக்ஷத்தை விஷ்ணுவிடமிருந்தே விரும்பவேண்டும்' என்றும் சாஸ்த்ரங்கள் கூறுவதும், மார்க்கண்டேயர், கண்டா கர்ணன் சரித்திரமும் இதை வலியுறுத்துகின்றன. ''மாஅயோயே! மாஅயோயே! மறுபிறப்பு அறுக்கும் மாசில் சேவடி மணி திகழ் உருபின் மாஅயோயே!'' என்றும், ''நாறு இணர்த்துழா யோன் நல்கின் அல்லதை ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்'' என்றும் சங்ககாலப்பாடல்களில் மறுபிறப்பை அறுத்துப் பரமபதமாகிற மோக்ஷ உலகையளிக்கவல்லவன்

திருமால் ஒருவனே என்று பாடியிருப்பதும், ஐந்தாம் பரிபாடலில் "சிவனும் பார்வதியும் புணர்ந்ததால் உண்டான வீர்யத்தால் முருகன் பிறந்தான்" என்று பாடியிருப்பதும் இவ்விஷயம் சங்ககாலத்திலேயே பிரஸித்₃த₄மானது என்று விளக்குகிறது.

S. ஸௌப்யநாராயணன், ஸ்ரீரங்கம்.

*70. 'சூரபத்மன் என்ற நீக்ரோ மன்னனைக் கொன்ற முருகவேள் என்ற பாண்டியனே முருகன் என்ற தெய்வமாக ஆக்கப்பட்டான்' என்று '79 அமுதசுரபி தீபாவளி மலரில் தொழிலதிபர் நா. மகாலிங்கம் கூறுவதற்கு ஆதாரம் உண்டா?*

புளுகு புராணக்கற்பனைகளையும் தோற்கடிக்கக்கூடிய சில ஆராய்ச்சியாளர்களின் கற்பனையைத் தவிர இதற்கு வேறு எந்த ஆத₄ாரமும் கிடையாது. கேள்வி 29ல் குறிப்பிட்டபடி சிவபெருமானையே அரசனாக்கிய தொழிலதிபர், முருகனைப் பாண்டிய மன்னனாக்கியதில் வியப்பில்லை. சில கட்டுரைகளில் சிவன் முருகன் முதலானோரை தெய்வமாகவும், மற்றும் சில கட்டுரைகளில் அவர்களை மனிதர்களாகவும் வெளியிடும் நம் நாட்டுப் பத்திரிகைகளுக்கு எந்த விஷயத்திலும் நிலையான கொள்கை கிடையாது என்று விளங்குகிறது. இந்தப் பத்திரிகைகளே 'இந்து' மதத்தை அழித்துவருகின்றன.

பத்மநாபரெட்டியார், பெருவளநல்லூர்.

*71. திரு. ர. சு. நல்லபெருமாள், B. A. B. L. எழுதிய 'பிரும்ம இரகசியம்' என்ற வானதி பதிப்பக வெளியீடு இந்து மதத்தின் பல பிரிவுகளைப் பற்றி எளிய தமிழ்நடையில் ஸம்வாத ரூபமாக விளக்குகிறது. அதை அனுப்பியிருக்கிறேன். அதை விமர்சிக்கவேண்டுகிறேன்.*

(1) லோகாயதம் (2) சமணம் (3) பௌ₃த்₃த₄ம் (4) சாங்கியம் (5) யோக₃ம் (6) நியாயம் (7) வைஶேஷிகம் (8) மீமாம்சம் (9) அத்₃வைதம் (10) விஶிஷ்டாத்₃வைதம் (11) த்₃வைதம் (12) சைவசித்தாந்தம் ஆகிய மதங்களைப்பற்றி, கடோபநிஷத்தில் காணப்படும் நசிகேதன் அந்தந்த மதத்தலைவர்களிடம் ஸம்வாத₃ம் செய்வதாகக் கற்பனைசெய்து, எளிய தமிழ்நடையில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது. பொதுவாகப் பாராட்டத்தக்க முயற்சியே இது. ஆயினும் இம்மதங்களைப்பற்றி ஆங்கில

மொழி பெயர்ப்புகளைக் கொண்டே ஆசிரியர் தெரிந்துகொண்டிருப்பதாலும், மேல்நாட்டாரின் கற்பனையான சில விஷயங்களை ஏற்றுக்கொண்டிருப்பதாலும் இந்நூலில் சில பிழைகளும் இடம் பெற்றுள்ளன. உதாரணம்:— (1) பக்கம் XV-XVIல் 'தத்துவ ஞானம் என்றால் என்ன?' என்று கேள்விகேட்டுக்கொண்டு "ஒன்றைப்பற்றித் துல்லியமாக அறிய இயலாதபோது, அது பற்றிய மனிதனின் கற்பனைதான் தத்துவம் என்பது'' என்று பதிலளித்திருப்பது சிறிதும் பொருந்தாது. 'உண்மையறிவு அல்லது உண்மைப்பொருள்களைப்பற்றிய அறிவே தத்துவ ஞானம்' என்றே பதில் இருந்திருக்கவேண்டும். (2) பக்கம் 205 206ல் "தென்கலைக்கு ஆழ்வார்களின் திவ்வியப்பிரபந்தந்தாம் முக்கியம், ஸமஸ்கிருத நூல்களைப்பற்றி அவர்களுக்கு அக்கறையில்லை'' என்று எழுதியிருப்பது பரம அபத்தம். மறுபதிப்பில் இத்தகைய பிழைகள் தக்கவர்களைக்கொண்டு திருத்தப்பெற்று வெளிவந்தால் இந்நூல் பலருக்குப் பயன்படும்.

S. திருவேங்கடம், ஸ்ரீரங்கம்.

*72. புரட்டாசி ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியாவில் ஸ்ரீமதாதிவண்சடகோப யதீந்த்ர மஹா தேசிக வைபவத்தில் "ஆதிவண்சடகோப ஜீயர் ஸ்வாமியினாலேயே 'நம்மாழ்வார்' என்னும் பெயர் முதன்முதலில் சடகோபருக்குச் சாத்தப்பட்டது'' என்று எழுதியிருப்பதற்கும். 'ஆழ்வார் திருநகரி முதலான பல திவ்யதேசங்களில் பல திருப்பணிகளை ஆதிவண்சடகோப ஜீயர் ஸ்வாமி செய்தார்' என்று எழுதியிருப்பதற்கும் ஆதாரம் உண்டா?*

இது பற்றிப் பல தி₃வ்யதே₃ஶங்களிலிருந்து பல அன்பர்கள் நமக்கு ஆக்ஷேபக் கடிதங்கள் எழுதி, மறுப்பெழுதும்படி கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். 'ப்ரியா' கட்டுரையில் உள்ள விஷயங்களுக்கு சுமார் நூறு வருஷங்களுக்கு முன் ஏற்பட்ட அஹோபி₃லமட₂ கு₃ருபரம்பரையே ஆதா₄ரம். அஹோபி₃லமட₂த்தில் 33-வது பட்டத்தை அலங்கரித்த ஜீயர் ஸ்வாமியால் இயற்றப்பட்டது இந்த கு₃ருபரம்பரை. இதற்கு மூற்பட்ட "யதீந்த்₃ரப்ரவணப்ரப₄ாவம்'' முதலான பல நூல்களுக்கு முரணான பல விஷயங்கள் இதில் உள்ளன. 'நம்மாழ்வார்' என்னும் பெயர் ஏற்பட்ட விஷயம் பற்றி ந்ருஸிம்ஹப்ரியா இணையாசிரியரான ஸ்ரீ உ. வே. திருக்கள்ளம்

ஸ்வாமிக்கு அடியேன் கீழ்க்கண்ட கடிதத்தை எழுதி, ப்ரியா வில் வெளியிடும்படி ப்ரார்த்தித்தேன். அந்த ஸ்வாமி ஸம் பாதகஸ்வாமியிடம் எனது கடிதத்தைக் கொடுத்துவிட்டதாக எழுதினார். மார்கழி இதழ் வரையில் அது ப்ரியாவில் வெளியிடப் படவில்லை. ஆகையால் அன்பர்கள் உண்மையை உணரும் பொருட்டு அதை அப்படியே இங்கு அச்சிடுகிறேன்.

ப்ரியா ஆசிரியருக்கு ஸுதர்சனம் ஆசிரியரின் கடிதம்

ஸ்ரீஉ.வே. ஸ்வாமி ஸந்நிதியில் தண்டன் சமர்ப்பித்துச் செய் யும் விண்ணப்பம். புரட்டாசி ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியாவில் ஸ்ரீமதாதி வண்சடகோப யதீந்த்ர மஹா தேசிக வைபவத்தில் ஸ்ரீ உ. வே. பத்ராதிப ஸ்வாமி ஸ்ரீபராங்குசர்க்கு 'நம்மாழ்வார்'என்று பெயர் ஏற்பட்டிருப்பதைப் பற்றி விமர்சித்திருப்பதைக் கண்டேன்.

அதில் (பக்கம் 24ல்) "ஸ்ரீஸ்வாமி தேசிகன் காலத்துக்கு முன்பு நம்மாழ்வார் என்று திருநாமம் ஏற்பட்டதற்கு உண்டான ஐதிஹ்யம் ஒன்றும் காணப்படவில்லை" என்று எழுதப்பட்டுள் ளது. நமது பூர்வாசார்யர்களுக்குக் கூடஸ்தரான நாதமுனிகள் காலத்திலிருந்தே 'நம்மாழ்வார் என்று ஸ்ரீசடகோபருக்குப்பெயர் ஏற்பட்டிருப்பதற்கு ஐதிஹ்யங்கள் ப்ராசீன க்ரந்தங்களில் உள்ளன என்பதை இங்கு விண்ணப்பித்துக்கொள்கிறேன்.

'நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை என் பர் அவரவர் தம் ஏற்றத்தால் — அன்புடையோர் — சாற்று திருநாமங்கள் தானென்று நன்னெஞ்சே ஏத்ததனைச் சொல்லி நீ இன்று" என்று ஆதிவண்சடகோப ஜீயரைவிட வயஸ்ஸில் பெரியவரான மாமுனிகள் (பாசுரம் 50) உபதேசரத்தினமாலை யில் அருளியுள்ளார். "நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை *என்பர்*" என்று அருளியிருப்பதிலிருந்து, மாமுனிகள் காலத்துக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன் பிருந்தே நம்மாழ்வார் என்னும் வழக்கு ஏற்பட்டுவிட்டது என்று விளங்குகிறது. பிள்ளான், நஞ்சீயர், பெரியவாச்சான் பிள்ளை, தெள்ளார் வடக்குத்திருவீதிப்பிள்ளை முதலான (ஸ்ரீதேசிகனுக்கு முற்பட்ட) பூர்வாசார்ய க்ரந்தங்களிலும், ஸ்ரீதேசிக க்ரந்தங்களிலும் 'நம்மாழ்வார்' என்னும் வழக்கு பலவிடங்களில் காணப்படுவதும் இதை வலியுறுத்துகிறது.

இத்தனை ப்ரயோகங்களையும் தப்புப் பாடங்கள் என்று சொல்லுவதற்கு இக்காலத்தில் உள்ள நமக்கு அதிகாரமில்லை. நிற்க.

முற்கூறிய உபதேசரத்தினமாலைப் பாசுரத்தின் வ்யாக்யானத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி பிள்ளைலோகம் ஜீயர் நம்மாழ்வார் என்று பெயர் ஏற்பட்டிருப்பதற்கு மூன்று ஐதிஹ்யங்களைக் காட்டியிருக்கிறார். அவையாவன—(1) நம்பெருமாள், திருவத்யயனோத்ஸவத்துக்கு எழுந்தருளச்சொல்லி ஆழ்வார்திருநகரியில் அர்ச்சாரூபியாயுள்ள நம்மாழ்வாருக்குத் திருமுகம் அனுப்பும்போது, மற்ற ஆழ்வார்களைக் காட்டிலும் ஸ்ரீபராங்குசருக்கு வேறுபாடு தோற்ற 'நம் ஆழ்வார்' என்று அபிமானித்து ஒவ்வொரு வருஷமும் திருமுகப்பட்டயம் எழுதியனுப்புவர். (2) துருஷ்ககலாபத்தின்போது (கேரளதேசத்தில்) பல திவ்ய தேசத்து எம்பெருமான்களும், ஆழ்வார்திருநகரி சடகோபரும் சந்திக்கநேர்ந்தபோது நம்பெருமாள் சடகோபரை "நம்முடைய ஆழ்வார்! நம்மருகே வாரும்" என்று அருளப்பாடிட்டு, தம்முடைய திவ்யஸிம்ஹாஸனத்திலே நம்மாழ்வாரைக் கூடவைத்துக்கொண்டு முத்தின்சட்டை, வட்டமணை முதலான வரிசைகளையும் பிரஸாதித்துத் தம்மையே ஒக்க அருள்செய்தார். இதனாலேயே சடகோபரந்தாதித் தனியனிலும்'*நம்*சடகோபனைப் பாடினையோ என்று நம்பெருமாள் விஞ்சிய ஆதரத்தாற்கேட்ப' என்று நம்பெருமாள் சடகோபனை 'நம் சடகோபன்' என்றே வழங்குவர் என்று குறிப்பிடப்பட்டது. *(3)* நாதமுனிகள் ஸ்ரீபராங்குசரிடமிருந்து ஸகலார்த்தங்களும் கேட்டவராகையாலே தமக்கு ஆசார்யர் என்பதுதோற்ற 'நம் ஆழ்வார்' என்று அபிமானிப்பர். இதனாலேயே அவருடைய பேரரான யாமுனாசார்யர் ஸ்தோத்ரரத்னத்தில் நம்மாழ்வாரைக் குறிக்கும்போது 'ந: குலபதே:' [*நம்முடைய* குலபதியினுடைய] என்று அருளிச்செய்தார் இம்மூன்று ஐதிஹ்யங்களையும் அருளிய பிள்ளைலோகம் ஜீயர் அஹோபிலமட குருபரம்பரையேற்பட்ட காலத்திற்கு முற்பட்டவர் என்பது குறிக்கொள்ளத்தக்கது.

இவ்வண்ணம் 'நம்மாழ்வார்' என்னும் பெயர் ஏற்பட்டதற்கு நாதமுனிகள் காலம் தொடங்கியே மூன்றுவிதமான ஐதிஹ்யங்கள் காணப்படுவதால் அஹோபிலமட குருபரம்பரையில் காணப்படுவதை நாலாவது ஐதிஹ்யமாகக் கொள்ளலாம்.

இதை ஸ்ரீ உ.வே. பத்ராதிபஸ்வாமியிடம் காண்பித்து ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியாவிலும் வெளியிடச் செய்யப்ப்ரார்த்திக்கிறேன்.

S. வேங்கடம், சமயபுரம்.

*73. ஸுதர்சனர் பதில் இரண்டாவது சதகம் 90-வது பதிலிலும், மூன்ருவது சதகம் 18-வது பதிலிலும் ஆழ்வார்களிடம் அபசாரப்படாமலிருக்கும்படி அறிவுறுத்தப்பெற்ற 'பிரேமாநந்தகுமார்' என்னும் அம்மையார் '80 ஜனவரி கலைமகளில் 'அகல்வானுமல்லன் இனி' என்னும் தலைப்புள்ள கற்பனைக் கதையில் நம்மாழ்வாரிடமே அபசாரப்பட்டிருப்பதைக்கண்டு துணுக்குற்றேன். நல்லோர்கள் உண்மையை உணர்வதற்காக அதை விமர்சிக்கவேண்டுகிறேன். இவ்வம்மையார் யார்?*

ஹிரண்ய ராவணாதி₃களுக்கு எத்தனை உபதே₃ஶம் செய்த போதிலும் பயனற்றதானதுபோலே, அம்மையாருக்கும், கலைமகளுக்கும் ஆகிவிட்டது. காமகோடி பீடாதி₄பதியால் வைஷ்ணவத்தை இழிவுபடுத்துவதற்குத் திருக்குடந்தையில் அக்₃நிஹோத்ரம் தாத்தாச்சார்யர் நியமிக்கப்பட்டிருப்பதுபோலே, ஸ்ரீரங்க₃த்திலும் முதல் திருமாளிகை தாத்தாச்சார்யர் குடும்ப₃த்தைச் சேர்ந்த இவ்வம்மையார் நியமிக்கப்பட்டிருக்கிருர் என்று விளங்குகிறது. இதனலெல்லாம் வைணவத்தை அழிக்கவோ, இழிவுபடுத்தவோ முடியாது என்பதையும், இவர்கள் தங்களைத் தாங்களே தாழ்த்திக்கொள்ளுகிருர்கள் என்பதையும் அம்மையாரும், கலைமகளும் உணரவில்லையந்தோ! நிற்க. இக்கற்பனைக் கதையில் எழுதப்பட்டிருக்கும் விஷமத்தனமான பொய்கள் பின்வருமாறு—(1) நம்மாழ்வார் பிறந்ததிலிருந்தே கால் ஓய்ச்சல் வியாதியினுல் அவதிப்பட்டமையால், புளியம் பொந்திலேயே உட்கார்ந்துவிட்டார் என்பது. (2) நம்மாழ்வார் உலகநடைக்கு மாருகத் தாய்ப்பாலும், வேறு எந்த உணவும் அருந்தாமல் இருந்தார் என்றும், ப₄க₃வத₃நுப₄வத்தாலேயே வளர்ந்து வந்தார் என்றும் ஆயிரம் வருஷங்களாகப் பல பூர்வாசார்யர்கள் அருளியிருக்க, ஆழ்வார் பிரஸாதம் உண்டு வளர்ந்தார் என்று எழுதியிருப்பது. (3) "இப்படி உலகநடைக்கு மாருயிருந்தமையால் 'மாறன்' என்று பெயரிடப்பெற்ருர்" என்று வரலாற்று நூல்கள் கூறுகையில், "சாக்கியர்களுடைய ஆசான் பிறந்த வைகாசிப் பௌர்ணமியில் பிறந்தமையால், 'அவர்களுடைய வழிபாட்டில் ஈடுபட்டுவிடுவாரோ' என்று

பு௰யர்து அந்த ஆசானின் வழியை மாறியிருக்கவேண்டும் என்று 'மாறன்' என்று பெயர் வைத்தேன்'' என்று ஆழ்வாரின் தீர்யாகிய உடையநங்கையாரே கூறியிருப்பதாகக் கதைத் திருப்பது. (4) அப்படி உடையநங்கையார் பெயர் வைத்தது தவறு என்றும், சாக்கியர்களும் நாராயணனால் படைக்கப் பட்டவர்களாகையால் நம்மவர்களே என்றும் நம்மாழ்வாரே கூறுவதாகப் பிதற்றியிருப்பது. [' ஒன்றுந்தேவும் ' திருவாய்மொழியில் "சமணரும். சாக்கியரும் வலிந்து வாது செய்பவர்கள்'' என்று நம்மாழ்வாரே அருளியிருப்பதை கலைமகளைப் படிக்கும் பாமரஜனங்கள் அறியமாட்டார்கள் என்னும் தைரியத்தில் அம்மையார் இப்படி எழுதுகிறார் என்பது தெளிவு.] (5) இவ்வபசாரங்களுக்கெல்லாம் சிகரமாக ' ஆழ்வார்திருநகரியிலுள்ள பொலிந்துநின்ற பிரானுடைய விக்கிரகம் சமணர்களின் தீர்த்தங்கரரான ஆதிநாதர் என்பவரின் படிமமே (விக்கிரகமே)'' என்னும் அபாண்டமான அண்டப்புளுகைக் கூசாமல் எழுதியிருப்பது.

*" அத்யுத்கடை: புண்யபாபை: இஹைவ ப₂லம் அஶ்நுதே ।
த்ரிபி₄ர்வர்ஷை: த்ரிபி₄ர்மாஸை: த்ரிபி₄: பக்ஷை: த்ரிபி₄ர்தி₃நை:॥''*
[மிகவும் அதி₄கமான புண்யத்தையோ பாபத்தையோ செய்வதினுல் மூன்று வருஷங்களிலோ, மூன்று மாதங்களிலோ, மூன்று பக்ஷங்களிலோ, மூன்று நாட்களிலோ இந்த ஜன்மத்திலேயே ப₂லனை அடைந்துவிடுவான்.] என்னும் ஶாஸ்த்ர வசநத்தை எடுத்துக்காட்டி, ஸ்ரீரங்க₃ம் முதல்திருமாளிகை தாத்தாச்சாரியர் குடும்ப₃த்திற்கு வேண்டியவர்கள் இனியாவது இத்தகைய ப₄க₃வத்₃ பா₄க₃வத அஸஹ்யாபசாரங்களில் ஈடுபடாமலிருக்கும்படி அம்மையாருக்கு அறிவுறுத்துவார்கள் என்று நம்புகிறோம்.

K. நாராயணன், *திருச்சி-17.*

***74.*** *ஜனவரி '80 கலைமகளில் கேள்விக்கதம்பத்தில் 24-வது கேள்வியில் ''கறைக்கண்டனுக்கு மூத்தவள்' என்று அபிராமி அந்தாதியில் பார்வதியைப்பற்றி வருவதால், சிவபெருமானுக்கு தமையாள் மனைவி என்பது பொருந்துமா?'' என்னும் கேள்விக்கு* ***விடையவன்*** (கி. வா. ஜ.) பதிலில் ''சக்திதத்துவத்தினின்றும்

*சதாசிவதத்துவம் தோன்றும். ஆதலின் அந்த நிலையில் அம்பிகை சிவபெருமானுக்கு மூத்தவளாகிருள்' என்று எழுதியிருப்பது பொருந்துமா?*

இது "மூத்தவளான சக்தி இளையவனுன சிவனுக்கு மனைவி என்று கூறுவது பொருந்துமா?" என்னும் கேள்விக்குத் தக்க பதிலாகாது. 'சக்தியிடமிருந்து சதாசிவன் தோன்றினுன்' என்பது சாக்தமதம். இந்த மதத்தில் பல முரண்பாடுகள் உள்ளன. மூத்தவளை இளையவனுக்கு மனைவியாக்குவதும் அவற்றில் ஒன்று. 'சக்தியிடமிருந்து சதாசிவன் தோன்றினுன்' என்பதைச் சைவசித்தாந்திகள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். இதை அறிந்திருந்தே விடையவன் குழம்பும்படி பதில் எழுதியிருக்கிருர்.

ஸ்ரீவைஷ்ணவரத்நம் ஸ்ரீதேவி அம்மாள், திருவல்லிக்கேணி.

*75. 30—12—79, 6—1—80 கல்கி கடைப்பக்கங்களில் 'பாவை நோன்பு'பற்றிப் பீடாதிபதி எழுதியிருப்பதை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

"ஸ்ரீப₄ாக₃வதத்தில் கோ₃பிகள் காத்யாயனீவ்ரதம் அநுஷ்டி₂த்துக் கண்ணனைப் பெற்றதாக இருப்பதால், சைவர்களும் வைஷ்ணவர்களும் உமையன்னையின் அருளைக்கொண்டே முறையே சிவன், திருமாலுடைய அருளைப்பெற்றுர்கள். 'அரியல்லால் தேவியில்லை' என்று அப்பர் சொல்லியிருப்பதால் ஹரிஹரப₄க்தர்கள் அம்பாள் வழிபாட்டின் மூலமே ஹரிஹரர்களின் அருளைப்பெற்றுர்கள்போலும்" என்று எழுதுகிருர் பீடாதி₄பதி. தாம் ப்ரமாணமாக எடுக்கும் ஸ்ரீப₄ாக₃வதத்தில் "காளிக்கு இவ்வுலகப் ப₂லன்களைக் கொடுக்கும் ஶக்தி, திருமாலாலேயே அருளப்பட்டது" என்று கிருஷ்ணுவதார க₂ட்டத்தில் சொல்லியிருப்பதையும், மற்றும் பலவிடங்களில் சிவன், காளி முதலான தெய்வங்களுக்கு மோக்ஷத்தையளிக்க வல்லமை கிடையாது என்றும், திருமால் ஒருவனுக்கே மோக்ஷமளிக்க வல்லமை உண்டு என்றும் முழங்கியிருப்பதையும் இப்பீடாதி₄பதி அறியாதவரல்லர். 22 வருடங்களுக்கு முன் இவரைக் குறித்து எழுதப்பட்டு உலகெங்கும் பரவியிருக்கும் 'ஸாத்விக விஜய'த்தில் நாம் இவற்றையெல்லாம் எடுத்துக்காட்டியிருக்கி

ரேம். அவற்றுக்கு இன்று வரையில் எந்த பதிலும் சொல்ல இயலாமல் மனம்போனபடி எழுதுவதிலிருந்து இவருக்கு மனஸ் ஸாக்ஷியே கிடையாது என்று விளங்குகிறது. "நாராயணனே நமக்கே பறைதருவான்" என்று முழங்கியிருக்கும் மிறந்தும் புறந்தொழாத ஆண்டாள், ஆழ்வார்கள், ஆசார்யர்கள் வழிவந்த வைஷ்ணவர்களை உமையின் அருளால் திருமாலின் அருளைப் பெற்றவர்களாகக் கூசாமல் எழுதுவதும், அதற்கு அப்பர் பாட்டை ஆதாரம் காட்டுவதும், திருவாதிரை நாளையும் மதி நிறைந்த நன்னாளையும், திருவாதிரைக் களியையும் பொங்கலை யும் ஒன்றாக்கிக் குழப்புவதும் பீடாதி₄பதிக்கும் நேர்மைக்கும் எத்தொடர்புமில்லை என்று காட்டுகிறது. முன்பொரு சமயம் காஞ்சீ மஹாவித்₃வான் P B. A. ஸ்வாமி 'உங்கள் மட₂த்தில் திருப்பாவையையோ, திருவெம்பாவையையோ ஓதுவதுண்டா?' என்று கேட்டபோது, 'எங்கள் மட₂த்தில் பாவைகளுக்கு எந்த இடமும் கிடையாது' என்று பீடாதி₄பதி பதிலுரைத்ததாக மஹாவித்₃வான் ஸ்வாமி பலகால் பிரகடனப்படுத்தியுள்ளார். இத்தகைய இப்பீடாதி₄பதி இப்படிக் குழப்பி எழுதி, சைவ வைணவர்களிடையே குரங்கு மத்₄யஸ்தம் செய்வது சைவத்தை யும், வைஷ்ணவத்தையும் கெடுக்கவேண்டும் என்னும் கெட்ட எண்ணத்தாலேயே என்பதை உண்மையான சைவ வைஷ்ண வர்கள் அறிந்தேயிருக்கிறார்கள். பாவமாநாடுகளும் ஒடுங்கி விட்டன. ஆகையால் பீடாதி₄பதியின் பிதற்றல்களை நாம் பொருட்படுத்தவேண்டாம்.

P. K. பார்த்தசாரதி, வேலூர்.

*76. வேதாத்யயனத்தைக் காட்டிலும் திருநாமஸங்கீர்த்த னம் சிறந்தது என்று ஶாஸ்த்ரங்கள் சொல்லியிருக்க, 'இருக்கார் மொழியால்' [திருவிருத்தம் 64] என்னும் பாசுரத்தில் இருக் கார் மொழியான வேதவாக்யங்களுக்குக் கனியோடு ஸாம்யத் தையும், அக்கனியை அநுபவிக்க பாக்யமில்லாமையால் கருக் காய் கடிப்பவர்போல், தாம் திருநாமச்சொல் கற்றதாகவும் ஆழ்வார் பேசுவதன் காரணத்தை விளக்கியருளவும்.*

இங்கு ஆழ்வார் இருக்கார் மொழிக்குக் கனியோடு ஸாம் யத்தையும், திருநாமச்சொல்லுக்குக் கருக்காயோடு ஸாம்யத் தையும் கூறவில்லை. இருக்கார்மொழியால் நெறியிழுக்காமை

உலகளந்த திருத்தாளிணையை வணங்குபவர்களுக்குக் கனியுண்பவர்களோடு ஸாம்யத்தையும், அப்படி நெறியொழுக்கில்லாமல் வணங்கும் அவர்களைப்போன்ற பக்குவமில்லாமல்—அர்த்தாநுஸந்தானமுமில்லாமல் — திருநாமத்தைச் சொல்லும் தமக்கு, கனியில்லாமையால் கருக்காய் கடிப்பவர்களோடு ஸாம்யத்தையுமே கூறுகின்றார். வேதத்தில் சிறந்த பகுதிகளை அர்த்தாநுஸந்தானத்துடன் சொல்லும் சிறந்த வைதிகர்கள் கனியுண்பவர்களைப் போன்றவர்கள். தமக்கு அதிகாரமுள்ள திருநாமங்களையும் அர்த்தாநுஸந்தானம் இல்லாமல் சொல்லும் தாம் கருக்காய் கடிப்பவர் போன்றவர் என்று ஆழ்வார் திருவுள்ளம். ஆழ்வாருடைய நைச்யாநுஸந்தானம் இருக்கும்படி. இப்படியல்லாமல் பாசுரத்தின் பிற்பாதியில், எம்பெருமானைத் தழுவி முழுசிப் பரிமாற ஆசைப்பட்ட ஆழ்வார் விஶ்லேஷ தசையில் அது கிடையாமையாலே திருநாமச் சொற்களைச் சொல்லுவதோடு திருப்தியடையவேண்டியிருந்த நிலைக்குக் கனியின்மையில் கருக்காய் கடிப்பவர்களை த்ருஷ்டாந்தமாகக் கூறுவதாகவும் கொள்ளலாம். இப்படியுமல்லாமல், ஆழ்வாருக்கு வளவேழுலகு [திருவாய் 1-5] தலையெடுத்து, "கருக்காயாயிருக்கும்போதே அதைக் கடித்து மேலே கனியாகாதபடி செய்யுமவர்களைப் போலே, அதிநீசனான நான் திருநாமத்தைச் சொல்லி பகவத் விஷயமாகிற அமுதத்தில் நஞ்சைக்கலந்து, அதைப் பிறருக்கும் உதவாதபடி செய்துவிட்டேனே" என்று வருந்துவதாகவும் பொருள்கொள்ளலாம். இம்மூன்று பொருள்களும் பெரியவாச்சான்பிள்ளை அருளிய வியாக்கியானத்தில் விவரிக்கப்பட்டுள்ளன.

V. ஸ்ரீநிவாஸன், திருச்சி-17.

*77. 15-1-80 தினமணி பொங்கல் சிறப்பிதழில் 'உபநிடத வழி தத்துவ பரிணாமம்' என்னும் கட்டுரையில் ச. கு. கணபதி ஐயர் 'வேதவ்யாஸர் ஆறும் தரிசனமாகிய உத்தரமீமாம்சை என்பதனைச் சூத்திரவடிவிலேயே அருளிச்செய்தார். வேதாந்த சாத்திரம் என்பது இதுதான். இதுவே இந்துக்களின் வேதாந்தத்துக்குச் சிறந்த வழிகாட்டுவது. மேலும் அவர் வேதாந்த நூலிலிருந்து சீவனுக்கும் பிரம்மத்துக்குமுள்ள தொடர்பை நன்கு விளக்கப் பல சூத்திரங்களை ஒன்றுசேர்த்துப் பிரம்ம*

*ஸூத்திரம் என்னும் நூலையும் அருளிச்செய்தார்" என்று எழுதி யிருக்கிறார். இது சரியா?*

இது பரம அப₃த்₃த₄ம். வியாஸர் அருளிய உத்தரமீமாம்ஸா ஸூத்ரம்தான் 'ப்₃ரஹ்மஸூத்ரம்' எனப்படுகிறது. கோழிப் பண்ணை முதலானவற்றைப்பற்றி எழுதுவதில் வல்லவரைக் கொண்டு மதவிஷயங்களை எழுதச்செய்தால் இப்படித்தா னிருக்கும். நம்மால் 'சங்கரரும் வைணவமும்' என்னும் நூலில் தகர்க்கப்பெற்ற ஷண்மதக் கொள்கையையும் இக்கட்டுரையில் புகுத்தியிருக்கிறார். இந்திரன் வழிபாடு நீண்டநாளாக நம் நாட்டில் இருக்கும்போது, ஷண்மதங்களில் இந்திரமதம் இல்லாதது புதிராயிருக்கிறது. இப்படிப் பல தவறுகள் உள்ள மதத்துறைக் கட்டுரைகளை வெளியிடுவதே நம்நாட்டுப் பத்திரிகைகளுக்குத் தலைவிதியாயிற்று.

ராமதாஸ T. N. கிருஷ்ணமாசார்யர், வள்ளியூர்.

*78. திருமலை திருப்பதி தேவஸ்தானம் வெளியிடும் 'ஸப்த கிரி' பத்திரிகையில் சைவத் தலங்களைப்பற்றிப் பல கட்டுரைகள் வெளிவருகின்றன. அவற்றில் விஷ்ணுவையும் லக்ஷ்மியையும் தாழ்த்தியும், சிவனுக்குப் பரத்வம் கூறியும், சமரசம் பேசியும் ஸ்தலபுராணங்களை ஆதாரமாகக்கொண்ட பல கட்டுரைகள் வெளிவருகின்றன. ஸப்தகிரி ஆசிரியருக்கு அடியேன் 'இது தகாது' என்று எழுதியும் பயனில்லை. என்ன செய்வது?*

பொதுவாக இன்று நாட்டில் சைவர்களும், சமரசவாதிக ளுந்தான் வலுத்திருக்கின்றனர். தங்கள் ஆள்ப₃லத்தாலே எங்கும் ஊடுருவிவிடுகின்றனர். நியாயத்தைச் சொன்னாலும் அவர்களுக்கு ஏறாது. இது கலிகாலத்தின் கோலம் என்று பொறுமையோடு இருக்கவேண்டியதுதான். அப₃த்₃த₄த்தலபுரா ணக்கதைகளை அறிவிலிகளே நம்புவார்கள். அக்கதைகளைவிட்டால் சைவர்களுக்கும், அத்₃வைதிகளுக்கும் வேறு வழியில்லை. ஆகை யால் அவர்களைக்கண்டு சிரித்திருப்பதே நாம் செய்யவேண்டியது.

S. மணிவண்ணன், ஸ்ரீரங்கம் (79 to 84)

*79. உய்யக்கொண்டார், எம்பெருமானார் ஆகியோர் தாம் அழிந்தாகிலும் பிறர்க்கு வாழ்ச்சிதர விரும்பியவர்களாயிருக்க, அநந்தாழ்வான் மட்டும் மண்கொட்டும் கைங்கர்யத்தில் ப்ரம்ம*

*சாரியாக வந்த திருவேங்கடமுடையானுக்குப் பங்கு கொடுக்க மறுத்தது தகுமா?*

உய்யக்கொண்டார் எம்பெருமானார் போன்றவரே அநந்தாழ்வானும். "மண்கொட்டும் கைங்கர்யம் நிறைய இருக்க, நீ ஒரு மண்வெட்டியை எடுத்துவந்து எங்கள் கைங்கர்யத்துக்கு இடையூறு இல்லாமல் கைங்கர்யம் செய்யலாமே; எங்கள் கைங்கர்யத்துக்கு ஏன் இடையூறு செய்கிறாய்?" என்று வேங்கட ப்ரஹ்மசாரியைக் குறித்து அநந்தாழ்வான் சொன்னதாகவே குருபரம்பரை நூல்களில் காண்கிறது. இஃது அநந்தாழ்வானுக்குக் கைங்கர்யத்திலுள்ள ஊற்றத்தைக் காட்டுகிறது. அதனாலேயே திருவேங்கடமுடையானும் மிக வுகந்து, அவரிடம் பட்ட காயத்தை இன்றும் திருமேனியில் தரிக்கிறான்.

*80. ஆடியாடியில் (2-4) பிரிவாற்றாமையால் ஆழ்வார் வாடியதாகக் காண்கிறதேயொழிய எம்பெருமான் தாபம் கொண்டதாகக் காணவில்லை. அப்படியிருக்க 'சிக்கென' (2-6-2) வ்யாக்யானத்தில் 'பைந்தாமரைக் கண்ணனே' என்றவிடத்தில் "ஆடியாடியில் ஆற்றாமையால் வந்த தாபமும் தீர்ந்து திருக்கண்களும் குளிர்ந்தது" என்று கூறுவது பொருந்துமா?*

ஆழ்வார் வாடினால் எம்பெருமான் தாபம் கொள்வான் என்பது சொல்லாமலே விளங்கும். "அந்தத் தாபம் தீர்ந்ததை 'என் பைந்தாமரைக் கண்ணனே!' என்னும் சொற்றொடரால் ஆழ்வார் உணர்த்துகிறார்" என்பது நம்பிள்ளை திருவுள்ளம். காலக்ஷேபக்ரந்தங்களில் இத்தகைய ஸந்தேஹங்களை ஸ்ரீரங்கத்தில் வாழும் பகவத்விஷய வித்தமர்களான ஸ்ரீ உ. வே. ஸதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி, ஸ்ரீ உ. வே. நாஸிம்ஹாசார்ய ஸ்வாமி, ஸ்ரீ உ. வே. ராமஸ்வாமி அய்யங்கார் (B.A.L.T.) ஸ்வாமி முதலான ஸ்வாமிகளைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்.

*81. சடை தரித்திருப்பதால் சிவன் ஒருவனை நோக்கித் தவம் செய்வது விளங்குகிறது என்றால் 'தாழ்சடையும்' என்ற மூன்றாம் திருவந்தாதிப் பாசுரத்தின்படி சடையுடையவனாகத் தேறும் திருமலைமால் யாரை நோக்கித் தவம்செய்கிறான்?*

'தாழ்சடையும்' என்னும் பாசுரத்தில் திருமலை மாலுக்குத் தாழ்சடையுள்ளதாக ஆழ்வார் கூறவில்லை. திருவேங்கடமுடையானுக்குத் தாழ்சடையும் கிடையாது. "சிவனும் தன்னுள் அடக்கம்" என்று உலகிற்கு உணர்த்துவதற்காக, சக்கரம், நீண்முடி, பொன்நாண் ஆகியவற்றைத் திருமேனியின் ப்ரதா₄ன பா₄க₃த்திலும், தாழ்சடை ஒண்மழு சூழரவு ஆகியவற்றைத் திருமேனியின் அப்ரதா₄ன பா₄க₃த்திலும் கொண்டு 'சங்கரநாராயணாவதாரம்' என்று எம்பெருமான் ஓர் அவதாரம் எடுத்ததை இப்பாசுரத்தில் ஆழ்வார் கூறுவதாகப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்திலுள்ளது. ஆக, 'சங்கரநாராயணாவதாரம் எடுத்தவனே திருவேங்கடமுடையான்' என்று தேறுமேயொழிய, தாழ்சடையும், ஒண்மழுவும், சூழரவும் திருவேங்கடமுடையானுக்கு இருப்பதாகத் தேறாது. தாழ்சடையை அப்ரதா₄ன பா₄க₃த்தில் சொல்லியிருப்பதால் தன் திருமேனியின் அப்ரதா₄னமான பின்புறத்தில் சிவனின் அடையாளங்களையும், ப்ரதா₄ன பா₄க₃மான முன்புறத்தில் நாராயணனை தன் அடையாளங்களையும் கொண்டதாக எம்பெருமான் இவ்வவதாரத் திருமேனியை அமைத்திருக்கக் கூடும் என்று தோன்றுகிறது. சக்கரத்தைத் திருமாலின் அடையாளமாகக் கூறியிருப்பதால், ப்ரதா₄ன பா₄க₃மான வலது புறத்தில் திருமாலான தன்னுடைய அடையாளங்களையும், அப்ரதா₄னபா₄க₃மான இடது புறத்தில் சிவனுடைய அடையாளங்களையும் கொண்டதாகவும் எம்பெருமான் இந்தத் திருமேனியை அமைத்திருக்கலாம். புராணங்களை ஆராயவேண்டும். நமது மூன்றாம் திருவந்தாதி வ்யாக்₂யானத்தில் இது பற்றிய விரிவு காணலாம். திருமாலின் பல பெருமைகளைச் சைவர்கள் பிற்காலத்தில் சிவனுடையதாக்கிக் கொண்டதுபோல், சங்கரநாராயண ரூபத்தையும் சிவனுடையது என்கிறார்கள். சங்கரநயினார் கோவிலிலும், மற்றும் பலவிடங்களிலும், இப்படிச் சிவனுக்கு உருவத்தை அமைத்தும் வைத்திருக்கிறார்கள். கர்நாடகத்தில் 'ஹரிஹர்' என்னும் க்ஷேத்ரத்தில் நாராயணனுடைய அடையாளங்கள் முன்புறமும், சிவனுடைய அடையாளங்கள் பின்புறமும் உள்ளதாக விக்₃ரஹம் அமைந்திருக்கிறதென்று கேள்விப்பட்டிருக்கிறேன்.

82. சீதை அநுமானிடம் தான் ஒருமாதம் ஜீவித்திருப்ப தாகக் கூறியதால், சீதையின் அழகு ராமனது அழகைவிடச் சிறந்தது என்று தெரிவதாக நம்பிள்ளை வ்யாக்யானம் செய்கிருர். இதனுல் 'கல்லாகுலும் கணவன்' என்றிருக்கவேண்டிய பெண்மைக் குணம் சீதையிடம் இல்லை என்று தேருதா?

'சிரம் ஜீவதி' என்று தொடங்கும் ஸ்ரீராமவாக்யத்தை [ரா-ஸு 66-10] ஆதாரமாகக்கொண்டு "ராமனுடைய அழகு ஸீதையை ஒரு மாதம் தரித்திருக்கப் பண்ணக் கூடியதா யிருந்தது. ஸீதையின் அழகு, ராமனை ஒரு க்ஷணமும் தரித் திருக்கமுடியாதபடி செய்தது" என்று நம்பிள்ளைதாம் அருளினர். ஸீதையின் வாக்கில் இப்படியொரு வார்த்தை வந்திருந்தால்தான் நீங்கள் சொல்லும் குற்றம் அவள் பேரில் ஏறும். நேர்மாருக "*யத்யப்யேஷ*" [ரா-அ 118-3] என்று தொடங்கி, பிராட்டி அநஸூயையிடம் சொன்ன வாக்யத்தில் "ராமபிரான் நற்குணங்களும், நல்லொழுக்கமும் இல்லாதவனு யிருந்தாலும் நான் அவனிடமே ஈடுபடுவேன்" என்று கூறிய தாகவே ஸ்ரீராமாயணத்தில் காண்கிறது. ஆகையால் ஸீதையின் ஒழுக்கத்தில் அணுவளவும் குறையில்லை.

83. "*ஹரிஹரப்ரஹ்மாதிபிஸ்ஸேவிதாம்*" (*லக்ஷ்மீ அஷ்டோத்தரம்*) என்னும் வாக்யம் திருமாலும் திருமகளை வணங்குவதாகக் காட்டுகிறதே?

இங்கு 'ஹரி' என்பது இந்த்ரனைக் குறிக்கிறது. "இந்திரன், அவனுக்கு மேற்பட்ட சிவன், அவனுக்கு மேற்பட்ட பிரமன், அவனுக்கு மேற்பட்ட நித்யமுக்தர்கள் ஆகிய அனைவராலும் ஸேவிக்கப்படுமவள் பிராட்டி" என்பதே இவ்வாக்யத்துக்குப் பொருத்தமான பொருள். சிலவிடங்களில் பெருமாள் பிராட்டியை வணங்கியதாகக் காண்பதும் உண்டு. அவ்விடங்களில் ப்ரண யித்வத்தால் (அன்பினுல்) நாயகன் நாயகியை வணங்கும் முறை யில் சேரும்.

84. "*ஸத்வம் ரஜஸ்தம இதி குணா ஜீவஸ்ய நைவ மே*" [முக் குணங்களும் ஜீவர்களுக்கேயொழிய எனக்கில்லை] என்று பகவானே கூறியிருக்க, அவனுக்கு ஸத்வகுணமுள்ளதாகக் கூறுவது பொருந்துமா?

ஸ்ரீப₄ாக₃வதம் 11-வது ஸ்கந்த₄ம் 25-வது அத்தியாயத்தில் இந்த ஶ்லோகம் உள்ளது. விஷ்ணுசித்தவிஜயத்தின் ஒரு பகுதியாய், காமகோடி பீடாதி₄பதியைக் குறித்து 22-வருடங்களுக்கு முன் நம்மால் எழுதப்பட்ட ஸாத்விகவிஜயத்தில் இந்த ஶ்லோகமும், முக்குணங்களைப்பற்றிய நூற்றுக்கணக்கான மற்ற பல பிரமாணங்களும் எடுக்கப்பட்டு, ஸாத்விகவிஜயத்தின் தொடக்கத்திலேயே இக்கேள்விக்கு விரிவாக ஸமாத₄ானம் உரைக்கப்பட்டுள்ளது. சுருக்கமாக இங்கு பதில் கூறுகிறோம். ஜீவனுக்கோ பரமாத்மாவுக்கோ தத்தம் ஸ்வரூபத்தில் ஸத்வரஜஸ் தமோகு₃ணங்கள் இல்லை. இம்மூன்று கு₃ணங்களும் ப்ரக்ருதி கு₃ணங்களேயொழிய ஆத்மகு₃ணங்களல்ல. ஆயினும் ப₃த்₃த₄ ஜீவனுடைய ப்ராக்ருத ஶரீரத்தில் முக்குணங்களுமிருக்கையால் அக்குணங்களுக்கு அவன் வசப்பட்டு நிற்கிறான். அதனாலேயே ஜீவன் முக்குணங்களையுடையவன் என்று வழங்கப்படுகிறான். அதே ரீதியில், முக்குணமுமற்ற எம்பெருமானுடைய திருமேனி . ஶுத்₃த₄ஸத்வமயமானதாகையாலே எம்பெருமான் ஸத்வகு₃ணமுடையவன் என்று வழங்கப்படுகிறான். பிரமனுடைய உடம்பில் ரஜோகு₃ணம் அதி₄கமாயிருக்கையாலும், சிவனுடைய உடம்பில் தமோகு₃ணம் அதி₄கமாயிருக்கையாலும் பிரமனும் சிவனும் முறையே ரஜோகு₃ணத்தையும், தமோகு₃ணத்தையும் உடையவர்களாக வழங்கப்படுகிறார்கள். மேலும், எம்பெருமான் ஜீவனுக்கு ஸத்வகு₃ணத்தை வளரச்செய்வதால் ஸத்வகு₃ணமுடையவனென்றும், பிரமன் ஜீவனுக்கு ரஜோகு₃ணத்தை வளரச்செய்வதால் ரஜோகு₃ணமுடையவனென்றும், சிவன் ஜீவனுக்குத் தமோகு₃ணத்தை வளரச்செய்வதால் தமோகு₃ணமுடையவனென்றும் வழங்கப்படுகின்றனர் என்றும் கொள்ளலாம். நேரில்வந்தால், அல்லது உமது முழுவிலாஸத்தையும் தெரிவித்தால் உமது மற்ற சில கேள்விகளுக்கு பதில் கூறலாம். சில கேள்விகள் தவறுயுள்ளதையும் விளக்கலாம்.

V. ஸ்ரீநிவாஸன், *திருச்சி-17.*

*85. சிருங்கேரி பீடாதிபதி 1-4—2—80 தினமணி பக்கம் 3ல் "சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் எந்தவிதபேதமும் கிடையாது என்று சாஸ்த்ரங்கள் தெளிவாகக் கூறியுள்ளன" என்று பேசி*

*யிருக்கிறார். அவரே அன்று காலை வானொலியில் விஷ்ணுவுக்கும் பிரமனுக்கும் தங்களுக்குள் யார் பெரியவர் என்று சண்டை ஏற்பட்டதாகவும், அப்போது அவர்களுக்கு முன் ஒரு சிவலிங்கம் தோன்றியதாகவும், விஷ்ணு அந்த லிங்கத்தின் அடியையும், பிரமன் அந்த லிங்கத்தின் முடியையும் தேடிக் காணமுடியாமல் போனதாயும், இப்படி சிவனுடைய பரத்வம் நிலைநாட்டப்பட்ட அன்றைய தினமே 'சிவராத்திரி' என்றும் புராணக்கதை கூறுவதாகப் பேசியிருக்கிறார். பீடாதிபதிகள் இப்படி முரணாகப் பேசலாமா? கார்த்திகை தீப விஷயத்திலும் இந்த அடிமுடி தேடின கதையைப் புராணங்கள் கூறுவதாகச் சைவர்கள் சொல்லுகிறார்களே. இதில் எது உண்மை?*

முன்னுக்குப்பின் முரணாகப் பேசுவதே அத்$_3$வைதிகளின் இயல்பு. அதை ஒரே நாளில் ஒரே விஷயத்தைப்பற்றிப் பேசும்போது காட்டிக்கொண்டதுதான் வியப்பை அளிக்கிறது. இனி சிருங்கேரி பீடாதி$_4$பதியை மடிபிடித்துக் கேட்டால் "பாரமார்த்தி$_2$க த$_3$ஶையில் சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் பே$_4$த$_3$மில்லை. வ்யாவஹாரிக த$_3$ஶையில் (பொய்த்தோற்றமான நிலையில்) விஷ்ணுவைக்காட்டிலும் சிவன் பெரியவன் என்று அடிமுடிதேடினகதை கூறுகிறது" என்று பதில் கூறக்கூடும். உபநிஷத்$_3$ ப்$_3$ரஹ்மஸூத்ர கீ$_3$தா ஸஹஸ்ரநாம பா$_4$ஷ்யங்களில் ஆதி$_3$சங்கரர் பல ப்ரமாணங்களைக் காட்டி, வ்யாவஹாரிக த$_3$ஶையில் சிவன் முதலான எல்லா தே$_3$வர்களைக் காட்டிலும் உயர்ந்ததான ஸகு$_3$ணப்$_3$ரஹ்மம் நாராயணனே என்று நிலை நாட்டியிருக்கிறார். சிவனுக்கு அந்தப் பெருமையை ஓரிடத்தில் கூடச் சொல்லவில்லை. பிற்காலத்தில் எழுந்தவையாய், தாமஸ புராணங்களிலும் நாயன்மார்கள் போன்ற சிவப$_4$க்தர்களின் நூல்களிலுமே உள்ளவையான அடிமுடிதேடின கதை முதலான சிவபரத்வம் கூறும் கதைகளில் ஒன்றைக்கூட ஆதி$_3$சங்கரர் தம் பா$_4$ஷ்யங்களில் எடுக்கவில்லை. இப்படியிருக்க, ஆதிசங்கரர் வழிவந்தவர்களாகக் கூறிக்கொள்ளும் பீடாதி$_4$பதிகள் சிவனுக்குப் பரத்வமும், விஷ்ணுவுக்குத் தாழ்வும் கூறும் கதைகளை ஆத$_3$ரிப்பது நியாயமா என்பதை நடுநிலையாளர்கள் சிந்திக்கவேணும். ஊருக்கு ஊர் ராமன் தன் பாபம் போவதற்காக லிங்க$_4$ப்ரதிஷ்டை$_2$ பண்ணினான் என்று பொய்

யான ஸ்தலபுராணக் கதைகள் எழுந்ததுபோலே, அடி முடி தேடின கதையும் சிவராத்திரி, கார்த்திகைதீபம் இரண்டைப் பற்றியும் ஏற்பட்டிருக்கிறது என்று விளங்குகிறது. பொய்க் கதை கட்டுவதிலும் சைவர்களுக்குக் கற்பனை வளம் இல்லை என்பதையே இது காட்டுகிறது.

K. V. மோஹன்ராமன், வேலூர் (86 to 88)

*86. 'பிரஹ்மம் ஒன்ரு இரண்டா என்ருல் ஸகுணம் நிர்குணம் என்ற இரண்டு விதத்தில் எது சரி என்ருல், நிர் குணத்திலிருந்து ஸகுணம் சித்திக்கும். ஆனுல் ஸகுணத்தி லிருந்து நிர்குணம் சித்திக்க வாய்ப்பு இல்லை. இது எப்படி என்ருல், சுத்தமான தண்ணீரில் எலுமிச்சைபோன்ற பழங்களின் ரசத்தைக் கலக்கலாம். ஆனுல் ரசத்தைச் சேர்த்தபின் சுத்த மான தண்ணீரைப் பிரித்து எடுப்பது அரிது'' என்று சிருங்கேரி ஜகத்குரு மடாதிபதி "மங்கை" பிப்ரவரி இதழில் கூறுகிருர். இதனை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

இங்கு த்₃ருஷ்டாந்தத்திற்கும், தா₃ர்ஷ்டாந்திகத்திற்கும் ஒரு பொருத்தமும் இல்லை. உலகில் கு₃ணமில்லாத எந்த வஸ்து வையும் காணமுடியாது. த்₃ருஷ்டாந்தமான ஶுத்₃த₄மான தண்ணீருக்கும் சுவை முதலான பல கு₃ணங்கள் உண்டு. கு₃ண மற்ற பொருள் எந்த ப்ரமாணத்தாலும் ஸித்₃தி₄க்காது என்று ஸ்ரீபா₄ஷ்யம் முதலானவற்றில் நமது பூர்வாசார்யர்கள் நிலை நிறுத்தியிருக்கிருர்கள். நிர்க்கு₃ணத்திலிருந்து ஸகு₃ணம் ஸித்₃ தி₄க்கும் என்று எழுதிவிட்டு, அதற்கு த்₃ருஷ்டாந்தமாக 'ஶுத்₃த₄மான தண்ணீரில் ரஸத்தைக் கலக்கலாம்' என்று எழுது வது சிறிதும் பொருத்தமற்றது. 'மங்கை வாசகர்களைப்போன்ற பாமரர்களையே இத்தகைய வாக்கியங்களால் மயக்கலாம்.

*87. சிவன் திரிபுரம் எரித்தபோது நாணேற்ற வல்லமை [illegible]யலுனது பரமாத்மா அந்தர்யாமியாயிருந்ததாலேயே என்று வேதம் விளம்பியிருக்க (விஷ்ணுசித்தவிஜயம் இரண்டாம் பாகம் பக்கங்கள் 1042-1054) சைவர்கள் "விஷ்ணுவிற்கு கர்வம் வந்துவிடப்போகிறது என்று சிவன் சிரித்துப் புரம் எரித்தான்'' என்று கூறுகிறார்களே. இதற்கு வேதத்தில் எங்காவது ஆதாரம் இருக்கிறதா?*

சிவன் தேவர்களிடமிருந்து வரம்பெற்று, விஷ்ணுவை அந்தர்யாமியாகவும், அம்பாகவும் கொண்டிருந்ததாலேயே அம்பெய்து, திரிபுரங்களை எரிக்கவல்லவனானன் என்று யஜுர் வேதத்திலும், மஹாபாரதம் முதலான ஸாத்விகசாஸ்த்ரங்களிலும் கூறப்பட்டிருப்பதை நாம் விஷ்ணுசித்தவிஜயத்தில் எடுத்துக்காட்டியிருக்கிறோம். தாமஸபுராணங்களைக் கொண்டு சைவர்கள் கூறுவதற்கு வேதத்தில் ஆதாரம் இல்லை என்பது தோடன்றியில் வேதவிருத்தமுமாகையாலே பொய்யானது.

*88 மூன்றாவது சதகம் எட்டாவது கேள்வியில், கம்பன் வைஷ்ணவனல்லன் என்று நீதிபதி திரு மு.மு. இஸ்மாயில் பேசியிருப்பதை ஒட்டி, தாங்கள் "கம்பன் பரம வைஷ்ணவனே" என்று நிலைநாட்டியுள்ள "கம்பனின் சமயம்" முதல்பாகம் அனுப்பியதாகக் கூறியுள்ளீர்கள். இதற்கு ஏதாவது நீதிபதி திரு மு. மு. இஸ்மாயில் அவர்களிடம் இருந்து பதில் வந்ததா?*

இன்றுவரை (20—2—80) பதில் இல்லை.

S. *திருவேங்கடம், ஸ்ரீரங்கம்.*

*89. தினமணிச்சுடரில் கடந்த இரண்டு வருடங்களுக்கு மேலாக 'திருவாய்மொழி அமுதம்' என்னும் கட்டுரைகள் மா. சண்முகசுப்பிரமணியன் என்பவரால் எழுதப்பட்டு 3-2-80 சுடருடன் நிறைவுபெற்றுள்ளது. கட்டுரை எளியநடையில் இருந்த போதிலும், எங்களைப் போன்றவர்களுக்கு ஆழ்வாரின் கொள்கைகளைத் தெளிவாக விளக்காததோடன்றியில் பலவிடங்களில் குழப்பமாகவும் இருக்கிறது. இக்கட்டுரைத் தொடரை விமர்சிக்கவேண்டுகிறேன்.*

திருவாய்மொழி வெறும் இலக்கிய நூலல்ல. ஆயிரம் வருடங்களுக்கு மேலாக வைணவ மதத்தின் அடிப்படைக்கொள்கைகளை விளக்கும் நூல்களில் முக்கியமானதாகக் கொண்டாடப்பட்டு, பல பூர்வாசார்யர்களால் அற்புதமான உரைகள் எழுதப்பட்டு, வைணவர்கள் அனைவரும் உச்சிமேல் வைத்து மெச்சிவரும் நூல். இவ்வுரைகளில் ஒன்றையும் கேளாமல், வைணவரல்லாதவர் ஒருவர் தமது தமிழறிவையே கொண்டு, திருவாய்மொழியைப்பற்றிக் கட்டுரை எழுதினால் அது குழப்பக்கட்டுரையாகத்தான் இருக்கும். இக்கட்டுரைத் தொடர் தொடங்கும்போதே ஸுதர்சனத்தில் நாம் சில கேள்விகளைக்கேட்டு

அவற்றிற்கு பதிலுரைக்கும்படி கட்டுரையாசிரியரை வினவி யிருந்தோம். 109 கட்டுரைகளிலும் அவற்றிற்கு பதிலில்லை. 109-வது கட்டுரையில் ‘மிக்க இறைநிலையும்’ என்னும் திருவாய் மொழித் தனியனை எழுதி, அதில் சொல்லப்படும் ஐந்து அர்த் தங்களும் திருவாய்மொழியில் விளக்கப்பட்டுள்ளதாகக் கூறப் பட்டுள்ளது. ஆனால் அதை விளக்கும்போது ‘இறைநிலை என்றால் என்ன?’ என்று கேள்விகேட்டுக்கொண்டு, அவ்வொரு விஷ யத்திற்கு மாத்திரமே ஓரளவுக்கு பதில் சொல்லப்பட்டுள்ளது. ஜீவஸ்வருபமாகிற உயிர்நிலை, உபாயஸ்வருபமாகிற தக்கநெறி, விரோதிஸ்வருபமாகிற ஊழ்வினை, புருஷார்த்தஸ்வருபமாகிற வாழ்வு ஆகிய நாலு அர்த்தங்களைப்பற்றி எந்த விளக்கமும் இல்லை. “ஸ்ரிய:பதியான நாராயணனே இறைவன். வைகுந் தத்திற்குச் சென்று, அவனுக்கும் அவனடியார்களுக்கும் சுய நலம் கலவாத அடிமை செய்வதே பரமபுருஷார்த்தம். சிவன் முதலான மற்ற தெய்வங்கள் ஸம்ஸாரத்தில் கட்டுண்டு கிடக் கும் ஜீவர்களே. அவர்களால் மோக்ஷமளிக்க இயலாது. ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே மோக்ஷோபாயமாவான். அவனைத்தவிர மற்றவர்களோ, தானே தன்னை ரக்ஷித்துக்கொள்ள இயலாது. இந்த அறிவு இல்லாமலிருப்பதே அனாதிகாலமாக மோக்ஷ மடையத்தடையாயிருப்பது. சித் அசித் ஈச்வரன் என்னும் மூன்றும் வெவ்வேறு தத்துவங்கள். சித்தையும், அசித்தை யும் ஈச்வரனோடு ஒன்றாகச் சொல்லுவது சேதநாசேதநங்கள் ஈச்வரனால் தரித்து நியமித்து வியாபிக்கப்படும் சரீரமாயிருப்ப தாலேயே” என்னும் அர்த்தபஞ்சகக்கொள்கைகளை ஆழ்வார் திருவாய்மொழியில் நூற்றுக்கணக்கான இடங்களில் பன்னிப் பன்னி அருளியிருக்கிறார். தமது மற்ற மூன்று பிரபந்தங்களி லும் இவற்றையே வலியுறுத்தியிருக்கிறார். இந்தக் கொள்கை களைப்பற்றி 109 கட்டுரைகளிலும் தெளிவில்லாததோடன்றியில் குழப்பமே விளைக்கப்பட்டிருப்பது மிகவும் வருந்தத்தக்கது. கட்டுரை எளிய நடையில் அமைந்திருப்பது மாத்திரம் போதாது. கட்டுரையில் பொருள் தெளிவு இருக்கவேண்டும். இக்கட்டு ரைகளைப் படிக்கும் ஸாமான்ய ஜனங்களுக்கு ஆழ்வாருடைய தத்துவஹித புருஷார்த்தக் கொள்கைகள் தெளிவாக விளங்குமா என்பதை நடுநிலையாளர்கள் சிந்திக்கவேண்டும். முடியுமானால் “திருவாய்மொழியில் விளக்கப்பட்டுள்ள அர்த்தபஞ்சகக் கொள்கைகள் யாவை?” என்பதைச் சுருக்கமாக விளக்கி, திரு. மா. சண்முகசுப்பிரமணியம் அவர்கள் நமக்கு ஒரு கட்டுரை

எழுதி அனுப்பட்டும். அதை ஸுதர்சனத்திலேயே வெளியிட்டு ஆராய்ந்து நடுநிலையாளர்களின் தீர்ப்புக்கு விடுவோம். திரு. மா. ச. சு. அவர்கள் இதைச் செய்யவில்லை என்றால், "திருவாய்மொழி அமுதக் கட்டுரைத்தொடர் மனம்போனபடி எழுதப்பட்ட குழப்பக் கட்டுரை" என்றே நடுநிலையாளர்கள் தீர்ப்பளிப்பர். இக்கேள்வி பதில் 22—2—80 அன்று 'திரு. மா. சண்முகசுப்பிரமணியம் B. A. B L. தமிழ்ப்புத்தகாலயம், 58, டி.பி.கோயில்தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-600005.' என்னும் விலாசத்திற்கு அனுப்பப்பட்டது.

S. திருவேங்கடம், சமயபுரம்

*90. பிப்ரவரி 80 கலைமகளில் ர. சு நல்லபெருமாள் எழுதிய 'நம்பிக்கைகள்' என்னும் தொடர்கதையில் "தம்முடைய நாமம் அழிந்துபோகாமல் வெகுகாலம் நிலைத்திருக்கவேண்டும் என்னும் ஆசையால், திருவாய்மொழியில் சடகோபாழ்வாரும், தியாகராஜர் தம் கீர்த்தனை ஒவ்வொன்றிலும் தம்முடைய பெயரைச் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்" என்று எழுதப்பட்டுள்ளது. இஃது உண்மையா ?*

ர. சு. நல்லபெருமாள் போன்ற தற்கால எழுத்தாளர்கள் தம் நூல்களின் தலைப்பில் தம் பெயரை வெளியிட்டுக்கொள்வது இந்த ஆசையினால் இருக்கலாம். தன்னிடம் உள்ள தான் என்னும் உணர்வை, அஹங்காரமமகாரங்களற்ற பரமஞானிகளான நம்மாழ்வார் முதலானவர்களின் பேரில் ஏறிடுவது முறையன்று. வால்மீகி முதலான ரிஷிகளும், ஆழ்வார்கள், நாயன்மார்களில் பலரும், மற்றும் பல மதங்களைச் சேர்ந்த பல ஞானிகளும் தம் நூல்களில் தம் பெயர்களைப் பொறித்து வைத்திருக்கிறார்கள். 'இன்னார் செய்தார்' என்று பிற்காலத்தவர்கள் தெரிந்துகொள்ளவும், இன்னார் செய்தாரென்று அறிந்து அந்நூல்களில் சொல்லப்பட்ட விஷயங்கள் உண்மையானவை என்று பிற்காலத்தவர்கள் நம்பிக்கைகொள்ளவும் பயன்படும் என்னும் காரணத்தாலேயே இப்படிப் பெயரைச் சொல்லியிருக்கிறார்கள் என்று கொள்வதே முறையாகும். "குருகூர்ச் சடகோபன்" என்று வருமிடங்களில் 'ஆப்திக்கு (நம்பிக்கைக்கு) உடலாக (உறுப்பாக)ச் சொல்லுகிறார்' என்று பூர்வாசார்யர்கள் உரையிட்டிருப்பது காணத்தக்கது.

**க. இராசகோபாலன், சென்னை-49 (91 to 96)**

*91. இந்து மதம் என்று ஒரு மதம் உண்டா ? அது ஒரே மதமா ? அல்லது பல மதங்கள் சேர்ந்ததா ?*

இந்து மதம் என்பது ஒரு மதமல்ல. சில நூற்றாண்டு களுக்கு முன் இந்தப் பெயரே கிடையாது. சிந்துநதியோடு தொடர்புடைய ப$_{4}$ாரததே$_{3}$ஶத்துக்கு 'இந்தியா' என்று மேல் நாட்டார் பெயர்வைத்தார்கள். சைவம் வைஷ்ணவம் முதலான பல பிரிவுகளடங்கிய வைதி$_{3}$கமதத்திற்கு 'ஹிந்துமதம்' என்று பெயர் வைத்தார்கள். இப்போது ஹிந்துமதம் என்று வழங்கப் படுவது பல மதங்களின் கூட்டமேயாகும்.

*92. பிராமணர்கள் அனைவரும் வைஷ்ணவர்களாக இருந் தார்களா? அவர்கள் அனைவரும் நெற்றியில் திருமண் இட்டுக் கொண்டார்களா? அவர்கள் மத்தியில் ஸ்மார்த்த வைஷ்ணவ மாத்வப்பிரிவுகள் தோன்றியது எப்போது?*

மிகப் பழங்காலத்தில் ப்$_{3}$ராஹ்மணர்களனைவரும் விஷ்ணு வையே பரம்பொருளாகக்கொண்ட வைஷ்ணவர்களாகவே இருந்தனர் என்பது சங்க இலக்கியங்கள் முதலான பழைய தமிழ் நூல்களையும் ஸ்ம்ருதிகளையும் நடுநிலைநின்று ஆராய்ந்தால் தெளிவாக விளங்குகிறது. இவர்கள் நெற்றியில் ஊர்த்$_{4}$வ புண்ட்$_{3}$ரமே அணிந்துவந்தார்கள் என்றும் விளங்குகிறது. பாஞ்சராத்ரத்தை ஒப்புக்கொண்டவர்கள் திருமண்காப்பையும், அதை முழுவதும் ஒப்புக்கொள்ளாதவர்கள் சந்தனம் முத லானவற்றால் பலவகையான ஊர்த்$_{4}$வபுண்ட்$_{3}$ரங்களையும் அணிந்துவந்தார்கள். பிற்காலத்தில் ப்$_{3}$ராஹ்மணர்களிடையே சிறிதுசிறிதாக த்ரிமூர்த்தி ஸாம்ய ஐக்ய உத்தீர்ணவாத$_{3}$ங்களும், சிவபரத்வவாத$_{3}$மும் பரவத்தொடங்கின; நீறுபூசும் வழக்கமும் பரவத்தொடங்கிற்று. சங்க இலக்கியங்களிலேயே முக்கோற் பகவர்கள் எனப்படும் த்ரித$_{3}$ண்ட$_{3}$ஸந்யாஸிகளைப்பற்றிப் பேச்சு வருவதால் பாஞ்சராத்ர வைஷ்ணவர்கள் அக்காலத்திலேயே பரவி யிருந்தனர் என்பது விளங்குகிறது. ஏகத$_{3}$ண்டி$_{3}$களான அத்$_{3}$வைத ஸந்யாஸிகளைப்பற்றியோ, சைவ ஸந்யாஸிகளைப்பற்றியோ சங்க இலக்கியங்களில் பேச்சே இல்லை. ஆதி$_{3}$சங்கரர் காலத்தையொட்டி அத்$_{3}$வைதமதம் வளர்ந்தது. பாஞ்சராத்ரத்தையும், அதைத்தழு விய ஆழ்வார்களின் அருளிச்செயல்களையும் ஒப்புக்கொள்ளாமல், ஸ்ம்ருதிகளைமாத்திரம் ஒப்புக்கொண்டமையால் இவர்களுக்கு 'ஸ்மார்த்தர்கள்' என்றும், பாஞ்சராத்ரத்தையும் அருளிச்செயல் களையும் ஒப்புக்கொண்ட அந்தணர்களுக்கு 'வைஷ்ணவர்கள்' என் றும் பெயர் ஏற்பட்டது. ஸ்ரீராமாநுஜருக்குப்பின் கன்னடதே$_{3}$சத் தில் மத்$_{4}$வர் என்னும் வைஷ்ணவப்$_{3}$ராஹ்மணர் தோன்றி த்$_{3}$வைதமதத்தை ஸ்தா$_{2}$பித்த பின்பு மாத்$_{4}$வப்பிரிவு வளர்ந்தது

***93. ஸ்ரீராமானுஜர் காலத்தில் ஐயர், ஐயங்கார், சாரி, ராயர் என்ற உபபெயர்கள் வழக்கில் இருந்தனவா? அல்லது வடமர், பிருகச்சரணம் என்ற பிரிவுகள் தான் இருந்தனவா? ஸ்ரீராமானுஜர் வடமரென்றும், ஸ்ரீமணவாளமாமுனிகள் பிருகச் சரணம் என்றும் சொல்கிறார்களே. இந்த இரு பிரிவுகளுக்குள் உயர்வு தாழ்வு உண்டா?***

பூர்வாசார்யர்கள் காலத்தில் ஐயர், ஐயங்கார், சாரி, ராயர் முதலான உபபெயர்கள் கிடையாது. ப்₃ராஹ்மணர்களிடையே பூர்வசிகை₂ (சோழியர்), வடமர், ப்₃ருஹச்சரணம், அஷ்ட ஸஹஸ்ரம் என்னும் பிரிவுகளே இருந்தன. வடநாட்டிலி ருந்து ஒவ்வொரு காலத்தில் கூட்டம் கூட்டமாக அந்தணர் கள் தென்னாட்டிற்கு வந்ததால் இப்பிரிவுகள் ஏற்பட்டன. பூர்வசிகை₂யை (முன் குடுமியை) உடைய அந்தணர்கள் மூதன் முதலில் சோழ நாட்டிற்கு வந்ததால் 'சோழியர்கள்' என்று அழைக்கப்பட்டனர். அடுத்தபடி அபரசிகை₂யை (பின் குடுமியை) உடைய அந்தணர்கள் கூட்டம் ஒன்று வடக்கே யுள்ள தொண்டை மண்ட₃லம் முதலான இடங்களில் பரவி யதால் 'வடமர்கள்' என்று அழைக்கப்பட்டனர். அடுத்தபடி பெருங்கூட்டமாக வந்து தமிழ்நாடெங்கும் பரவிய ப்₃ராஹ் மண சமூகம் 'ப்₃ருஹச்சரணம்' என்று அழைக்கப்பட்டது. அடுத்தபடி எண்ணாயிரம் குடிகள் கொண்டதாகையாலே 'அஷ்டஸஹஸ்ரம்' என்று வழங்கப்பட்ட ப்₃ராஹ்மண சமூகம் தென்னாட்டில் குடிபுகுந்தது. முதலில் வந்த சோழியர்களுக்கு தி₂வ்யதே₃சங்களில் அதி₄கமான உரிமைகளும், அடுத்து வந்த வர்களுக்குப் படிப்படியாகக் குறைந்த உரிமைகளும் இருந்த தையிட்டும், ஒவ்வொரு காலத்தில் வந்தமையாலேற்பட்ட ஆசாரபே₄த₃ங்களையிட்டும் ஒருவர்க்கொருவர் உயர்வு தாழ்வு பாராட்டிக்கொண்டு, கொள்வினை கொடுப்பினைகளைத் தங்க ளுக்குள்ளேயே வைத்துக்கொண்டனர். ஸ்ரீவைஷ்ணவ பூர்வா சார்யர்கள் ஜாதியையிட்டு வரும் இப்பிரிவுகளுக்கு முக்கியத் துவம் அளிக்காமையால், ஸ்ரீவைஷ்ணவர்களிடையே இப்பிரிவு கள் பிற்காலத்தில் மறைந்துவிட்டன; பரஸ்பரம் கொள்வினை கொடுப்பினையில்லாத பூர்வசிகை₂, அபரசிகை₂ என்னும் இரண்டு பிரிவுகளே தற்காலம்வரை தொடர்ந்து வருகிறது.

பூர்வாசார்யர்களுக்குப் பிற்காலத்தில் தென்கலை, வடகலை முதலான புதுப்பிரிவுகள் ஏற்பட்டன. எந்தப் பிரிவாயினும், எந்த வர்ணமாயினும், எந்த ஆஶ்ரமமாயினும் வைஷ்ணவத்வம் உள்ள இடமே உயர்வுள்ள இடம்; மற்றவை தாழ்வுள்ள இடமே.

*94. வைஷ்ணவனுக்கும் ஸ்ரீவைஷ்ணவனுக்கும் உள்ள வித்தியாசம் என்ன?*

வைஷ்ணவத்வ பூர்த்தியுள்ளவர்களை ஸ்ரீவைஷ்ணவர்கள் என்றும், பூர்த்தியில்லாதவர்களை வைஷ்ணவர்கள் என்றும் வழங்கலாம். உண்மையில் எல்லா ஜீவர்களும் விஷ்ணு ஸம்பந்தம் உள்ளவர்களாகையாலே வைஷ்ணவர்களே. அந்த ஜ்ஞானமுடையவர்களே ஸ்ரீவைஷ்ணவர்கள் (ஜ்ஞானச் செல்வமுடைய வைஷ்ணவர்கள்) என்று வழங்கத்தக்கவர்கள்.

*95. விநாயகர் விஷ்ணு ஸ்வரூபமா? வைஷ்ணவர்கள் அவரை வணங்கலாமா? எல்லாத் தெய்வங்களுக்கும் அந்தர்யாமியாய் விஷ்ணு இருப்பதால், அந்த அந்தர்யாமியான விஷ்ணுவை நினைத்துக்கொண்டு மற்ற தெய்வங்களை வைஷ்ணவர்கள் வழிபடலாமா?*

உலகமெல்லாமே விஷ்ணுவின் ஶரீரமாகையாலே உலகமே விஷ்ணு ஸ்வரூபம் என்று சொல்லலாம். ஞானிகள் சொல்லியுமிருக்கிறார்கள். ஆனால் உலகத்துக்கும், விஷ்ணுவுக்கும் ஸ்வரூபைக்யம் கிடையாது. அதாவது, ஶரீரமான உலகமும் ஆத்மாவான விஷ்ணுவும் வெவ்வேறு தத்துவங்களே. ஆகையால் வைஷ்ணவர்கள் விஷ்ணுவின் ஶரீரமாயிருக்கும் ஒவ்வொன்றையும் வணங்கவேண்டும் என்னும் அவசியமில்லை. விஷ்ணுவுக்குத் தாழ்வு சொல்லும் ஆகமங்களின் அடிப்படையிலமைந்த கோவில்களிலுள்ள தெய்வங்களை விஷ்ணு அவற்றிற்கு அந்தர்யாமியாயிருக்கிறான் என்னும் நினைவோடு வணங்குவதும் தவறே. இதைவிட, நம் வீட்டிலேயே எம்பெருமான் படத்தையோ, சிலையையோ வைத்து வணங்குவது சிறந்தது. இக்கேள்விக்கு விரிவான ஶாஸ்த்ரரீதியான பதில் நம்பிள்ளையால் கூறப்பட்டிருப்பது குருபரம்பராப்ரபாவத்தில் விளக்கப்பட்டுள்ளது. ஸுதர்சனர் பதில் இரண்டாவது சதகம் 52-வது கேள்வி பதிலில்

இது விவரிக்கப்பட்டுள்ளது. விஷ்ணு கோவில்களில் பரிவார தே$_3$வதையாக யானை முகத்துடன் இருப்பவர் விஷ்வக்ஸேனரின் பரிஜனமான க$_3$ஜாநநர் என்னும் நித்யஸூரியேயாவர். பாஞ்சராத்ரம் முதலான வைஷ்ணவாக$_3$மங்களில் இவரைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. சங்க இலக்கியங்களில் சிவனுக்குப் பிள்ளையாக முருகனைக் குறித்திருக்கிறதேயொழிய, விநாயகரை எங்குமே குறிக்கவில்லை. ஆகையால் விநாயகர் பிற்காலக் கற்பனையே என்று சில தமிழ்ப் புலவர்கள் ஆராய்ச்சி நூல்கள் எழுதியிருக்கிறார்கள். இப்படியிருக்கும்போது, விநாயகரை வைஷ்ணவர்கள் தும்பிக்கையாழ்வாராக ஆக்கித் தங்கள் கோவில்களில் அமைத்துக்கொண்டுவிட்டார்கள் என்று சில சைவர்கள் கூறுவது முறையற்றது.

*96. வைஷ்ணவர்கள் மறந்தும் புறந்தொழாமை என்ற பெயரில் மற்ற தெய்வங்களைத் துவேஷிக்கலாமா? சைவ. அத்வைதிகள் விஷ்ணு உள்ளிட்ட எல்லாத் தெய்வங்களையும் வணங்கும்போது, மறந்தும் புறந்தொழாமையால் வைணவர்கள் சமூகத்தில் ஒதுக்கப்படமாட்டார்களா?*

சைவர்கள் அல்லது ஸ்மார்த்தர்கள் சர்ச்சுகளிலும், மசூதிகளிலும் சென்று தொழாமையால் அவற்றை த்$_3$வேஷிக்கிறார்கள் என்று கூறலாமா? இதுபோலவே, வைஷ்ணவர்கள் மற்ற தெ$_3$ய்வங்களைத் தொழாமலிருப்பதால் அவற்றை த்$_3$வேஷிக்கிறார்கள் என்று கூறுவதும் முறையற்றதாகும். பெரும்பாலான சைவ அத்$_3$வைதிகள்—கீ$_3$தை முதலான ஶாஸ்த்ரங்களில் காட்டப்பட்ட மறந்தும் புறந்தொழாமை, வைஷ்ணவ மதத்தின் அடிப்படைக் கொள்கை என்பதை உணராமல் வைஷ்ணவர்களும் தங்களைப் போலே மற்ற தெ$_3$ய்வங்களையும் தொழவேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள். இதற்குப் பல வைஷ்ணவர்கள் ப$_3$லியாகியும் விடுகிறார்கள். இது—சைவாத்$_3$வைதிகளில் பெரும்பாலானவர்கள் மதசகிப்புத்தன்மை இல்லாதவர்களாயிருக்கிறார்கள் என்பதையே காட்டுகிறது. கற்புடைய மகளிர் கற்பில்லாதவர்களை ஒதுக்குவது போலே, கற்பில்லாதவர்களும் கற்புடையவர்களை ஒதுக்கத்தான் செய்வார்கள். அதற்காகக் கற்புடையவர்கள் தங்கள் கற்பை விடமுடியுமா? சமயக்கற்பில்லாதவர்கள் சமயக்கற்புள்ளவர்களை ஒதுக்கினால்

அதையும் எதிர்த்துப் போராடும் துணிவு சமயக்கற்புடையவர்களுக்கு இருக்கத்தான் வேண்டும். இது வைஷ்ணவர்களுக்கு மாத்திரமல்லாமல் எந்தச் சமயத்தவர்களுக்கும் பொருந்தும்.

V. ஸ்ரீநிவாசன், திருச்சி-17. (97, 98 கேள்விகள்)

*97. ''ஒரு மனிதன் வியாதியால் அவஸ்தைப்படும்போது அதையே தபஸ்ஸாக நினைத்தானானால் உயர்ந்த பரலோகம் (மோக்ஷம்) அவனுக்குக் கிடைத்துவிடுகிறது'' என்று ப்₃ருஹதா₃ரண்யகோபநிஷத். ( 5-11-1 ) கூறியிருப்பதாக—காமகோடி பீடாதி₄பதி 2—3—80 கல்கியில் எழுதியிருப்பது உண்மையா?*

''*தமேவம் வித்₃வாந் அம்ருத இஹ ப₄வதி. நாந்ய: பந்தா₂ அயநாய வித்₃யதே*'' [புருஷஸூக்தம்] [பரமபுருஷனை இவ்வண்ணமாக அறிபவனே இந்த ஜன்மத்தில் மோக்ஷமடைகிறான். மோக்ஷமடைய வேறு வழியில்லை] என்று வேத₃ங்களில் தலைசிறந்ததான புருஷஸூக்தம் முழங்குகிறது. ப்₃ரஹ்மஜ்ஞாநத்தினாலேயே மோக்ஷம் என்பது அத்₃வைதிகள், த்₃வைதிகள், விஶிஷ்டாத்₃வைதிகள் என்னும் மூன்று வகை வேதா₃ந்திகளும் ஒப்புக்கொண்ட விஷயம். இப்படியிருக்கும்போது வியாதியைத் தவமாக நினைப்பதால் மோக்ஷம் கிடைத்துவிடும் என்று எழுதுவது கைகொட்டி நகைக்கத்தக்கது. ''நானே ப்₃ரஹ்மம்'' என்னும் வேத₃வாக்யார்த்த₂ ஜ்ஞாநத்தினாலேயே மோக்ஷம் ஏற்படும் என்னும் அத்₃வைத ஸித்₃தா₄ந்தத்திற்கும் முரணானது. உபநிஷத் அப்படிக் கூறியிருக்கிறதேயெனில், புருஷஸூக்தம் முதலான வேத₃பா₄க₃ங்களுக்கு முரணில்லாமலே அந்த உபநிஷத்₃வாக்யத்திற்குப் பொருள் கொள்ள வேண்டும். அவ்வுபநிஷத்₃வாக்யத்தில் புருஷஸூக்தத்திற்போலே மோக்ஷத்தைக் குறிக்கும் 'அம்ருத' பத₃மும் இல்லை. ஆகையால் 'மேலான லோகத்தையடைகிறான்' என்றது 'ப்ராக்ருதலோகங்களில் மேலான ஒரு லோகத்தையடைகிறான்' என்றதாகவே ஆகும். அதுவும் பரமாத்மாவைக் குறித்துச் செய்யப்படும் தவமே தனக்கு வந்திருக்கும் வியாதி என்று நினைப்பவனுக்கே கிடைக்கும்.

*98. 9—3—80 கல்கியில் ''(விஞ்ஞானிகள்) 'அணுவுக்குள் புகுந்து பார்த்தால் எல்லா வஸ்துவும் ஒன்று தான். (அத்வைதம் தான்). ஏன் இப்படி வேறு வேறு வஸ்துக்களாகத் தெரிகிறது*

என்றல், அந்த ஒரே சக்தியில் தோன்றுகிற வெவ்வேறு விதமான Vibration களால் தான் (அதிர்வுகளால்தான்)' என்கிருர்கள்'' என்று காமகோடி பீடாதிபதியின் கட்டுரை கூறுகின்றது. விஞ்ஞானம் அத்வைதத்திற்குச் சாதகமாகுமா?

''ஒரே பொருளான மூலப்ரக்ருதியிலிருந்து இப்போது நாம் காணும் அசேதநப் பொருள்கள் அனைத்தும் தோன்றின'' என்று எல்லா சாஸ்த்ரங்களும் கூறுகின்றன. ஜடப் பொருள்களைப் பற்றிய விஞ்ஞான உண்மை இதையே நிருபிக்கிறது. ''ஜடப்பொருள்கள் எல்லாம் பொய்; அறிவு ஒன்றே உண்மை'' என்று கூறும் அத்வைதத்திற்கு விஞ்ஞானம் எப்படி ஸாதகமாக முடியும்? விஞ்ஞானம் ஜடப்பொருள்களைப் பொய்யாகக் கூறவுமில்லை; அறிவைக் கண்டுபிடிக்கவுமில்லை. ஆகையால், விஞ்ஞானம் அத்வைதத்திற்கு முரணேயொழிய ஸாதகமில்லை. பீடாதிபதியின் கட்டுரைகள் அவருக்கு விஞ்ஞானமும் சரியாகத்தெரியாது; அத்வைதத்தையும் அவர் முறையாகக் கற்கவில்லை என்றே காட்டுகின்றன. ச்ருங்கேரி பீடாதிபதியைப் போன்ற அத்வைதம் வல்லவர்களின் தலைமையில், அத்வைதமும் விஞ்ஞானமும் அறிந்தவர்கள் கூடிச் சர்ச்சை செய்தால் இவ்வுண்மை உலகிற்கு விளங்கும். ஆனல் 'நமக்கு எதற்கு வம்பு' என்று ஒருவரும் இதை ஆராய முன் வரமாட்டார்கள். நாம் பீடாதிபதிகளைப் பற்றி நமது பதில்களில் எழுதியிருக்கும் விஷயங்களை எந்தப் பண்டிதஸதஸ்ஸிலும் நிருபிக்கத் தயாராகயிருக்கிறோம். ஆனல் ஆள் பலத்தாலும், பத்திரிகை பலத்தாலும் 'நடமாடும்தெய்வம்' என்று பெயர் பெற்றபீடாதிபதி பண்டிதஸதஸ்ஸைக் கூட்ட முன்வரமாட்டார்.

W. S. ராமாநுஜம், பாண்டிச்சேரி.

99. சமீபத்தில் காலஞ்சென்ற பாண்டிச்சேரி சைவப்பிரமுகரும், வரலாற்று ஆராய்ச்சிப் புலவருமான திருமுடி ந. சேதுராமன் அவர்களைப் பற்றிய ''வரலாற்றுக் களஞ்சியம்'' என்னும் நூல் பாகூர் புலவர் சு. குப்புசாமி அவர்களால் எழுதப் பெற்று ''சேகர் பதிப்பகம், 66,பெரியார் தெரு, எம்.ஜி.ஆர். நகர். சென்னை-600083'' என்னும் பதிப்பகத்தாரால் ரூ 8 விலையில் வெளியிடப்பட்டுள்ளது. திருமுடிச் சேதுராமனர் ஆறு

*படை வீடுகளைப் பற்றி நடுநிலைநின்று கூறியிருக்கும் உண்மையை— திருவையாறு அரசர் கல்லூரி முதல்வர் திரு தி. வெ. கோபாலய்யர் அவர்கள் இந்நூலில் தம் கட்டுரையில் வெளியிட்டிருப்பதைச் சமயவுலகிற்கு எடுத்துக்காட்டி, உண்மையை நிலைநாட்ட வேண்டுகிறேன்.*

'திருமுருகாற்றுப் படையில் குறிப்பிடப்படும் திருவேரகம் சுவாமி மலையன்று: மலையாள நாட்டில் இன்றும் முருகன் வழிபடப்படும் மலைநாட்டு ஊராக அஃது உள்ளது என்பதனை நன்கு விளக்கிக் காட்டிப் பழமுதிர்சோலைமலை என்ற தொடரும் பொதுவாக மலைகளைக் குறிக்கும் தொடரேயன்றித் தனிப்பட்ட முறையில் சோலைமலை எனப்படும் திருமாலிருஞ்சோலைமலையைக் குறிப்பிடுவதன்று என்பதனை விளக்கியதோடு, அறுபடைவீடு என்பது ஆற்றுப்படைவீடு என்பதனைப் பிறழ உணர்ந்ததன் விளைவே என்பதனையும் ஒரு நாள் விளக்கிக் கூறியவர் நம் அண்ணலார்.' [பக்கம் 103]

என்று திருமுடிச் சேதுராமனுர், "ஆற்றுப்படைவீடு என்பதே பிற்காலத்தில் ஆறுபடைவீடு என்று தவருக உணரப்பட்டு, உண்மையில் ஒருபடைவீடு அல்லாத பழமுதிர்சோலைமலையைத் திருமாலிருஞ்சோலைமலையே என்று சைவர்கள் அடம்பிடிக்கும்படி செய்துவிட்டது" என்பதையும், "உண்மையில் திருமுருகாற்றுப்படையில் ஐந்து படை வீடுகளே குறிப்பிடப்பட்டுள்ளன. திருவேரகம் என்பது ஸ்வாமிமலையே என்று இன்றுள்ள சைவர்கள் கூறுவது தவறு" என்பதையும் நடுநிலைநின்று வெளிப்படுத்தியிருப்பதும், அதை திரு வெ. கோபாலய்யர் அவர்கள் இந்நூலிலுள்ள தம் கட்டுரையில் காட்டியிருப்பதும் மிகவும் பாராட்டத்தக்கது. இத்தகைய நடுநிலையாளர்கள் சமயத்துறையில் வளர்ந்தால்தான் சமயத்துறையில் ஆக்ரமிப்புகள் நீங்கி, உண்மையான சமரசம் ஏற்படும்.

D. முத்து. உய்யக்கொண்டான்திருமலை

*100. நீடாமங்கலம் கிருஷ்ணமூர்த்தி பாகவதர் ஸ்ரீரங்கம் உபந்யாஸத்தில் — அநசூயை மும்மூர்த்திகளையும் குழந்தைகளாக்கி, திருமாலுக்கு முகுந்தன், சிவனுக்குப் பேயன், ப்ரஹ்மாவுக்குப் பூவன் என்று பெயரிட்டு வளர்த்துவந்தபோது, மும்மூர்த்திகளையும் காணுது தவித்த தேவர்கள் அநசூயை அகத்துக்குத் தேடிவர, மும்மூர்த்திகளும் ஒவ்வோர் வாழைமரத்தில் ஒளிந்து*

*கொண்டனர். அப்போது அநசூயை அவரவர்களுக்கு இட்ட பெயரைச் சொல்லி அழைத்து தேவர்களுடன் அனுப்பினாள். அதுமுதல் முகுந்தன் ஒளிந்த வாழை மொந்தன். பேயன் ஒளிந்த வாழை பேயன், பூவன் ஒளிந்த வாழை பூவன் எனவும் வாழைப் பழங்களின் பெயர் ஏற்பட்டதாகச் சொன்னார். ரஸ்தாளி, பச்சைவாழை, கர்ப்பூரவல்லி இப்படி அனேக வாழை ரகங்களில் எந்தெந்த மூர்த்திகள் ஒளிந்திருப்பார்கள், எப்படிப் பெயர் வந்திருக்கும் என விளக்கவேண்டுகிறேன்.*

இன்றுள்ள உபந்யாஸகர்களில் பெரும்பாலானவர்கள் ஜனங்களைத் திருப்தி செய்து, பணம் சம்பாதிப்பதற்காக எந்த ஆதா$_4$ரமும் இல்லாத கற்பனைக் கைச்சரக்குகளைச் சேர்த்துச் சொல்கிறார்கள் என்பதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு. 'முகுந்த$_3$ன்' என்பது வடமொழிப் பெயர். அதற்கும் மொந்தன் வாழைக்கும் எத்தொடர்புமில்லை. ஸஹஸ்ரநாம பா$_4$ஷ்யம் முதலானவற்றில் ஆதி$_3$சங்கரர் முதலான பா$_4$ஷ்யகாரர்களாலே 'மு' என்னும் ஶப்$_3$த$_3$த்தினால் சொல்லப்படும் முக்திபோ$_4$க$_3$த்தையும், 'கு' என்னும் ஶப்$_3$த$_3$த்தினால் சொல்லப்படும் பூ$_4$மியிலுள்ள போ$_4$கங்களையும் தன் அடியார்களுக்கு அளிப்பவன் என்று முகுந்த$_3$ நாமத்திற்குப் பொருளுரைக்கப்பட்டுள்ளது. அதை மொந்தனாக்கியிருப்பது கைகொட்டி நகைக்கத்தக்கது. மொத்தமான வாழைக்காய்களைக் கொடுக்கும் வாழை மொந்தன் வாழை என்றும், அதி$_4$கமான பூக்களைக் கொடுக்கும் வாழை பூவன் வாழை என்றும், பேய் போல் தோற்றமளிக்கும் வாழை பேயன் வாழை என்றும் பெயர் ஏற்பட்டிருக்கக் கூடும். பேய்களோடு சுடுகாட்டில் நடமாடுபவனாகையாலே சிவனுக்குப் பேயன் என்றும், நாராயணனுடைய உந்தித் தாமரைப் பூவிலே பிறந்தவனாகையாலே பிரமனுக்குப் பூவன் என்றும் தமிழில் பெயர்கள் ஏற்பட்டுள்ளன. இந்தப் பெயர்களிலிருந்து விளங்கும் விஷ்ணுவின் பரத்வத்தையும், பிரம ருத்திரர்களின் தாழ்வையும் மறைப்பதற்காகவே பா$_4$க$_3$வதர் பொய்க்கதை கட்டியிருக்கிறார் என்று விளங்குகிறது. ரஸ்தாளி முதலிய வாழைகளுக்கும் பெயர் ஏற்பட்டதற்கு இப்படிப் பொய்க் கதைகள் உண்டா என்று பா$_4$க$_3$வதரையே கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்.

R. தநுஷ்கோடிராமாநுஜதாஸர், தேவநல்லூர், நாங்குநேரி Tk.

*101. "கரியமேனி மிசை வெளியநீறு சிறிதேயிடும் பெரிய கோலத் தடங்கண்ணன்" [திருவாய் 4-5-6] என்னும் நம்மாழ்வாருடைய பாசுரத்தைக்கொண்டு 'கண்ணன் பஸ்மம் இடுகிறவன்' என்று சில சைவர்கள் தர்க்கம் செய்கிறார்கள் உண்மையை விளக்கவேண்டுகிறேன்.*

'நீறு' என்பது எந்தப் பொடியையும் குறிக்கும். பஸ்மத்தையே குறிக்கும் என்னும் நிர்ப்பந்தமில்லை. "மாயன் தமரடி நீறுகொண்டு அணியமுயலின்" [திருவாய் 4-6-6] என்னும் பாசுரத்தில் 'தமரடிநீறு' என்று தொண்டர் அடிப்பொடியை (பக்த ஸ்ரீபாததூளியை)க் குறித்திருப்பது காண்க. 'கரியமேனிமிசை' என்னும் பாசுரத்தில் ஆழ்வார் வெறும் நீறு என்று சொல்லவில்லை. 'வெளியநீறு' என்று விசேஷித்திருக்கிறார். 'வெளியம்' என்றால் கண்ணுக்கு இடும் அஞ்ஜனத்தைக் குறிக்கும். ஆகையால் வெளியநீறு என்றது அஞ்ஜனப்பொடியைக் குறிக்கும். 'சிறிதே இடும் பெரியகோலத் தடங்கண்ணன்' என்று அடுத்தபடி வருவதால் "கரியமேனி மிசை — திருக்கண்களின் கருவிழியினுடைய கறுத்த நிறத்தின் மேலே, வெளியநீறு — அஞ்ஜன சூர்ணத்தை. சிறிதே இடும்—மங்களத்திற்காகச் சிறிது இடும், பெரியகோலத் தடங்கண்ணன் — ஒப்பற்ற அழகுடைய பரந்த கண்களை உடையவன்" என்பதே இதற்குப்பொருந்தியபொருள். இதில் 'கரியமேனி' என்பது கண்ணிலுள்ள கருவிழியைக் குறிக்கிறது. மேலே கண்ணைப்பற்றிப் பேசுவதிருக்கையால். கரியமேனி என்பது எம்பெருமானுடைய திருமேனியையே குறித்தாலும் 'கரியமேனி மிசை வெளியநீறு சிறிதே இடும்' என்றது எம்பெருமானுடைய கறுத்த திருமேனியின் மேலே அலங்காரத்திற்காக வெள்ளைநிறமுடைய பச்சைக்கர்ப்பூரப்பொடியை அளவோடு சாத்தியிருக்கிறான் என்றே தேறும். பூர்வாசார்யர்கள் காலத்தில் ஒரு தமிழ்ப்புலவர் "கரி—குவலயாபீடமாகிற யானை, அ(ம்)மேனி மிசை — கண்ணபிரான் திருமேனியின் மேலே, வெளிய—கோபித்து எதிர்த்துவர, நீறுசிறிதே இடும்—அதை ரைவில் பொடியாக்கி அழித்தான் கண்ணன்" என்று பொருள் கொண்டதாக நம்பிள்ளை அருளியிருக்கிறார். இப்படி உண்மைக்கு முரணில்லாமல் பொருள்கொள்ள இடமிருக்கும்போது, அபிமானத்தாலே சைவர்கள் அடம் பிடித்தால் அவர்களை நாம் அலட்சியப்படுத்துவதே நல்லது.

**மூன்றாவது சதகம் முற்றிற்று.**